போகஞ்செய் பூமியினும் போய்ப்பிறப்பர் யாமொருநா
‡ ளாடுது மென்ற வணியிழைக்கவ் வாயிழையாள்
§ பீடன் றெனவிருந்த பின்னரே நீடிய
௬௫ காவலன் போலுங் கடைத்தலையான் வந்துநங்
கோவல னென்றாளோர் குற்றிளையாள்

கோவலனும்
பாடமை சேக்கையுட் புக்குத்தன்

பைந்தொடி
வாடிய மேனி வருத்தங்கண் || டியாவுஞ்
சலம்புணர் கொள்கைச் சலதியொ டாடிக்
௭௰ குலந்தரு வான்பொருட் குன்றந் தொலைந்த
[1] இலம்பாடு நாணுத் தருமெனக் கென்ன

---

௫௮ - ௯.
சோமகுண்டமும் சூரியகுண்டமுமென்னும் பேரையுடையன ; முற்று.

௫௫ - ௬௬. முற்பிறப்பிற் கணவன்காரணமாக ஒருநோன்பு தப்பினாய் ; அதற்குப் பரிகாரமாவது இந்தக்குண்டம் படிந்தாடிக் கோட்டந்தொழுதல் ; தொழுவார் கணவரொடுகூடி இன்புறுவரென்றுசொல்ல, கண்ணகியும்.

௬௪. பீடன்றெனவிருந்த
யன்றென இருந்தகாலை.

பின்னர் - குலத்திற்பிறந்தார்க்குப் பெருமை

கூரு - சு. காவலன்போலுங் கோவலன்

கடையிடத்தானென்று மாறி யுரைக்க; அன்றித் தூரத்தே பார்த்து ஐயுற்று நங்காவலன்போலுமென்று அவன் அணுகினவிடத்து ஐயந்தீர்ந்து கோவலனென்றுரைனினுமாம்; கோவலன்வந்து நங்கடைத்தலையான்; அவன்றான் நெடுங்காலம் நம்மை நீங்காக் குறிப்பினையுடையனென்றுரைனினுமமையும்.

கூகூ - எ. சிலதிகூறுதலும் கோவலன் உட்புகுந்து.

(சு) கொடியிடையார்தாம் கோலங்கொள்ளாநிற்க, அக்காலத்தே (கூகூ) கோவலன் (கூஎ) பாடமைசேக்கையுட்புக்கென்க.

கூகூ. சலம் - பொய். சலதி - பொய்ச்சி.

ஆடி - அனுபவித்து.

எ0. குலந்தருவான்பொருள் - தாயத்தாரால் தரப்பட்டபொருள்.

எக. இலம்பாடு - வறுமை.

---

[1] தொல். புள்ளி. சூ. உக - ந; சொல். உரிச். சூ. கூஉ - ந; இ - வி. சூ. சஉக, உஅக - உரை, மேற்.

* (பி - ம்.) 'குணடத்துறை' † 'கணவனெடு'
§ 'பீடன்றெனவுரைத்தபின்னரே' || 'யாதும்'

‡ 'ஆதேதுமோவென்ற'



நலங்கேழ் முறுவ னகைமுகங் காட்டிச்
* சிலம்புள கொண்மெனச் சேயிழை கேளிச்
சிலம்பு முதலாகச் சென்ற கலனே

எடு † டுலந்தபொரு ளீட்டுத லுற்றேன்
மலர்ந்தசீர்

மாட மதுரை யகத்துச்சென் றென்னேடிங்
கேடலர் கோதா ‡ யெழுகென்று நீடி
வினைகடைக் கூட்ட வியங் § கொண்டான்
கங்குற்

கனைசுடர் கால்சியா முன்.

---

வெண்பா.

காதலி கண்ட கனவு கருநெடுங்கண்
மாதவிதன் சொல்லை || வறிதாக்க—மூதை
வினைகடைக் கூட்ட வியங் ¶ கொண்டான் கங்குற்
கனைசுடர் கால்சீயா முன்.

---

எஉ. நகை - ஒளி.

எசு. சிலம்பு முதலாகவென்றான்; வாணிகஞ்செய்வதற்கு; முதலீடென்ப ராகலான். சென்ற கலன் - முன்பு வாங்கியழித்த ஆபரணம்.

எரு. உலந்தபொருள் - கெட்டபொருள்.

(எசு) மதுரையிடத்துச்சென்று (எரு) ஈட்டுதலுற்றேனென்க.

எஎ. நீடி - நெடுங்காலநின்று.

எஅ. வியங்கொண்டான் - வினையினது ஏவலைக் கொண்டான்.

எஎ - அ. எழுகென்று வியங்கொண்டானென்க.

எஅ - கூ. கஙகுலே இடத்துநின் றும்

சுடர் போக்குவதன் முன்னெனக ;
 என்றது, இருளிலேபோதல்பற்றி.

"காதலிகண்ட" மாதவிதன்சொல்லே

வறிதாக்கவென்றது, வேனிற்காதை யிற் [1] 'காலேகாண்குவம்'
என்றவார்த்தையை. மூன்றை மூன்தையாயிற்று.

---

[1] சிலப்பதிகாரம், அ: கககூ.
(பி - ம்.) * சிலம்புகொண் டோவெனச் சேயிழைகே
ளிந்தச் சிலம்பு' † உலந்த
பெரும்பொருளீட்டுற்றேன்' ‡ 'எழுகென்னமூதை' § 'கொண்டார்' || 'வறிதாக்கி' ¶ 'கொண்டார்'



க - சு. அகனகர்........தாங்கொள்ள

(இ - ள்.) கொடியிடையார், அகன்ற மனையிடமெங்கும் கதிரோன்மறைந்த மாலைக்காலத்தே அரும்பு புரிநெகிழ்ந்த முல்லையின் து ஒளிமலரை நெல்லோடே தூவி இல்லுறைதெய்வத்தை வணங்கி மாணிக்கவிளக்கை மைவிளக்கோடே

எடுத்து அம்மாலைக்காலத்தே இராப்பொழுதைக்கு ஆம்படி கொழுநர்மார்பைத் தமது முலையாற் பொருந்துதற்கேற்ற கோலங்களைக் கொள்ளாநிற்பவென்க.

என்றது, மகரக்குழைமுதலிய மணியும் பூணும் மதாணியுமுதலிய அணியும் இரட்டையங்கண்ணி பிணையன்முதலிய பணியுங்களைந்து நொய்யனவே புனைந்தும் பூண்டும் முடித்துஞ்செய்தல். அகனகர் - பட்டினப்பாக்கமெனினுமமையும். நிகர் - ஒளி; [1] "நீர்வார் நிகர்மலர் கடுப்ப" என்றார் **கதையினும்**. பகல், ஆகுபெயர். மாய்தல் - மறைதல்; [2] "களிறுமாய்க்குங் கதிர்க்கழனி" என்றாற்போல. மணிவிளக்கம், உம்மைத்தொகை; இருபெயர்க்கண்வந்தது; மணி - அழகுமாம். கோலம் - ஒப்பனை; தமது கொழுநரோடெதிர்க்கும் போர்க்கோலமுமாயிற்று. தாம் - அங்ஙனம் தூவியமகளிர்தாம். [3] "நெல்லு மலருந் தூஉய்க் கைதொழுது, மல்ல லாவண மாலை யயர" என்றார் **நெடுநல்வாடை**யினும்.

சா - சூ. மேலோர்நாள்...........பாலகன் றன்சோர

(இ - ள்.) முன்னொருநாளிலே மாலதியென்பாள் ஒருபார்ப்பனி தனது மாற்றாள் குழவிக்குத் தன்முலைசுரந்தபாலைச் சங்காலூட்ட அப்பால் விக்குதலாலே தன் கையிலே அக்குழவி மரிக்கவென்க.

பால் - ஆன்பாலுமாம். பாலகனென்பது காலவழக்கு. சோர்தல்-மரித்தல்.

சூ - அ. மாலதியும்...........மகக்கொண்டு

(இ - ள்.) அங்ஙனம் பாலகன் மரித்தலானே, அம்மாலதியும் பார்ப்பானோடு அவன்மனைவியும் என்மேல் அடாப்பழிகூறுதலொழித்து ஏற்பனகூறாராதலால் இதற்கு என்செய்கேனென்றேங்கி அம்மகவைக்கொண்டென்க.

உம்மை, இழிவுசிறப்பு. ஓடு, எண்ணொடு.

ஒழிந்து.

படாதன - அடாதன. விட்டு-

௯.

அமரர்தருக்கோட்டம்—(இ - ள்.) தேவர்தரு நிற்குங்கோயில்,
வெள்யானைக்கோட்டம்—(இ - ள்.) ஐராவதநிற்குங்கோயில்,

௰. புகர்வெள்ளைநாகர்தங் கோட்டம்—(இ - ள்.) அழகினையுடைய
பலதேவர்கோயில்,

புகர் - அழகு. வெள்ளைநாகர் - பலதேவர்.

---

[1] இந்தவாக்கியம், அகநானூறு, ௧௧ - ஆம் பாட்டில் ௧௨ - ஆம் அடியாகவும் காணப்படுகின்றது.

[2] மதுரைக்காஞ்சி, ௨௪௭. [3] நெடுநல்வாடை, ௪௩ - ௪.



௰ - ௧௧. பகல்வாயிலுச்சிக்கிழான்கோட்டம்— (இ - ள்.) கீழ்த்திசையிற்றோற்றுகின்ற சூரியன்கோயில்,

பகல்வாயில் - பகற்றோற்றுகிறவாயில்; ஆவது கீழ்த்திசை.

உச்சிக்கிழான்- பகற்பொழுதிற்குரியோன்;

இனிப் பகற்பொழுதிற்கு வருவாயாயுள்ளவனென்று மாம்;

சூரியன்கோயிலென்றபடி.

கக. ஊர்க்கோட்டம்—(இ - ள்.)

கோயில்,

இறைவனாராகிய கைலாயநிற்குங்

வேற்கோட்டம்—(இ - ள்.) முருகவேள்நிற்குங்கோயில்,

வேல், ஆகுபெயர்.

கஉ. வச்சிரக் கோட்டம்—(இ - ள்.)

வச்சிரப்படைநிற்குங்கோயில்,

[1] புறம்பணையான் வாழ்கோட்டம்—(இ-ள்.)

சாதவாகனன்கோயில்;

புறம்பு அணைந்தவிடம் புறம்பணையாயிற்று; [2]

மோசை" என்றார் சிந்தாமணியினும்.

"புறம்பணை யியம்பு

கரு. நிக்கந்தக் கோட்டம்—(இ - ள்.)

அருகன் கோயில்,

என்னை? "துக்கந் துடைக்குந் துகளறு காட்சிய, நிக்கந்த வேடத் திருடி கணங்களை, யொக்க வடிவீழ்ந் துலகியல் செய்தபி, னக்கதை யாழ்கொண் டமை வரப் பண்ணி" என்றார் வளையாபதியினும்.

நிலாக்கோட்டம்—(இ - ள்.) சந்திரன்கோயில்,

இவை செவ்வெண்.

புக்கெங்கும்—(இ - ள்.) இக்கூறிய கோயில்களெங்கும்புகுந்து,

கச - ௫. தேவிர்காள்.. ...... .பாடு

கிடந்தாளுக்கு

(இ - ள்.) இங்ஙனம் எங்கும்புக்கவள், தெய்வங்களே! எமது மிக்க இந்நோயைத் தீர்மினென்று இரப்பவும் ஒருவரும் தீராமையின் ஆண்டுப் பொருந்தாது போந்து ஈண்டுச்சாத்தனிடத்தேபொருந்தி அவன்பால் வரங்கிடந்தாளையென்க.

தேவும் தெய்வத்திற்கொருபெயர்; [3] "தேவாதி தேவ னவன்சேவடி" என்றாராகலின். தேவிர்: இர் முன்னிலைப்பன்மை. தீர்மென்று, ஈற்றுமிசையுகரம் கெட்டது. [4] பாசண்டம் - தொண்ணூற்றறுவகைச் சமய சாத்திரத்தருக்கக் கோவை; என்னை? "பண்ணாற் றிறத்திற் பழுதின்றி மேம்பட்ட, தொண்ணூற்

[1] "குமிப் பருவத்தே கோதை புனைந்த, இடுமுத்தப் பூத னிருப்பப்-படுமுத்தம், புன்னை யரும்பும் புகாஅர்ப் புறம்பணையாய்க், கென்ன முறைய ளிவள்" என்னும் பழஞ் செய்யுளின்பொருள் (தொல். செய். சூ. ககஅ - உரை, மேற்.) ஈண்டு அறியற்பாலது.

[2] சீவகசிந்தாமணி, அகு.   [3] சீவகசிந்தாமணி, க.

[4] "பாசண்டத் துறைபு மிவற்றுட் பலவாம், பேசிற் றொண்ணூற் றறுவகைப் பகுமே" திவாகரம், கஉ - வது.



றறுவகைக் கோவையும் வல்லவன், விண்ணு றியங்கும் விறலவ ராயினுங், கண்ணுறி நோக்கிக் கடுங்கை செய்வான்" என்றார் வளையாபதியினுமாகலின் இவற்றிற்குமுதலாயுள்ள சாத்திரங்களைப் பயின்றவனுதலின், * மகாசாத்திர னென்பது அவற்குப் பெயராயிற்று. சாத்தற்கு, உருபுமயக்கம்; இது, [1] "மணற் கீன்ற" என்றாற்போலநின்றது. கிடந்தாளுக்கு - கிடந்தாளை; இயல்புமாம்.

இப்பொருட்கு ஆகிலாயென்றுசொல்லியென ஒருசொல் வருவிக்க.

கசு - உஉ. ஏசும்படியோர்..........மகவை

(இ - ள்.) சுடுகாட்டுக்கோட்டத்து இடுபிணந்தின்னும் இடாகினிப்பேய் ஏசும்படி ஓரிளங்கொடியாய்த் தூங்கிருளிற்சென்று

அங்குப் பாடுகிடந்தாளை
நோக்கி ஒன்றினும் குற்றமற்றவளே, கேளாய்;
முற்பவத்தில் தவஞ்செய்யா
தோர்க்குத் தேவரும் வரங்கொடார்; அது பொய்யன்று;
மெய்யெனச்சொல்லி
அங்ஙனம்பட்ட நின் பிள்ளைப்பிணத்தைப்பார்க்கத்
தந்துகாணெனச்சொல்ல
நின்று பறித்து அவள்வாங்கி மடியகத்திட்டாளென்க.

ஏசல் - பழித்தல். படி - வடிவு. பிறரைப்பழிக்கும் வடிவையுடையதொரு பெண்வடிவுமாம். சுடுகாட்டுக்கோட்டம் - [2] சக்கரவாளக்கோட்டம். துங்கிருள்-
செறிந்தவிருள்; யாவரும் துஞ்சுமிருளுமாம். இடுபிணம்
- குழியிலிடுபிணம்.
மடி - வயிறு; [3] "படியை மடியகத் திட்டான்"
என்பதனுமுணர்க. மடி
யகத்திட்டாள் - விழுங்கினள். மக, [4] "குழவியு மகவு
மாயிரண் டல்லவை,
கிழவ வல்ல மக்கட் கண்ணே" என்பதனாற் கூறப்பட்டது
; பாலகனென்பது
காலவழக்கு.

உ௨ - அ. இடியுண்ட..............தையலாள்
(இ - ள்.) இடிக்குரல்கேட்ட மயில் அகவுமாபோல
ஏங்கியழுகின்ற தைய
லாளுக்கு அச்சாத்தன் அன்னாய், நீசெல்கின்ற

வழிமுன்னர்ப் பொதும்பரி

டத்து உயிரோடுகிடக்கின்ற குழவியைக்

காண்கின்றிலேயோவென, அவள் அது

செய்ய. ஏங்கி அழுகின்றாய்! அழாதொழியென்று தான்

அக்குழவியாய் அவ்வி டத்துச்சென்று கிடப்ப, அவள்

வஞ்சக்குழவியை ஐயமின்றித் தன்குழவி

யென்றெடுத்து வயிற்றிலே அணைத்துக் கொடுபோய்த்

தாய்கையிற் கொடுத்

தாள்; அங்ஙனம் ஏங்கியழுத அத்தையலாளென்க.

அடிக்கப்பட்டதனை அடியுண்டதென்றாற்போல

யுண்டதென்றார்; உண்டல் - உறுதல்.

இடிக்கப்பட்டதனை இடி

உஅ - ௩உ. தூய..........மேயநாள்

(இ - ள்.) அக்குழவியாய இறையோனும் இருமரபுந்தூயமறையோனுக்குப் பின்செல்லும்பிள்ளையாய் மிக்க கல்விகளையும் அவற்றின் பொருட்கேள்வி

களையுங் கற்றும் தரித்தும்

துறைபோய்த் தந்தைதாயிறந்தபின்னர் அவர்க்கு

---

[1] அகநானூறு, உகஉ.

[2] இது காவிரிப்பூம்பட்டினத்திற்

பண்டைக்காலத்து மயனால் நிருமிக்கப்பட்டது;

இதன்வரலாற்றை மணிமேகலை, ஆறுவது காதையிற்காண்க.

[3] நான்மணிக்கடிகை, கடவுள்வாழ்த்து, உ. [4] தொல்காப்பியம், மரபியல், சூ. உ௩. (பி - ம்.) * 'மகாசாத்தனென்பது.'

நீர்க்கடன் முதலியவுஞ்செய்து தன் தாயத்தாரோடும் [1] வெவ்வழக்குரைத்து எட்டியாண்டு தன் மனைவியோடேகூடி நடந்தபின் ஒருநாளிலென்க.

வான்பொருட்கேள்வி-மறைநூலும் அங்கமும். துறைபோதல் - [2] அதற்குத் தகநிற்றல். மாணியாயெனவே சௌளமும் உபநயனமும், துறைபோயெனவே கல்விகேள்விமுதலிய பிரமசரியங்காத்தலுங்கூறி, மேல், "தேவந்தியென் பாண்மனைவி" என்பதனுன் விவாகமும் காருகத்தமுங் கூறினமையுமுணர்க. இறையோனும்: உம்மை சிறப்பு. வழக்குரைத்தெனவே, தன்மனைவிக்குப் பொருட்குறைபாடில்லாமற்செய்து என்பதாயிற்று. இறையோனும் அவர் மடிந்த பின்னர்க் கடன்கழித்து வழக்குரைத்தென்க. தாயரென்முர் மாலதியையும் கூட்டி. மேயநாள் - மேவியநாள்; இவளைத் தீவலஞ்செய்து [3] நாலீராண்டு கழிந்த பின்னர்; 'மேவினுள்' என்று பாடமோதித் தன்னை மேவினவளென்று பொருளுரைப்பாருமுளர்.

௬௬ - ௬. தேவந்தி யென்பாள்.........நீங்குதலும்

(இ - ள்.) அங்ஙனம் கூடிநடந்த தன்மனைவியாகிய தேவந்தியென்று பெயர்கூறப்படுவாளுடைய பூவின் றன்மை தலைவந்த மையுண்டகண்கள் இதனைப் பொறுப்பனவாகவென நிருமித்துக்கொண்டு பின்பு அவளைமேவித் தனது எக்காலத்தும் முதிராத இளைய அழகினதுநலத்தை வெளிப்படுத்தி அவன் அவள் குறிப்பினையறிந்து அதற்கேற்ப அவட்கு நீ எம்கோட்டத்து வாவெனச்சொல்லிப் பிறர்க்கெல்லாம் தீர்த்தத்துறைபடிவேனென்னச்சொல்லி நீங்கினுனைகவென்க

மக்கள்கண்ணிற்குத் தெய்வயாக்கை காணப்பொருதாகலின் இவள்கட்குப் பொறுக்கக்கடவதென்று நிருமித்துக்கொண்டான்; [4] "அந்தரத் துள்ளோ ரறியா மரபின், வந்து" என இதனுள்ளும், [5] "கரந்துரு வெய்திய கடவு ளாளரும்", [6] "தேவரு மக்களு மொத்துடன் றிரிதரு, நாலேழ் நாளினும்" என மணிமேகலை யுள்ளுங் கூறினமையானுமுணர்க. இனி உண்கணென்பதனை முன்னிலை விளியாக்கி இம்மறையை நீ பொறுக்கவென்று சொல்லிக்காட்டினானெனினு மமையும்.

ருசு - சo. தூமொழி............கொண்டிருப்பாள்

(இ - ள்.) அங்ஙனமாகிய தூமொழி, என்னெஞ்சிற்பிணித்தகணவன் தீர்த்தத்துறைகளெங்கும்போய்த் தீர்த்தமாடிவேனென்று என்னைவிட்டகன்றனன்; மறுத்தும் இவ்விடத்தே அவன் மனத்தைத் திரும்பப்பண்ணி அழைத்துத் தருவாயென்று ஒருபெயரிட்டுக்கொண்டு அவன்கோட்டத்தை வழிபடுதலை நாடோறும் கடனாகக்கொண்டிருக்கின்றவளென்க.

சo - சச. வாட்டருஞ்சீர்.....கணவனோ டென்றாள்

[1] "தோற்பது கொண்டு புகாஅ ரவை" பழமொழி, ச.
[2] திருக்குறள், ருகூக.
[3] சிலப்பதிகாரம், கூo: அகு.
[4] ,, கூ: எஉ - ரு.
[5] மணிமேகலை, க: கமு.
[6] ,, ,, கூசு - எ.

# கூ—கனாத்திறமுரைத்தகாதை.

உருக

(இ - ள்.) நிறைந்த சீருடைய கண்ணகியாகிய நல்லாளுக்குக் கொழுநன் பிரிதலால் உற்றதோர் துன்பமுண்டென்றுநினைந்த நெஞ்சின்வருத்தத்தையுடை

யாளாய்க் கோட்டத்தைநண்ணி அறுகுமுதலியவற்றை

இவள் கணவனைப்பெறல்

வேண்டுமெனத் தூவிப் பின்னர்க் கண்ணகிபாற்சென்று ஆண்டு ஆசிகூறுவாள் கணவனைப் பெறுவாயாகவென்றுளென்க.

இனி, கண்ணகிபானண்ணிச் சென்று தூவிக்

கணவனோடு வாழ்வுபெறுக

வென்றுளெனினுமமையும். வாடு வாட்டெனு விகாரம்;

வாடுதல் - குறைதல்;

குறைதலரியவெனவே நிறைந்தவென்பதாயிற்று; பிறரால்

வாட்டுதலரியவென

வுமாம். இணைதல் இணையாயிற்று; விகாரம். கணவனோடு

- கணவனை.

சஉ - ஙிச.

பெறுகேன்............நகையாகும்

(இ - ள்.) செறிதொடீஇ, நீ இங்ஙனங்கூறுதலாற்

பெறுவேனாயினும் என்

னெஞ்சம் ஐயுறுகின்றதுகாண்; அஃது எற்றாலெனின்,

நெருநற் கங்குற் கனவின்

கண் என்கொழுநன் என்னைக் கைப்பற்றினனாய்ப்போக

யாங்கள் ஒரு பெரிய

பதிக்கட்புக்கோம்; அங்ஙனம்புக்க பதியிடத்தே எங்கட்கு ஏலாததோர் படிற்றுரையை அவ்வூரார் இடுதேளிடுமாறுபோல என்மேலிட்டனர்; அங்ஙனம் அவரிடப்பட்ட அப்படிற்றுக் கோவலற்கு ஓர்

தீங்குற்றதென்று பிறர் சொல்லக்
கேட்டு அதுபொறுது அவ்வூரரசன்முன்னர்,
செல்லாதேன்சென்று வழக்கு
ரையாதேன் வழக்குரைத்தேன்; ஆதலால் அவ்வரசனோடு அவ்வூர்க்கும் உற்ற தோர்தீங்குண்டு; ஆனாலும் அவை தீக்கனுவாதலான் நினக்குரையேன்; இங்ஙனம் தீவினையுற்ற என்னோடு பொருந்திய
மிக்கோனுடனே யான்பெற்ற நற்
றிறங்களை நீகேட்பாயாயின் அது நினக்கு
நகையைத்தருமென்றுசொல்ல
வென்க.

கடுக்கும் - ஐயுறும்; கடியென்னுமுரிச்சொல் ஈறுதிரிந்தது; [1] "போற்றி னரியவை போற்றல் கடுத்தபின், றேற்றுதல் யார்க்கு மரிது" என்றாற்போல. அது, [2] "ஐயமுங் கரிப்பு மாகலு முரித்தே"
என்பதனான்முடிந்தது. கனவினாற்
கடுக்குமெனினுமமையும். இடுதேளிடுதல் - தேளிடப்படுவார் காணுமே தேளல்லாததொன்றை மறையக் கொடுவந்து மேலேயிட்டு அவரைக் கலங்கப்பண்ணுதல்; பாய்ச்சுத்தேளென்பாருமுளர். என்றன்மேல்: தன்,
அசை. என்றன்மே
லென்றாள், பெண்பாற்றன்மையான்; அன்றி இப்பழியைத் தான்சுமந்துநிற்றலானெனினுமமையும். தீங்கென்று அது கேட்டு - தீங்கென்றுசொல்ல அதுகேட்டு;
சொல்லவென ஒருசொல்வருவிக்க. ஒடு, எண்ணொடு; வேறுவினை ஒடுவுமாம்; ஆவது காவலன் மரணமும் ஊர்தீப்பாடும். உம்மை, இறந்ததுதழீஇயவெச்சவும்மை. உரையாடேனென்றாள்; [3] "உரையா ரிழித்தக்க காணிற் கனா" என்பது பழமொழியாகலின். தீக்குற்றம் - கடிதானகுற்றம்; ஆவது முலைதிருகியெறிதல். நற்றிறம் - இருவரும் சுவர்க்கம்புகுதல். நகையாகுமென்றாள், இது கிட்டாததொன்றாகலின். எனவென ஈண்டும் ஒருசொல் வருவிக்க.

---

[1] திருக்குறள், ௬௯௩.

[2] தொல்காப்பியம், உரிச்சொல்லியல், சூ. அக.
[3] பழமொழி, கஅஉ.



ருச - சுச. பொற்றொடீஇ...........பின்னரே

(இ-ள்.) பொற்றொடீஇ,
நீகண்டகனைக்கொண்டு வருந்தவேண்டா; நீ அவனால் வெறுக்கப்பட்டாயுமல்லை; நின்கணவன்காரணமாக ஒருநோன்பு முற்பிறப்பிலே தப்பினாய்; அதனால் உள்ளதீங்குமிக்கன; அத்தீங்கும் கெடுவனவாக; காவிரி தன்னீரைக்கொண்டுசென்று கடலோடெதிர்த்து அலைக்கும் சங்கமுகத் தயலதாகிய பூவினிதழவிழும் நெய்தற்கானலிடத்து இரண்டு தடாகமுள்ளன; அவை யாவையெனிற் [1] சோமகுண்டம் சூரியகுண்டமென்னும் பெயரையுடையன; அவற்றின் துறைகளின்மூழ்கிக் காமவேள்கோட்டத்திற்புக்கு அவனைத் தொழுதாராயின், அவர் இப்பிறப்பிலுள்ள நாளெல்லாம் தம்கணவரோடும் பிரிவின்றியிருந்து இவ்வுலகத்து இன்பமுறுவர்; மறுமைக்கும் போகபூமியிலேயும் போய்ப்பிறந்து கணவரோடும் பிரிவின்றி மூன்றுபல்லங்காலம் இன்பநுகர்வராதலான் அவற்றை யாமும் ஒருஞான்று ஆடக்கடவேமென்று சொன்ன தேவந்திக்குக் கண்ணகி அங்ஙனம் துறைமூழ்கித் [2] தெய்வந்தொழுதல் எங்கட்கு இயல்பன்றென்று சொல்லி இருந்தபின்னாகவென்க.

[3] "காமனை யென்றுஞ் சொல்லார் கணவற்கை தொழுது வாழ்வார்" என்றாராகலின், இங்ஙனங்கூறினள்.

இக்குண்டமிரண்டிற்கும் இவ்வுலகத்தின்புற

லும், போகபூமியிற்பிறத்தலும் நிரனிறையாக்கலுமொன்று; அவற்றை, [4] "இரு காமத்திணையேரி" என்றார் பட்டினப்பாலையிலும்

சுச - சு. நீடிய காவலன்...........குற்றிளையாள்

(இ - ள்.) அங்ஙனஞ்சொல்லி அவரிருக்கின்றவளவிலே குறுந்தொழிலிளையாள் காவலன்போலுங் கோவலன் நீடிய நம்கடையிடத்தானென்றுளென்க.

அன்றித் தூரத்தேபார்த்து ஐயுற்று நம்காவலன்போலுமென்று அவனுழைவிடத்து ஐயந்தீர்ந்து கோவலனென்றுளெனினுமமையும் இனி, நம்கோவலன் வருகின்றவரத்து நம்மை நெடுங்காலம் காப்பான்போலே இராநின்றதென்றுளெனினுமமையும்.

சுசு - ஏக,

கோவலனும்...........தருமெனக்கென்ன

(இ - ள்.) அங்ஙனங் கடைத்தலையானை கோவலனும், [5] கொடியிடையார் தாம் விளக்கங்காட்டிக் கோலங்கொள்ளாநிற்ப, அக்காலத்தேவந்து பெருமையமைந்த சயனத்திடத்தேபுக்கு அவன் தனதுபைந்தொடியுடைய மேனிவாட்டமும் செஞ்சுவருத்தமுங்கண்டு எல்லாப்பொருளிலும் பொய்யை மெய்யாகப்

பொருந்தவித்தொழுகும் பொய்த்தியோடுங்கூடி ஆடிய ஒழுக்கத்தினானே நம் குலத்திலுள்ளார் தேடித்தந்த மிக்க நிதிக்குன்றமெல்லாம் அவள்பொருட்டால் தொலைந்தன ; அதனான் இல்லாமையுண்டாதல் எனக்கு நாணைத்தருகின்றது காணென்னவென்க.

---

[1] இங்கேகூறிய சோமகுண்டமும் சூரியகுண்டமும் முறையே திருவெண்காட்டுள்ள சோமதீர்த்தமும் சூரியதீர்த்தமுமாமென்று சிலபெரியோர் கூறுகின்றனர்.

[2] "தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள், பெய்யெனப்பெய்யுமழை", திருக்குறள், ௫௫.

[3] சீவகசிந்தாமணி, ௨௮௯௪.

[4] பட்டினப்பாலை, ௬௯.

[5] இக்காதை அடி, ௬ - ௭.



பாடு - படுக்கையுமாம். சலம் - பொய். சலதி - பொய்த்தி. ஆடுதல் - உடனாதல். குலந்தருவான்பொருள் - தொன்றுதொட்டுவருகின்றபொருள். இன்று நாணுத்தருமென்றது, 'கெட்டால் மதிதோன்றும்' என்னும்வழக்கு.

## ௭௨ - ௬. நலங்கேழ்............கொண்மென

(இ - ள்.) இவ்வாறு அவன் தன்னைப்போற்றி இல்பாடு நாணுத்தருமென்றதனை மாதவிக்குக்கொடுக்கும் பொருட்குறைபாட்டால் தளர்ந்து கூறினானாகக் கருதி ஒளிபொருந்தியமுகத்தே நலம்பொருந்திய சிறிய முறுவலைவிளைத்து இன்னும் சிலம்பு ஓரிணையுள; அவற்றைக் கொண்மினென்றாளென்க

சிலம்புளவென்றாள், இவையொழிந்த கலனெல்லாம் தொலைதலால். இவை அணியாதிருத்தலின் அவனறியானாகக்கருதினும் அவன் தளர்ச்சிகூறுதலால் தான் இவையுண்மைநினைந்து கூறினாளென்க. புலந்துகூறினாளெனிற் கற்பின் றன்மையன்றாம்.

௭௫ - ௯.

சேயிழை கேள்..........கால்சீயா முன்.

(இ - ள்.) இங்ஙனம் கருதியசேயிழாய்! கேள்;

நீசொன்ன இச்சிலம்பை

நான் வாணிகமுதலாகக்கொண்டு முன்பு

நான்வாங்கியழித்தகலனையும் கெட்ட

பொருளையும் தேடித்தொகுத்தலைத் துணிந்தேன்; அஃது

எவ்விடத்தே சென்

றெனின், விரிந்த புகழையுடைய மதுரையென்னுநகரிடத்தேசென்று; ஆதலால், கோதாய்! அதற்கு நீ இப்பொழுதே இங்குநின்றும் என்னோடு எழுவாயாக வென்று சொல்லி முற்பவத்தில் தான்செய்த தீவினை நெடுங்காலநின்று நெஞ்சை ஒருப்படுத்துதலானே அவ்வினையின்து ஏவலைக்கொண்டான்; எப்பொழுது போதற்கெனிற் கங்குலை அவ்விடத்தினின்றும் சுடர் போக்குவதன்முன்னே யென்க.

சீத்தல் - விளக்குதல். சிலம்புமுதலா..............உற்றேனென்பதற்குக் கலனைச் சிலம்பானும் பொருளை முதலானும் ஈட்டுதலுற்றேனென்றுனெனினு

மமையும.

இது, கனவென்னும் பொருளையேகருதாது மாலதிகதையையும் தேவந்திகதையையும் கலந்துகூறிற்றேனும், உறுப்பழிவின்றி நடந்ததேனும் முந்நான் கடியினிறந்துவருதலான் நெடுவெண்பாட்டாகாது கலிவெண்பாட்டாதலுணர்க.

வெண்பா.

காதலிகண்ட............கால்சீயாமுன்.

இவட்கு மேற்கூட்டமின்மையாற் [1] கருநெடுங்கண்ணென்றார்; கனவு சொல்லை வறிதாக்க வினைகடைக்கூட்ட வியங்கொண்டானென்க. சொல்லைவறி தாக்குதல் - வேனிற்காதையிற் காலைகாண்குவமென்றசொல்லைப் பயனின் றாக்குதல.

## கூ.—கனாத்திறமுரைத்தகாதை முற்றிற்று.

---

[1] சிலப்பதிகாரம், ௫: ௨௩௭.

## பத்தாவது.

# நாடுகாண்காதை.

வான்கண் விழியா வைகறை யாமத்து
மீன்றிகழ் விசும்பின் வெண்மதி நீங்கக்
காரிரு ணின்ற கடைநாட் கங்கு
லூழ்வினை கடைஇ யுள்ளந் துரப்ப
௫. வேழகத் தகரு மெகினக் கவரியுந்

தூமயி ரன்னமுந் துணையெனத் திரியுந்
* தாளொடு குயின்ற தகைசால் சிறப்பி
னீணெடு வாயி னெடுங்கடை கழிந்தாங்
கணிகிள ரரவி னறிதுயி லமர்ந்த

௧0. † மணிவண்ணன் கோட்டம் வலஞ்செயாக் கழிந்து
பணையைந் தோங்கிய பாசிலைப் போதி

---

௧. வான்கண் - ஆதித்தன். விழித்தல் - விளங்குதல்.

௨. வெண்மதி நீங்க - வெண்மதி நீங்கின அளவிலே.

௩. காரிருணின்ற கடைநாள் - காரிருள் கடையிலே நின்றநாள்; அவ்து பூருவபக்கம.

௪. ஊழ்வினை கடாவுதலால் உள்ளந்தன்னைத் துரப்ப; நெஞ்சை ஓட்ட வெனவுமாம்.

வினைசெலுத்தி

௫. ஏழகத்தகர் - மேழகம். எகினமாகிய கவரி.

௭. தாளொடு குயின்ற தகைசால் சிறப்பெனவே தாள்முதலான உறுப் பெல்லாமடங்கின; தாளொடுகுயிற்றுதல் - போர்க்கதவு பண்ணும்போதே தாளோடே பண்ணுதல்.

அ. வாயிலென்றது, ஆகுபெயராற் கதவை.
முதலான தோரணவாயில்.

வாயினெடுங்கடையாவது -

(சு) தனையெனத்(பா)திரிதருமென்றது - இவை ஒன்றேடொன்று இன மல்லவாயினும் பழக்கத்தத்திரியும் (அ) வாயில்.

க0. வலஞ்செயா - வலத்திலேயிட்டு.

கக. மாபோதிக்கு ஐந்துகொம்பாதலாற் பனையைந்தோங்கியவென்றார்.

(பி - ம்.) * 'தாரொடு குயிற்றியதகை' † 'மணிவணன்'

## க0.—நாடுகா

ண்காதை. உநிநி

யணிதிகழ் நீழ லறவோன் றிருமொழி
யந்தர சாரி களறைந்தனர் சாற்று
மிந்திர விகார மேழுடன் * போகிப்
கரு. [1] புலவூண் டுறந்து பொய்யா விரதத்
தவல நீத்தறிந் † தடக்கிய கொள்கை

மெய்வகை யுணர்ந்த விழுமியோர் ‡
குழீஇய
ஐவகை நின்ற வருகத் தானத்துச்
[2] சந்தி யைந்துந் தம்முடன் கூடி
௨௦. வந்து தலைமயங்கிய வான்பெரு
மன்றத்துப்
[3] பொலம்பூம் பிண்டி நலங்கிளர்
கொழுநிழ
னீரணி § விழவினு நெடுந்தேர்
விழவினுஞ்
சாரணர் வரூஉந் ‖ தகுதியுண் டாமென
வுலக நோன்பிக ளொருங்குட னிட்ட

---

கஉ. திருமொழி - தருமம்.

கா. அந்தரசாரிகள் - ஆகாயசாரிகள். அறைந்தனர்
சாற்றல்-ஆகமத்தைச்
சொல்லி விளங்கப் பொருள் சொல்லுதல்.

கச. இந்திரவிகாரம் - இந்திரன் நிருமித்தது.
ஏழுடன்போகி என்றது -

இவர் அன்று கழிந்தபடியாலே அவற்றையடைவே கழிந்துபோயென்றவாறு.

கரு. (பா) புலையூன் - மச்சமாங்கிசம்.

கரு - எ. (பா) விரதத்தோடே அடங்கிய.

கொள்கையையுடைய விழுமி

யோரென்க.

கஅ. ஐவகைநின்ற கோயில் - ஐந்து சந்திக்கும்

ஐந்துகோயிலாய்நின்ற

கோயில்.

கக. சந்தியைந்து - ஐஞ்சந்தி; அவையாவன: பஞ்சபரமேட்டிகள் தெரு.

அவர்:— அருகர், சித்தர், ஆசாரியர்கள், உபாத்தியாயர்கள், சாதுக்கள்.

உ0. இவர்கள் கூடினமன்று.

உஉ. நீரணிவிழவு - திரு அபிடேகவிழவு; அயனம், சங்கிரமம், புதுப்புன

லாட்டெனவுமாம். தேர்விழவு - திருநாள்.

உச. உலகநோன்பிகள் - உலகவழக்கொடு பொருந்தின நோன்பிகள்; அவர்

இல்லறத்தையுடைய சாவகர்.

[1] 'புலவுத்துறந்த நோன்புடையாராகலாற் பொய்கூறார்' தொல். மரபு. சூ. கசு - பேர்.

[2] கக - உ0: "சதுக்கமுஞ்சந்தியும்" முருகு. உஉரு.

[3] சிலப். பதிகம், ௪; உக - ரு=சிலப். கரு: கருஉ - ௪.

(பி - ம்.) * 'போக்கிப் புலவூண் டுறந்த' † 'அடங்கிய' ‡ 'குழீஇலையகை' § 'வீழுவிலும்' ‖ 'தந்தியுண்டாகவிஞலக'



உரு. விலகொளிச் சிலாதலந் தொழுது

வலங்கொண்டு

மலைதலைக் கொண்ட பேர்யாறு போலு
[1] முலக * விடைகழி யொருங்குட னீங்கிக்

கலையி லாளன் காமர் வேனிலொடு
மலய மாருத † மன்னவற் கிறுக்கும்
ரு0. பன்மல ரடுக்கிய நன்மரப் பந்த
[2] ரிலவந் திகையி னெயிற்புறம் போகித்
தாழ்பொழி லுடுத்த தண்பதப் பெருவழிக்

காவிரி வாயிற் ‡ கடைமுகங் கழிந்து
குடதிசைக் கொண்டு கொழும்புனற் காவிரி
௩௫. வடபெருங் கோட்டு மலர்ப்பொழி

னுழைந்து

காவதங் கடந்து § கவுந்திப் பள்ளிப்
பூமரப் பொதும்பர்ப் பொருந்தி யாங்க
ணிறுங்கொடி நுசுப்போ டினைந்தடி வருந்தி
நறும்பல் கூந்தல் குறும்பல வுயிர்த்து

---

(௨௦) இம்மன்றிற் (௨௧) பிண்டிநிழலிலே (௨௪) இட்ட (௨௫) சிலாதல மென்க.

௨௬ - எ. வாயிலுக்குவமம் மலை; தெருவுக்குவமம் யாறு. உலகவிடை

கழி - உலகத்தாரெல்லாரும் போகலான ஊர்வாயில்; இடையே கழிதலால் இடைகழி.

தெருவொழுங்குக்கு

௨௮. கலை - சரீரம்; அன்றிக் காமனென்றவாறுமாம்.

கலையிலாளனென்றது, கலைகளினின்றான்

உக. மன்னவன் - சோழன். இறுக்கும் - இறையிடும்.

௩0. மரப்பந்தர் - சோலை.

உஅ - ௩க. காமன் வேனிற்காலத்தையும் தென்றலையும் சோழனுக்குத் திறையிடும் பொழிலையுடைய எயில்; இலவந்திகை - நீராவி; எயில் - சுற்று மதில்; சோலையையும் பொய்கையையுமுடைய எயில்.

௩உ. தண்பதப்பெருவழி - புனலாட்டுக்குப்போம் பெருவழி; திருமஞ்சனப்பெருவழியுமாம்.

௩௩. காவிரிக்கரையிடத்து வாயில்.

௩௪. குடதிசைக்கொண்டு - மேற்கு நோக்கி.

௩௫. வடபெருங்கோடு - வடகரை.

௩௬ - எ. கவுந்தியடிகள் பள்ளியையுடைய காவிற்பொருந்தி.

---

[1] உலகவிடைகழி: புறநா. கஎ௫.

[2] இலவந்திகை: சிலப். கச : எ௬ - அஉ அடியார். விசேடவுரையைப்பார்க்க.

(பி - ம்.) * 'இடைகழிஇயொருங்கு' † 'மன்னவர்க்கு' ‡ 'கடை முகங்குறுகிக்குடதிசைக்கொண்ட' § 'கவுந்தியன்னியோர் பூமரப்'

# க0.—நாடுகாண் காதை.

உ௫ள

௪0. முதிராக் * கிளவியின் முள்ளெயி றிலங்க
மதுரை மூதூர் யாதென வினவ

வாறைங் காதநம் மகனுட் டும்பர்
நாறைங் கூந்த னணித்தென நக்குத்
தேமொழி தன்னொடுஞ் சிறையகத் திருந்த
௪௫. † காவுந்தி யையையைக் கண்டடி தொழலு
முருவுங் குலனு முயர்பே ரொழுக்கமும்
பெருமகன் றிருமொழி பிறழா நோன்பு
முண்டயீ ரென்னோ வுறுக ணாளிற்
கடைகழிந் திங்ஙனங் கருதிய வாறென
௫0. வுரையாட் டில்லை ‡ யுறுதவத் தீர்யான்
மதுரை மூதூர்
வரைபொருள் வேட்கையேன்
பாடகச் சீறடி பரற்பகை யுழவா
காடிடை யிட்ட நாடுநீர் கழிதற்
கரிதிவள் செவ்வி யறிகுநர் யாரோ

௪௨. ஆறைங்காதம் - முப்பதுகாதம்;
ஆறைங்காதமென்றான், அவட்கு
அறுகாதம் ஐங்காதமென்றாற்போலத் தோன்ற.

சஙு. கூந்தல், பெயர். நக்கு - நகைத்து; நகுதல்

சோக கருணதசை

தொக்கதாற்பிறந்த விகாரம்.

சச. சிறையகம் - ஸ்ரீகோயிலின்

ஒருபக்கத்தே பள்ளியகம்.

சஎ. பெருமகன் - அருகதேவன்.

சஅ. உறுகணுளரின் - துன்பமுறும்

பாவமுடையார்போல; மிடியாள

ரைப்போலவென்றுமாம்.

சகூ. கடைகழிந்து - வாசலைவிட்டு.

ருo.

உரையாட்டில்லை - சொல்லாவதொன்றில்லை; ஒன்று - ஒருவாசகம்.

ருக. மூதூர்க்கண்ணே பொருளீட்டும் வேட்கையேன்;

பொருள்வரைதல்

வேட்கையென்க; வரைதல் - தன்னிடத்து ஆக்குதல்;

டது தானத்துக்கேயென்று வரைந்திடுதலுமாம்.

இன்னதற்கு மேற்பட்

மேற் கவுந்தியடிகள் வார்த்தை :—

ருஉ. பரற்பகை உழக்கமாட்டா. ருங. காடும் நாடுமாகிய வழிகடக்க. ருச. அரிதிவள் செவ்வியென்றது - இவள் செவ்வியின் மென்மையால் நடக்குந்தன்மையிலளென்றதாம். அறிகுநர்யாரோ-வல்லளாகவுமடுக்குமன்றே.

(பி - ம்.) * 'ளைவிமுள்ளெயிறு' † 'காவுந்திகையைக்கண்டு' ‡ 'உயர்தவத்தீர்'

ருரு



ருரு. வுரிய தன்றீங் கொழிகென வொழியீர்
[1] மறவுரை நீத்த மாசறு * கேள்விய
ரறவுரை கேட்டாங் கறிவனை யேத்தத்
தென்றமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரைக்
கொன்றிய வுள்ள முடையே † னாகலிற்
சுo. போதுவல் யானும் போதுமி னென்ற
காவுந்தி யையையைக் கைதொழு தேத்தி
யடிக ணீரே யருளுதி ராயினித்
தொடிவளைத் தோளி துயர்தீர்த் தேனெனக்

கோவலன் காணுய் கொண்ட விந்நெறிக்
கூரு. கேதந் தருவன யாங்கும்பல கேண்மோ
வெயினிறம் பொருஅ மெல்லியற்
கொண்டு.
பயில்பூந் தண்டலைப் ‡ படர்குவ மெனினே
* மண்பக வீழ்ந்த கிழங்ககழ் குழியைச்
சண்பக நிறைத்த § தாதுசோர் பொங்கர்
எ0. பொய்யறைப் படுத்துப் போற்ரு மாக்கட்குக்
கையறு துன்பங் காட்டினுங் காட்டு
முதிர்பூஞ் செம்மலி ஞெதுங்கினர்
கழிவோர் முதிர்தேம் பழம்பகை
முட்டினு முட்டு
மஞ்சளு மிஞ்சியு மயங்கரில் வலயத்துச்

---

ருஅ - க. மதுரைக்கு ஒன்றியவென்றதற்குப் வருவிக்க.

போகவென ஒருசொல்

கூக. என - என்று கோவலன் சொல்ல.

சுச. காணாய் - பாராய். கொண்டநெறி - வழிக்கொண்ட நெறியிடத்து;

இந்நெறி - காவிரி வடகரைவழி.

சுரு. யாங்கும்பலவுள - யாங்கும் மிகவுள்ளன.

சுஎ. (பா) படர்குவமாயினென்றாள், தன்னையும் உளப்படுத்தி.

சுஅ - எக. சண்பகம் குழியைநிறைத்த பொங்கர். போற்றா மாக்கள் - பரிகரித்துப்போகாதமாக்கள்.

குழியைச் சண்பகநிறைத்த தாதுசோர் பொங்கர் பரிகரியாமாக்கட்குத் துன்பந்தரினுந்தரும்; பழம்பூவானிறைத்தல் பெற்றும், தாதுசோர் பொங்க ரென்றலின்; பொங்கர் - சோலையுமாம்.

எரு. (பா) மேல்தூங்குகிற பழமாகியபலகையிலே முட்டினுமுட்டுவர்.

எச. வலயம் - தோட்டம்.

---

[1] இசு - எ - சிலப். கக: கச - ந. [2] சீவக. கசகரு - ந. மேற்.

யி - ம்.) * 'கேள்வியறவுரை.' † 'ஆதலின்.' ‡ 'படர்குவமாயின்.' § 'தாதுசோ.'

# கo.—நாடுகாண் காதை.

உ௫௬

எ௫. செஞ்சுளைப் பலவின் பரற்பகை யுறுக்கும்

கயனெடுங் கண்ணி காதற் கேள்வ
வயலுழைப் படர்குவ மெனினே யாங்குப்
பூநா றிலஞ்சிப் பொருகய லோட்டி
நீர்நாய் கௌவிய நெடும்புற வாளை
ஙo. மலங்குமிளிர் செறுவின் விலங்கப் பாயிற்
கலங்கலு ழுண்டிக் காரிகை யாங்கட்
கரும்பிற் றொடுத்த பெருந்தேன் சிதைந்து
சுரும்புசூழ் பொய்கைத் தூநீர் கலக்கு
மடங்கா வேட்கையி னறிவஞ ரெய்திக்
ஙரு. குடங்கையி னொண்டு கொள்ளவுங் கூடுங்
குறுந ரிட்ட குவளையம் போதொடு
பொறிவரி வண்டினம் பொருந்திய
கிடக்கை
நெறிசெல் வருத்தத்து நீரஞ ரெய்தி
யறியா தடியாங் கிடுதலுங் கூடு
௬o. மெறிநீ ரடைகரை யியக்கந் தன்னிற்
பொறிமா ணலவனு நந்தும் போற்றா
தூழடி யொதுக்கத் துறுநோய் காணிற்

றூழ்தரு துன்பந் தாங்கவு மொண்ணு
வய லுஞ் சோலையு மல்ல தியாங்க ணு
௬௫. மயல்படக் கிடந்த நெறியாங் கில்லை
நெறியிருங் குஞ்சி நீவெய் யோனொடு
குறிய றிந் தவையவை குறுகா
தோம்பெனத்

---

௭௭. யாற்றங்கரையைவிட்டு வயல்வழியேபோகில்.
௭௯. நீர்நாய், எழுவாய். ௮௦. விலங்க - குறுக்காக.

௮௪. வேட்கை - தண்ணீர்த்தாகம்.
அறிவஞரெய்தி - அறிவுமயங்கி.

௮௯. குறுதல் - பறித்தல்.
௯௦. எறிநீரடைகரை - நீர்க்கரை;
கடற்கரையென்பாருமுளர்.

௯௩. துன்பம் - நமக்கு வருந்துன்பம்.
௯௯ - ௯. அலவனையும் நத்தையையும் போற்றாது முறையாக இடுகிற அடி
யொதுக்கத்தினாலே உறுநோய் அவையிற்றுக்கு

உண்டாமாயின், அப்பாவம் தாங்கவொண்ணு......தபடியால் கடற்கரைவழியன்று.

கூ௫. அயல்பட்ட - வேறுபட்ட. கூஎ. ஓம்புகவெனச்சொல்லி.



தோமறு * கடிஞையுஞ் சுவன்மே லறுவையுங்

காவுந்தி யையைகைப் பீலியுங் கொண்டு

௬0. மொழிப்பொருட் டெய்வம் வழித்துணை யாகெனப்

பழிப்பருஞ் சிறப்பின் வழிப்படர் புரிந்தோர்

கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்

விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினுங்

கால்பொரு நிவப்பிற் கடுங்குர லேற்றொடுஞ்

கூ௯. சூன்முதிர் கொண்மூப் பெயல்வளஞ் சுரப்பக்
குடமலைப் பிறந்த கொழும்பஃ றாரமொடு
கடல்வள னெதிரக் கயவாய் நெரிக்குங்
காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை
யோவிறந் தொலிக்கு மொலியே † யல்ல

கக0. தாம்பியுங் கிழாரும் வீங்கிசை யேத்தமு
மோங்குநீர்ப் பிழாவு மொலித்தல் செல்லாக்
கழனிச் செந்நெற் கரும்புசூழ் மருங்கிற்
பழனத் தாமரைப் பைம்பூங் கானத்துக்
[1] கம்புட் கோழியுங் கனைகுர றாரையுஞ்

ககரு. செங்கா லன்னமும் பைங்காற் கொக்குங்
கானக் கோழியு நீர்நிறக் காக்கையு

முள்ளு மூரலும் புள்ளும் புதாவும்

---

கூ௮. அறுவை - தோளிலிடும் உறி.

௬00. மொழிப்பொருட்டெய்வம் - மொழியாகிய தெய்வம்; மொழி - உபதேசமந்திரம்; பஞ்சமந்திரம்.
பொருண்

கள - க0க. குறுகாதோம்பெனக் காவுந்தி கொண்டு மொழிப்பொருட் டெய்வம் நமக்கு வழித்துணையாகவென் றுசொல்ல வழிபோகப் புரிந்தோர்.

௬0௨. கரியவன் - சனி. புகைக்கொடி - தூமகேது.

சனிதூமனோடுகூடினும்.

கOரு. தாரம் - சந்தனம் அகில்முதலாயின.

கOஎ. கடல்வளன் - "ஓர்க்கோலே......ஐந்து." எதிர - வளத்தோடு எதிர்க்கையாலே; கடல்வளன் காவிரியோடெதிர. கயவாய் - புகார்.

கOகூ. ஒவுதல் தவிர்ந்து.

ககO. ஆம்பி - பத்தர். கிழார் - பூட்டை. ககக. பிழா - இடா.

ககச. கம்புட்கோழி - ஒருசாதி. ககரு. நீர்நிறக்காக்கை - நீர்க்காக்கை.

ககஎ. உள்ளூரோடும் - உள்ளலும் ஊரலும். காஞ்சியுமாம்.

புதா - பெருநாரை; மரக்

---

[1] ககச - கூ: பூட்களின் குரல்=பதிற். அச.

(பி - ம்.) * 'கடிகை'

† 'அன்றியுமாம்பியும்'

# கO.—நாடுகாண்காதை.

வெல்போர் வேந்தர் முனையிடம் போலப்

பல்வேறு குழூஉக்குரல் பரந்த வோதையு
௧௨௦. முழாஅ நுண்டொளி யுள்புக் கழுந்திய
கழாஅமயிர் யாக்கைச் செங்கட் காரான்
சொரிபுற முரிஞ்சப் புரிஞெகிழ் புற்ற
குமரிக் கூட்டிற் கொழும்பல் லுணவு
கவரிச் செந்நெற் காய்த்தலைச் சொரியக்
௧௨௫. கருங்கை வினைஞருங் களமருங் கூடி

யொருங்குநின் றார்க்கு மொலியே

யன்றியுங்

கடிமலர் களைந்து முடிநா றழுத்தித்
தொடிவளைத் தோளு மாகமுந் தோய்ந்து
சேறுபடு கோலமொடு வீறுபெறத்

தோன்றிச்

௧௩௦. செங்கய னெடுங்கட் சின்மொழிக்

கடைசியர்

வெங்கட் டொலைச்சிய விருந்திற்

பாணியுங்

கொழுங்கொடி யறுகையுங் குவளையுங் கலந்து
விளங்குகதிர்த் தொடுத்த விரியல் சூட்டிப்
பாருடைப் பனர்போற் பழிச்சினர்

*கைதொழு

கரு. வேரொடு நின்றோ ரேர்மங் கலமு
மரிந்துகால் குவித்தோ ரரிகடா வுறுத்த
[1] † பெருஞ்செய்ந் நெல்லின் முகவைப் பாட்டுந்
தெண்கிணைப் பொருநர் செருக்குட னெடுத்த
மண்கணை முழவின்

மகிழிசை யோதையும்

______ _____ __________

---

கஉ௦. உழாநுண்டொளி - தானேபட்டசேறு. கஉக. காரான் - எருமை.
கஉஉ. சொரிபுறம் - திணவையுடைய முதுகு.

கஉ௩. குமரிக்கூடு - அழியாக்கூடு.
துணவு; அவரை துவரையுள்ளிட்டன.

கொழும்பல்லுணவு - பலவர்க்கத்

கஉரு. கருங்கைவினைஞர் - பள்ளர், பறையர்.

களமர் - உழுகுடிவேளாளர்.

கரூஉ - ரு. அறுகையும் குவளையையுங்கலந்து கதிரோடு தொடுத்தமாலை

யை ஏரிலே சூட்டிப் பாருடைப்பனர்போல் ஏரோடுநின்றோர்

; குட்டக்கலப்பை

யிலே சூட்டியென்றுமாம்.

கருசு. அரி - அரிந்திடு சூடு.

x கருஎ. முகவைபாடுதல் - பொலிபாடுதல்; முகவையென்றார், நெல்லு முகந்துகொடுக்கப்படுதலாலே; [2] "புகர்முகமுகவை" போல.

---

[1] 'பெருஞ்செய்ந்நெல்லின்: புறநா. ருகுகு: ருகு; நன். சூ. உசுசு-மயிலை. மேற்.
[2] புறநானூறு, ஙஎக. (பி - ம்.) * 'கைதொழுது'; † 'பெருஞ்செந்நெல்லின்'



கசுO. பேர்யாற் றடைகரை நீரிற் கேட்டாங்
கார்வ நெஞ்சமோ டவலங் கொள்ளா
ருழைப்புலிக் கொடித்தே ரரவோன்
கொற்றமொடு
மழைக்கரு வுயிர்க்கு மழற்றிக ழட்டின்
மறையோ ராக்கிய * வாவுதி நறும்புகை
கசுரு. யிறையுயர் மாட மெங்கணும் போர்த்து

மஞ்சுசூழ் மலையின் மாணத் தோன்று
மங்கல மறையோ ரிருக்கை யன்றியும்
பரப்புநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வ
[1] ரிரப்போர் சுற்றமும்
புரப்போர் கொற்றமு
கரு0. முழவிடை விளைப்போர் பழவிற லூர்களும்
பொங்கழி யாலைப் புகையொடும் பரந்து
மங்குல் வானத்து மலையிற் றோன்று
மூரிடை யிட்ட நாடுடன் கண்டு
காவத மல்லது கடவா ராகிப்
கருரு. பன்னாட் டங்கிச் சென்னா ளொருநா
ளாற்றுவீ யரங்கத்து † வீற்றுவீற் றாகிக்

---

கச0. யாற்றடைகரைகளிலே இவ்வோசைகளை முறையிற்கேட்டு. நீரின் - நீர்மையுடனே; உருவக் கேட்டுப்போதுகையுமாம்.

கசக. கேட்ட உவகையால் அவலங்கொள்ளாராய்.

கசஉ. உழைப்புலிக்கொடி - புலியை இடத்திலேயுடையகொடி.

கசங. மழைக்குக் கருப்பமாவது தூமம். அட்டில் - ஓமசாலை.

கசஉ - ங. கொற்றத்துடனே மழைக்கருவையும் தோற்றுவித்து அவ்வளவிலே விளங்கிய சாலையென்க.

கசச. (பா) வானவருஞ் - சோற்றுவி; அவியிடுகிற ஆவி.

கசடு. இறை - இறப்பு.

கசஅ. காவிரிப்பாவைதன்புதல்வர் - வேளாளர்.

(கடுப) விளைப்போரான (கசஅ) புதல்வர் (கடு0) பழவிறலூர்களும்.

கசகூ. புரப்போர் - காக்குமரசர்.

கடுக. பொங்கழி - தூற்றாப் பொலி. பரந்து - பரக்க.

கடுஉ. மங்குல் - இருட்சி.

(கசஎ) மறையோரிருக்கையும் (கடு0) பழவிறலூர்களும் (கடுஉ) மலையிற் றோன்றும் (கடுக) நாடென்க.

(காக) வழிப்படர்புரிந்தோர் (கடுடு) செல்லுநாளுள் ஒருநாளென்க.

கடுசு. ஆற்றுவீயரங்கம் - ஆற்றை மறைக்குமரங்கம்; ஆவது குறை; அது சீரங்கம்; ஆற்றுவியென்பாருமுளர்.

---

[1] திருக்குறள். கoகச - பரி. மேற்.
(பி - ம்.) * 'வானவிறலும்புகை' † 'வீற்றுவேறுகி.'

# க0.—நாடுகாண் காதை.

உ௲௱

குரங்கமை யுடுத்த மரம்பயி லடுக்கத்து
வானவ ருறையும் பூநா றொருசிறைப்
பட்டினப் பாக்கம் விட்டனர் நீங்காப்

கசுo. பெரும்பெய ரைய ரொருங்குட னிட்ட
விலங்கொளிச் சிலாதல மேலிருந் தருளிப்
பெருமக னதிசயம் பிறழா வாய்மைத்
தருமஞ் சாற்றுஞ் சாரணர் தோன்றப்
பண்டைத் தொல்வினை பாறுக வென்றே
கசுரு. கண்டறி கவுந்தியொடு காலுற

வீழ்ந்தோர்

வந்த காரணம் வயங்கிய கொள்கைச்
சிந்தை விளக்கிற் றெரிந்தோ னாயினு
மார்வமுஞ் செற்றமு மகல நீக்கிய
வீர னாகலின் விழுமங் கொள்ளான்
களo. கழிபெருஞ் சிறப்பிற் கவுந்தி காணா
[1] யொழிகென வொழியா தூட்டும்

வல்வினை

யிட்ட வித்தி னெதிர்ந்துவந் தெய்தி
யொட்டுங் காலை யொழிக்கவு மொண்ணா
கடுங்கா னெடுவெளி யிடுஞ்சுட ரென்ன
களரு. வொருங்குட னில்லா வுடம்பிடை யுயிர்க
ளறிவ னறவோ னறிவுவரம் பிகந்தோன்
செறிவன் சினேந்திரன் சித்தன் பகவன்

றருமமுதல்வன் றலைவன் றருமன்
பொருளன் புனிதன் புராணன் புலவன்

கஅ0, சினவரன் றேவன் சிவகதி நாயகன்
பரமன் குணவதன் பரத்தி லொளியோன்

கடுள. மரம்பயில் அடுக்கம் - மரச்செறிவு; அடுக்கம் அரங்கத்துக்கு அடுத்தவிடமுமாம்.

கடுஅ. ஒருசிறை - ஒருபக்கத்திலே.

கசு0. ஐயர் - முன்சொன்ன உலகநோன்பிகள்.

கசுக. முன்புசொன்ன சாரணர்தோன்ற.

"ஐயர்[2] பட்டினப்பாக்கத்திலிட்ட சிலாதலத்திருந்து தருமஞ்சாற்றுதல் சாரணர்க்கு அடையாக்கி அவர் இங்கேதோன்றவென்க.

கசுஎ. சிந்தைவிளக்கு - அவதிஞானம்; என்றது திரிகாலஞானத்தை.

களஉ. வித்தின் - வித்துப்போல.

[1] சிலப். பதிகம், ௯௭. [2] இக்காதை உ௬ - ஆம் அடிமுதலியவற்றைப்பார்க்க.

றத்துவன் சாதுவன் சாரணன் காரணன்
சித்தன் பெரியவன் செம்ம றிகழொளி
யிறைவன் குரவ னியல்குண னெங்கோன்
கசரு. குறைவில் புகழோன் * குணப்பெருங்
கோமான்
சங்கர னீசன் சயம்பு சதுமுக
னங்கம் பயந்தோ னருக னருண்முனி
பண்ணவ னெண்குணன் பாத்தில்
பழம்பொருள்
விண்ணவன் வேத முதல்வன்
விளங்கொளி
கசுo. யோதிய வேதத் தொளியுறி னல்லது
போதார் பிறவிப் பொதியறை யோரெனச்
சாரணர் வாய்மொழி கேட்டுத் தவமுதற்
காவுந்தி கைதன் கைதலை மேற்கொண்
டொருமூன் றவித்தோ னோதிய ஞானத்
கசரு. திருமொழிக் கல்லதென் செவியகந்
திறவா

காமனை வென்றோ னாயிரத் தெட்டு
நாம மல்லது நவிலா தென்னா
வைவரை வென்றோ னடியிணை யல்லது
கைவரைக் காணினுங் காணே னென்க

உ00. ணருளறம் பூண்டோன் றிருமெய்க் கல்லதென்

பொருளில் யாக்கை பூமியிற் பொருந்தா
தருக ரறவ னறிவோற் கல்லதெ
னிருகையுங் கூடி யொருவழிக் குவியா

மலர்மிசை நடந்தோன் மலரடி யல்லதென்
உ0ரு. றலைமிசை யுச்சி தானணிப் பொறா அ
திறுதியி லின்பத் திறைமொழிக் கல்லது

---

கஅஅ. எண்குணமென்றது: அநந்தஞானம், அநந்ததரிசனம், அநந்தவீரியம், அநந்தசுகம், அநந்தநாமம், நிட்களம், நிராயுஷ்யம், சற்பாவனையெனவிவை.

ககக. பிறவிப்பொதியறை - பிறவியாகிய துவாரமில்லாத அறை.
ககஉ. ஒருமூன்று - காமம் வெகுளி மயக்கம்.
ககஅ. ஐவர் - பஞ்சேந்திரியங்கள்.

௧௯அ - ௯. மற்றைத்தேவர் இணையடிகளைக் கையிடத்தே காணினும்; அந்நியமாகிய சமயதேவர்களைக் காணினுமென்வுமாம்.

௨௦௦. திருமெய்க்கு - திருமெய்ப்பொருட்டு.

௨௦௨. (பா) அருகன் றவோர் - இருடிகள். ௨௦௫. தலையிட்டது.

௨௦௯. இருவியிலின்பம் - அநந்தசுகம்.

(பி - ம்.) * 'குணப்பொருட்'.

## ௧௦—நாடுகாண் காதை.

௨௪௫

மறுதர வோதியென் மனம்புடை பெயரா
தென்றவ னீச்சமொழி யேத்தக் கேட்டதற்
கொன்றிய மாதவ ருயர்மிசை யோங்கி
௨௧௦. நிவந்தாங் கொருமுழ நீணில நீங்கிப்
பவந்தரு பாசங் கவுந்தி கெடுகென்
றந்தர மாறாப் படர்வோர்த் தொழுது
பந்த மறுகெனப் பணிந்தனர் போந்து
காரணி பூம்பொழிற் காவிரிப் பேர்யாற்று
௨௧௫. நீரணி மாடத்து நெடுந்துறை போகி
மாதருங் கணவனு மாதவத் தாட்டியுந்
தீதுதீர் நியமத் தென்கரை யெய்திப்

போதுசூழ் கிடக்கையோர் பூம்பொழி லிருந்துழி
[1] வம்பப் பரத்தை வறுமொழி யாளனொடு
உஉ௦. [2] கொங்கலர் பூம்பொழிற் குறுகினர் * சென்றோர்
காமனுந் தேவியும் போலு மீங்கிவ
ராரெனக் கேட்டீங் கறிகுவ மென்றே
நோற்றுணல் யாக்கை நொசிதவத் தீருட
னாற்றுவழிப் பட்டோ ராரென வினவுவென்
உஉரு. மக்கள் காணீர் மானிட யாக்கையர்
பக்க நீங்குமின் பரிபுலம் பினரென்
வுடன்வயிற் றோர்க ளொருங்குடன் வாழ்க்கை
கடவது முண்டோ கற்றறிந் தீரெனத்

---

உ௦க. உயர்மிசை - சிலாவட்டம். ஓங்கி - எழுந்திருந்து.
உகஙு. பந்தம் - ஸம்ஸாரம்.
உகரு. நீரணிமாடம் - பள்ளியோடம்; போகி - அதனாலேபோந்து.
உகசு. வம்பப்பரத்தை: வம்பு - புதுமை; பரத்தைத்தன்மைக்கும் புதிய வள். வறுமொழியாளன் - பயனிலசொல்லுவான்.
உஉக - உ. காமனும் தேவியும்போலும் இவராரெனக்கருதி; போலும் ஒப்பில்போலி.
உஉங. நோற்றுணல் - பட்டினிவிட்டுணல்.
உஉச. ஆற்றுவழி - நெறியிடத்து.
உஉரு. மானிடயாக்கையரென்றது - நீங்கள் நினைத்த காமனும் தேவியு மல்லரென்றவாறு.
உஉசு. பரிபுலம்பினர் - செலவால் வருந்தினர்.

---

[1] சிலப்பதிகாரம், கசு: கூசு. [2] தொல். மூதற்சூத்திரவிருத்தி, மேற். (பி - ம்.) * 'சென்றுழி'

தீமொழி கேட்டுச் செவியகம்

புதைத்துக்

உகூ0. காதலன் முன்னர்க் கண்ணகி நடுங்க

வெள்ளுநர் போலுமிவ ரென்பூங்

கோதையை

முள்ளுடைக் காட்டின் முதுநரி

யாகெனக்

கவுந்தி யிட்ட தவந்தரு சாபங்

கட்டிய தாதலிற் பட்டதை யறியார்

உகூரு. குறுநரி நெடுங்குரற் கூவிளி கேட்டு

நறுமலர்க் கோதையு நம்பியு நடுங்கி

நெறியி னீங்கியோர் நீரல கூறினு

மறியா மையென் றறியல் வேண்டுஞ்

செய்தவத் தீர்நுந் திருமுன்

பிழைத்தோர்க்

உசு0. குய்திக் கால முரையீ ரோவென

வறியா மையினின் றிழிபிறப் புற்றோ

ருறையூர் நொச்சி யொருபுடை
யொதுங்கிப்
பன்னிரு மதியம் படர்நோ யுழந்தபின்
முன்னை யுருவம் பெறுகவீங்
கிவரெனச்
**உ௪௫.** சாபவிடை செய்து தவப்பெருஞ்
சிறப்பிற்
காவுந்தி யையையுந் தேவியுங் கணவனு
[1] முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய
புறஞ்சிறை வாரணம் புக்கனர் புரிந்தென்.

---

உஉக - ௬௦. புதைத்து நடுங்காநிற்ப.

உ௬௪. பட்டதையறியார்-மனத்தில் இவர் (கவுந்தியடிகள்) லால் அறிந்திலர்.

கினைத்ததாத

உ௬௫ - ௪௦. பின்பு அறிந்தபடி: அவர் கண்முன்னே
நரியானபடியாலும்,
பொல்லாங்கு கூறினமையாலும், அவ்விடத்து
இவரல்லது வேறுசாபமிட

வல்லாரில்லையாகலானும், இச்சாபம் இவராலேவந்ததென்று இவர் (கோவலனும் கண்ணகியும்) அறிந்தார்; அறிந்து உய்திக்காலம் உரையீரோவென்றார்.

உசஉ. நொச்சி - மதில்; பதணமுமாம்; என்றது காவல்வேண்டாத அரணென்றவாறு.

உசரு. படர்நோய் - உறழ்ச்சியாலுண்டான நோய்.

உசஎ - அ. முறம் - சுளகு. வாரணம் - யானை, கோழி; புறத்தே சிறையையுடைய கோழி - உறையூர்; வாரணம், ஆகுபெயர். யானையைக் கோழிமுருக்கலால் கோழியென்று பெயராயிற்று. யானையைச் சயித்த கோழி தோன்றினவிடம் வலியுடைத்தென்று கருதி அவ்விடத்து அதன்பெயராலே சோழன் ஊர்காண்கின்றபொழுது சிறையும் கழுத்துமாக ஆக்கியவதனால் புறம்பே சிறையையுடைய கோழியென்றாயிற்று.

---

[1] முறஞ்செவி வாரணம்: கலி. சஉ.

# க.0—நாடுகாண் காதை.

உகூஎ

கட்டுரை.

முடியுடை வேந்தர் மூவ ருள்ளுந்
தொடிவிளங்கு தடக்கைச் சோழர்குலத்
துதித்தோ

ரறனு மறனு மாற்றலு மவர்தம்
பழவிறன் மூதூர்ப் பண்புமேம் படுதலும்

ரு. விழவுமலி சிறப்பும் விண்ணவர் வரவு

* மொடியா வின்பத் தவருறை நாட்டுக்
குடியுங் கூழின் பெருக்கமு மவர்தந்
தெய்வக் காவிரித் தீதுதீர் சிறப்பும்

பொய்யா வானம் புதுப்புனல் பொழிதலு

கo. மரங்கு மாடலுந் தூக்கும் வரியும்

பரந்திசை † யெய்திய பாரதி விருத்தியுந்
திணைநிலை வரியு ‡ மிணைநிலை வரியு
மணைவுறக் கிடந்த யாழின் றொகுதியு

மீரேழ் சகோடமு மிடைநிலைப் பாலையுந்

---

க. அறன் - தருமாசனம். மறன் - இமயத்துப்புலிபொறித்தது; (சிலப். ரு: கஎ-அ;) ஆற்றல் - அமராபதிகாத்தது. (சிலப். கூ: கச.)

ச. மூதூர்ப்பண்பு - காவிரிப்பூம்பட்டினத்துப்பண்பு.

ரு. விழவு - இந்திரவிழவு. விண்ணவர்வரவு - தேவர்கள்வரவு.

எ. கூழின் பெருக்கம்-கவரிச்செந்நெற்காய்த்தலையிற் கூட்டின் நெற்சொரிதல்; (சிலப். கo: கஉகூ-ச.)

சு - எ. நாட்டுக்குடி - உழவிடைவிளைப்போர்; (சிலப். கo: கரு௦.)

அ. காவிரிச்சிறப்பு - ஆற்றுவரி; (சிலப். எ: உ-ச; ஷை ஷை உரு - எ.)

௯. பொய்யா வானம் புதுப்புனல் பொழிதல் - மழைக்கருவுயிர்த்தல்;
(சிலப். ௧௦: ௧௪௯.)

௧௦. அரங்கு மாடலும் - அரங்கேற்றுகாதையிற்கூறின.

(பா) தலைவரியியல்பு - "திங்கள் மாலை" முதலான முகமுடைவரிகள்;
சிலப். எ: உ - ச.)

௧௧. பாரதிவிருத்தி - கடலாடுகாதையிற்கூறிற்று; (பதினோராடல்)

௧௨. திணைநிலைவரி - "புணர்துணையோடாடும்" என்றன்முதலாயின;
(சிலப். எ: ௯௧.)

இணைநிலைவரி - அல்லாத......நிலைவரிமுதலாயின.

௧௩. (பா) யாழின்பகுதி - வேனிற்காதையிற்சொன்ன "உழைமுதற் கைக்கிளை" (௯௨) முதலாயின.

௧௪. (பா) இடைநிலைப்பாலை-"கோடிவிளரி மேற்செம் பாலை" முதலாயின; (சிலப். ௯: அஅ.)

---

(பி - ம்.) * 'ஒழியாவின்பத்தவருடை' † 'ஏத்திய' ‡ 'திணைநிலை'

கரு. தாரத் தாக்கமுந் தான்ஜெறி பண்ணு-
மூரகத் தேரு மொளியுடைப் பாணியு
மென்றிவை யனைத்தும் பிறபொருள்
வைப்போ
டொன்றித் தோன்றுந் *தனிக்கோ
ணிலைமையு
மொரு பரிசா நோக்கிக் கிடந்த
உ0. புகார்க்காண்டம் முற்றிற்று.

---

வெண்பா.

காலை யரும்பி மலருங் கதிரவனு
மாலை மதியமும்போல் வாழியரோ—வேலை
யகழா லமைந்த வவனிக்கு மாலைப்

புகழா லமைந்த புகார்.

கரு: தாரத் தாக்கமுந் தான்றெறி பண்ணும் :
"புறத்தொரு பாணியிற் பூங்கொடி மயங்கி"
என்றதுமுதலாயின; (சிலப். அ: சுசு.)

கசு. ஊரகத்தேர் -
இந்திரவிழவூரெடுத்தகாதையிற்சொன்ன ஊரின் வண்ணம்.

ஒளியுடைப்பாணி - "வெங்கட்டொலைச்சிய விருந்திற்
யின;—(சிலப். கo: கசுக.)

பாணி" முதலா

கஎ. பிறபொருள்வைப்பு - ...........முதலாயின.

முதலாவது

புகார்க்காண்டம் அரும்பதவுரையுடன்

முற்றிற்று.

---

(பி - ம்.) * 'தஞ்சோணிலைஷூயும்'

## ௧௦.—நாடுகாண் காதை.

உரைக்கு

க - ௱. வான்கண் விழியா.........கடைநாட் கங்குல்
(இ - ள்.) உலகிற்குக் கண்ணாகிய ஆதித்தன்
தோன்றிவிளங்காத வைகறை யென்னும் யாமத்திடத்து
மீனோடு அழகுபெற்றெழுகும் வெண்மதியானது
விசும்பினின்றும் நீங்கிற்றாகக் கரிய இருள் கடைக்கணின்ற
கங்குற்பொழுதி லென்க.

என்பது அந்தச் சித்திரைத்திங்கட் புகுதி நாள் - சோதி,
திதி - மூன்றாம் பக்கம், வாரம் - ஞாயிறு.

இத்திங்களிருபத்தெட்டிற் சித்திரையும் பூரணையுங் கூடிய
சனிவாரத்திற் கொடியேற்றி [1] "நாலேழ் நாளினும்"
என்பதனான் இருபத்தெட்டுநாளும் விழாநடந்து
கொடியிறக்கி வைகாசி இருபத்தெட்டினிற்
பூருவபக்கத்தின் பதின்மூன்றாம் பக்கமும் சோமவாரமும்பெற்ற அனுடத்தில்
நாட்கடலாடி ஊடுதலின் வைகாசி இருபத்தொன்பதிற் செவ்வாய்க்கிழமையும்
கேட்டையும் பெற்ற நாசயோகத்து நிறைமதிப்
பதினாலாம்பக்கத்து வைகறைப் பொழுதினிடத்து நிலவுபட்ட
அந்தரத்திருளிலேயென்றவாறு. அது பூருவ பக்கமென்பது
தோன்றக் 'காரிருணின்ற கடைநாட் கங்கு' லென்றார்; [2]
"குண

முதற் றேன்றிய வாரிருண் மதியிற், றேய்வன கெடுகவின் றெவ்வ ராக்கம்', என இருண்மதியென்ருர் மதுரைக்காஞ்சியுள்ளும். கண் - இறைவன்கண் ணென்பாருமுளர். விழித்தல் - விளங்குதல்; அது செய்யாத வைகறை, ஆகு
பெயர்; வைகல் - துயிறல்; அறல் - அறையாயிற்று;
[3]"பொறியறை" போல.*

௪. ஊழ்வினை கடைஇ யுள்ளந் துரப்ப:—(இ - ள்.) முன்செய்த தீவினை முறையானேவந்து இவனுள்ளத்தைச் செலுத்துதலானேயென்க.

கடைஇ - செலுத்தியென்றுமாம்.

௫ - அ. ஏழகத் தகரும்..........நெடுங்கடை
கழிந்து

(இ - ள்.) ஏழகமாகிய தகரும் எகினமாகியகவரியும்
தூய மயிரினையுடைய
அன்னமுமாகியவிவை ஒன்ருென்று
இனமல்லவாயினும் இனம்போலே
விடாது திரியும் தாளோடுகூடப் பண்ணப்பட்ட
பெருமைபொருந்திய சிறப்பினை
யுடைய மிகவும் பெரிய கதவையுடைய இடைகழியைக்
கழிந்தென்க.

நெடுவாயிற்கடை - பெரிய கதவையுடைய

தலைக்கடை. தகர்முதலியன

இவள் வளர்த்தனவாகலின், இவளைத்

தம்மினமென்றுகருதித் திரியுமெனவு

மாம்; வாயிற்கணெழுதினவற்றை

இனமெனக்கருதித்திரியுமெனவுமமையும்.

தாளொடுகுயின்றவென்றார், போர்க்கதவாகலின்

இனியிளகாமற் பண்ணுகின்ற

போதே கூடப்பண்ணுதலான். ஏழகத்தகர்முதலியன இருபெயரொட்டுப் பண்புத்தொகை. வாயில் - கதவு. கடைகழிந்தென்றார், மனையின்பெருமையும்

காவன்மிகுதியுந்தோன்ற. இனி, இவன்

அன்று கழிந்தானெனினுமமையும்.

---

[1] மணிமேகலை, க: அ. [2] மதுரைக்காஞ்சி, ககூ௫ - கூ.

[3] திரிகடுகம், கரு.

[*] இவ்விசேடவுரையிலுள்ள காலவரையறை பொருந்தாததுபோல் தோற்றுகிறது; ஆயினும் பிரதிகளிலுள்ளவாறே பதிப்பிக்கப்பட்டது.

அ - கo. ஆங்கு.........வலஞ்செயாக்கழிந்து

(இ - ள்.) அங்ஙனம் வாயில்கழிந்தபொழுதே அரவணையின்மீதே அறிவோடு துயில்கொள்ளும் மணிவண்ணனென்னும் திருநாமத்தையுடைய திருமால் கோயிலை வலஞ்செய்து கழிந்தென்க;

ஆவது வலத்திட்டேகுதல். அணி - அழகு. அறிதுயில் - யோகநித்திரை.

மணிவண்ணன், பெயர்.

கக - சு. பணையைந் தோங்கிய.........ஏழுடன் போகி

(இ - ள்.) ஓங்கிய ஐந்துபணையினையும் பசிய இலையினையுமுடைய [1] மாபோதி நிழலிலெழுந்தருளிய அறவோனாகிய புத்தன் அருளிச்செய்த ஆகமத்தை ஆகாயசாரிகள் மறையவிருந்தோதி யாவர்க்கும் விளங்கப்பொருளுணர்த்தப்படும் [2] இந்திரனனிருமிக்கப்பட்ட விகாரங்களேழினையும் அடைவேகண்டு அவற்றைக் கழிந்துபோயென்க.

அவை அவ்வூர்ப் [3] புத்தசைத்தியத்து இந்திரன் நிருமித்தனவாகிய ஏழரங்கு. மாபோதி ஐந்துபணையது... ... ... இயல்பு. திருமொழி - ஆகமம். அறைந்து சாற்றுதல் - [4] பாடமோதிப் பொருளுரைத்தல். விகாரம் - கையாற் கருவியாற்பண்ணாது மனத்தால் நிருமித்தல்.

கரு - உரு. புலவூண்டுறந்து... ... .தொழுது வலங்கொண்டு

(இ - ள்.) புலாலாகிய ஊணைத்துறந்து பொய்கூறுமையாகிய விரதத்தோடு பொருந்தி [5] அழுக்காறு அவாமுதலியவற்றைக் கைவிட்டு அறநூன்முதலியவற்றையறிந்து ஐம்புலனையுமடக்கிய கோட்பாட்டையுடையராய் உண்மைவகை

புணர்ந்த சீரியோர்திரண்ட ஸ்ரீகோயிலில் பஞ்சபரமேட்டிகள் நிலைபெற்ற ஐந்து

சந்தியுங்கூடிவந்து தலைமயங்கியிருக்கின்ற மிக்க பெரிய மன்றிற் பூவையுடைய பிண்டியினது அழகுகிளரும் நிழற்கண்ணே விழு அயனதிகளிலும் விழவுகளிலும் ஆகாயசாரிகள் வரத்தகுமென்று சாவகரெல்லாம் கூடியிடப்பட்ட விளங்காநின்ற ஒளியையுடையசிலாவட்டத்தை இவர்கடொழுது வலங்கொண்டென்க.

புலவூண் - புலாலோடே உண்ணுமூணுமாம்.

புலையூண் பாட்டமாயிற் புலையருண்ணுமூணென்க.

விரதத்து - விரதத்தோ

டே. அவலம் - அழுக்காறு அவாமுதலியன. அறிந்து - அறியப்படும் அறநூல்களை அறிந்து. - பஞ்சபரமேட்டிகளாவார்:—அருகர், சித்தர், உபாத்தியாயர், ஆசிரியர், சாதுக்களெனவிவர்.

இனி, ஐவகை நின்ற வருகத் தானத்துச்சந்திமன்றென்பதற்கு ஐந்து

ஸ்ரீகோயிற்சந்திகூடிய மன்றென்பாருமுளர். பொன் பொலிவாதலன்றிப்

---

[1] மாபோதி = மஹாபோதி; கௌதமபுத்தருக்கு ஞானோதயமானஇடத்துள்ள அரசமரம்; "போதிமூலம்" (மணி. ௩௦ : ௪௦) என்பதன் குறிப்பைபட்டார்க்க.

[2] சிலப். உ௭: ௬௨.

[3] புத்தசைத்தியம் - பௌத்த வித்தியாசாலை; புத்தனாலயமுமாம்.

[4] பாடமோதல் - மூலத்தை விளங்கச்சொல்லுதல்.

[5] "அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொ லான்கு, மிழுக்கா வியன்ற தறம்" திருக்குறள், ௩௫.

உஎக

பொலம் பொலிவாகாமையின்

அருகனுணையான் எப்பொழுதும் பொற்பூவைப்

பூக்கும் பிண்டியென்க. சிலாதலம் - சந்திரகாந்தக்கல்லாற் படுத்தது. விழவு - அபிடேகவிழவெனினுமமையும்.

கீரணி

உசு - எ. மலைதலைக்

கொண்ட.........ஒருங்குட னீங்கி

(இ-ள்.) மலையிடத்தே தலையையுடையதோர்

பெரியயாறுபோலும் உலகி

லுள்ளோராயவர் போக்குவரவு செய்தற்கு அமைந்த

ஊர்வாயிலை அக்காலத்துப் போவாரோடு கலந்துபோய்

அதனைவிட்டுநீங்கியென்க.

உலகவிடைகழி - ஊர்வாயில். இடையேகழிதலின்,

அவ்வாயில் இடைகழி

யாயிற்று. கோயிற்கோபுரத்தை மலையாகவும் அதனோடு

மணந்துகிடந்ததெரு வை ஆறாகவும் உவமித்தார்.

உஅ - ௩க. கலையி லாளன்.........எயிற்புறம் போகி

(இ - ள்.) மன்னவற்குக் காமன் வேனிலோடு தென்றலையும் திறையாக
இடுதற்குப்பொருந்திய பலமலர்களை நிரைத்த நல்ல மரநிழலையுடைய இலவந்
திகையினது எயிற்குப் புறத்திலேபோயென்க.

கலையிலாளன் - அநங்கன்; கலை - சரீரம். காமர் - அழகு. பந்தர் - நிழல்.
இலவந்திகை - நீராவியைச்சூழ்ந்த வயந்தச்சோலை. அஃது அரசனும் உரிமையு
மாடுங் காவற்சோலை; [1] "இலவந் திகையி னெயிற்புறம் போகி, னுலக மன்னவ
னுழையோ ராங்குளர்" என்றார் மணிமேகலையிலும்.

௩உ - ௩. தாழ்பொழி லுடுத்த .........கடைமுகங் கழிந்து

(இ - ள்.) இருமருங்கும் சோலைசூழ்ந்த புதுப்புனலாடப்போம் பெரிய
வீதியையுடைய காவிரிக்கரையில் திருமுகத்துறைகழிகின்ற வாயிலையும் கழிந்

தென்க.

கடைமுகங்கழிந்தென்றார்; காலையில் நாணீராடுவோர் பிறர்முகநோக்காது

போதற்கு மறைந்துகழிவர்;
இவரும் அவ்வாறுகழிந்தாரென்றற்கு.

௩௪. குடதிசைக்கொண்டு:—(இ - ள்.)

மேற்றிசையை நோக்கிக்.

கொண்டு, ௩௪ - ரு. கொழும்புனற்

காவிரி.........பொழினுழைந்து (இ - ள்.)

வளவிய புனலையுடைய காவிரியினது பெரிய

வடகரையிற் பொழிலைக்கழிந்தென்க.

கோடு - கரை. நுழைதல் - கழிதல்; அன்றி
தாழ்ந்த கோட்டிடை நுழைந்துபோயெனவுமாம்.
இளமரக்காவாதலால்

௩௬ - ௪௧. காவதங் கடந்து..................வினவ

(இ - ள்.) நறிய ஐவகைக் கூந்தலையுடையாள் அங்ஙனம் காதமென்று சொல்லப்படும் எல்லையைக்கடந்துசென்று கவுந்தியடிகளிருக்கின்ற பள்ளிக்கு

[1] மணிமேகலை, ௩: ௪௯ - ௫௰.



அயலதோர் பொலிவினையுடைய செறிந்த இளமரச்சோலையளவுஞ்சென்று பொருந்தி அவ்விடத்தே இனி இஃது இறுமெனத்தக்க கொடிபோலும் இடையும் அடியும் மிகவும்வருந்தி மேல் இளைப்பாற் குறுகவுயிர்த்து முற்றாத மழலைமொழியாலே கூர்த்த எயிறிலங்க மதுரையென்னுமூதூர் யாதுதானென்று கேட்பவென்க.

காவதம் - காதம்; பகுதிப்பொருள்விகுதி. பொதும்பர் - மரச்செறிவு; கோடரமென்றுமாம்.

௪௨ - ௩. ஆறைங் காதம்.......................... நக்கு

(இ - ள்.) நீ கூறிய மதுரை நம் அகன்றநாட்டிற்குமேல் ஆறைங்காவதங் காண், இனி அண்ணித்தென்றுகூறி நக்கென்க.

யாதென்றவட்கு முப்பதென்னும் பொருள்மறைந்து காதம் ஆறு காதம் ஐந்தென்றாற்போலிருத்தற்கு ஆறைங்காதமென்றான். நகுதல் - [1] துன்பநகை. கூந்தல், விளி.

சச - ரு.

தேமொழி.......................தொழலும்

(இ - ள்.) அங்ஙனம்வினவின தேமொழிதன்னோடுசென்று தவவேலிக்கணி ருந்த கவுந்தியடிகளைக்கண்டு அடிதொழுதலுமென்க.

சிறை - பள்ளியென்றுமாம் ; ஸ்ரீகோயிலின் ஒருபக்கமுமாம்.

அ - சரு. கழிந்து கழிந்து போகிக் கொண்டு நீங்கிப் போகிக் கழிந்து

நுழைந்து கடந்து பொருந்தி நக்குக் கண்டு அடிதொழலுமென்க.

சசு - கூ. உருவுங் குலனும்.. .. . .... கருதிய வாறெ(ன்)ன

(இ - ள்.) இவர்கள் தொழுதார்களாக, அழகும் குடிப்பிறப்பும் ஒழுக்கமும் இறைவனூலிற்கூறிய விரதந்தப்பாமையுமென்னும் இவற்றையெல்லாம் ஒரு தலையாகவுடைய நீங்கள் தீவினையாளரைப்போல நுமதிடத்தைக்கழிந்து வருவதற்குக் கருதியதென்னேவென்று கேட்பவென்க.

பெருமகன் - அருகதேவன். திருமொழி - அவனருளிச்செய்த ஆகமம். உறுகணாளர் - மிடியாளரென்பாருமுளர். கடைகழிதல் இவர்க்கு மரபன்மையிற் கழிந்தென்றார்.

இவ்வுமைமகள் எண்ணுக்குறித்தனவெனினும்

சிறப்புப்பொருண்மை

தோன்றநின்றன.

௫௦ - ௫க. உரையாட்டில்லை.........

.வேட்கையேன்

(இ - ள்.) மிக்க தவத்தினையுடையீர், இவ்வினாவிற்கு ஓருத்தரமில்லை; ஆயினும் யான் கருதியதொன்றுண்டு; அதுயாதெனின், மதுரையாகிய மூதூரிற் சென்று நிருமித்தபொருளைத் தேடக்கடவோமென்னும் வேட்கையையுடையே

னாயினேனென்று சொல்லவென்க.

முன்னர்க்காதையில் [2] "சென்ற கலனோ, டுலந்தபொரு ளீட்டுத லுற்றேன்" என்றானாகலின், அதனை வரைபொருளென்றான். இனி நியாயத்திற்

[1] "இடுக்கண்வருங்காலநுக" திருக்குறள், ௬௨௧. [2] சிலப்பதிகாரம், ௯: ௭௪ - ௫.

## ௧௦.—நாடுகாண் காதை.

௨௭௩

றேடும்பொருளெனினுமமையும்; அன்றி, இதற்கு இத்துணைப்பொருட்கு மேற்பட்டதே தானம்பண்ணக் கடவேனென வரைந்தபொருளென்பாருமுளர். என வென ஒருசொல்வருவிக்க.

இனிக் கவுந்தியடிகள் கூறுவார்:—

ருஉ - ச. பாடகச்சீறடி.. .. .....அறிகுநர் யாரோ

(இ - ள்.) இனி அங்ஙனங்கருத்தாயின், இவள்சீறடிகள் பருக்கையாகிய பகையை வெல்லமாட்டா; ஆதலால் நீர் காடுநாடுமென்னும் இவ்வழியைக்கடத்தற்குஇவள் செவ்வி ஏற்றதன்று; இனி ஊழ் என்செய்தமுடிக்குமோ? அதனை அறிவாராரென்றாரென்க.

என்றகருத்து: அடி பரற்பகையுழவா; வழி காடிடையிட்டநாடு; இவள் அதற்கேற்றதன்மையளல்லள்; இனி ஊழ் என்செய்யுமோ? இதனை யாரறியவல்லாரெனப் பரிவுறல்தோன்றநின்றது.

**ருசு.** உரிய தன்றீங் கொழிகென வொழியீர்:—(இ - ள்.) இவையேயன்றியும் குடிப்பிறப்பிற்கும் இவளை ஒருங்குகொண்டு சேறல் ஏலாதாகலின் இனிச் செலவை ஒழிமினென்று யாமொழிப்பவும் ஒழிகின்றிலீராயினீரென்றுரென்க.

ஒழிகெனவொழியீரென்பதற்கு இவர்க்கு எதிர்வதறிந்து கூறினாரெனின், [1] "தவந்தரு சிறப்பிற் கவுந்தி........உண்ணு நோன்போ டுயிர்பதிப் பெயர்த்த தும்" என நீர்ப்படையுள் மாடலன் கூறுதலானும், அடைக்கலக்காதையில், [2] "தன்குல வாணர்,அரும்பொருள் பெறுநரின் விருந்தெதிர் கொண்டு, கருந்தடங் கண்ணியொடு கடிமனைப் படுத்துவ, ருடைப்பெருஞ் செல்வர் மனைப்புகு மளவு, மிடைக்குல மடந்தைக் கடைக்கலந் தந்தேன்" எனவும், [3] "தாயு நீயே யாகித் தாங்கு" எனவும், [4] "மிகப்பே ரின்பந் தருவது கேளாய்" எனவும் ஒருபொழு திற்கு இத்துணை ஓம்படையெல்லாம் கூறவேண்டாவாகலானும் இவர்க்குத் தவப் பயனாலே சபித்தலன்றிக் காலவுணர்ச்சியின்மையுணர்க.

இசு - சு௫. மறவுரை நீத்த.........தீர்த்தேனென

(இ - ள்.) மறவுரைகளை நீத்திருக்கும் குற்றமற்ற பொருட்பயனையுடைய வர்தம் நூலைக்கேட்டு அந்த ஆகமப்படியே அறிவனையேத்துதற்குத் தெற்கின் கணுள்ள தமிழ்நாட்டின்கண்ணதாகிய குற்றந்தீர்ந்த மதுரைக்குப்போதற்கு முன்னே ஒருப்பட்ட உள்ளமுடையேனாதலின், யான்போதுவேன்; நீரும் போது மினென்ற கவுந்தியடிகளைக் கையாற்றொழுது நாவாரவேத்தி, அடிகளே! நீரே இங் ஙனம் அருள்செய்வீராயின், இவ் வளைபொருந்திய தோளினையுடையாளுடைய துயரெல்லாம் இப்பொழுதே போக்கினேனன்றோவென்று சொல்லவென்க.

நீயிரே இதுசெய்வீராயினென்றது ஒரு வழக்கு. ஏகாரத்தை இசைநிறை யாக்கலுமொன்று. தொடி - வளைவு; [5] "தொடிக்கட் பூவை" என்றாராகலின்.

---

[1] சிலப். உஎ: எகூ - அங.
[2] ,, கடு: கஉகூ - கூ௦.
[3] ,, ,, கிகசு.
[4] சிலப். கடு: கடு௦.
[5] சீவகசிந்தாமணி, கூகஉ.





நீத்தென்றும் பாடம்.

சுசு - ரு. கோவலன் காணுய்

...பலகேண்மோ

(இ - ள்.) கோவலனே ! நாம்

போவதாகவுட்கொண்ட இந்நெறியிடத்து

வருத்தத்தைத் தருவன எவ்விடத்தும் பலவுள; அவற்றை

நீயறியாய்; ஆதலால்,

யான் சொல்லக் கேட்பாயாகவென்றாரென்க.

காணுய் - நீ முன்பு அறியாய். இந்நெறி

- வடகரைவழி. மோ, முன்னிலை

யசை.

சுசு - எக. வெயினிறம் பொறா அ........

.காட்டினுங் காட்டும்

(இ - ள்.) வெயிலினது நிறத்தைக்

கண்ணாற்பார்க்கவும் பொறாத இம்மெல்

லிய இயல்பினையுடையாளைக்கொண்டு நாம் பூப்பயிலும்

தண்டலையூடு போகக்

கடவேமென்பேமாயின்; அவ்விடத்து நிலம்பிளக்கும்படி

இடங்கொண்டு கீழ்

வீழ்ந்த வள்ளிக்கிழங்கை அகழ்ந்துகொண்டகுழிகளைச்

சண்பகமரங்கணிறைத்த

பூந்தாதுசேர்ந்தபொங்கர் பொய்க்குழிப்படுவித்து
அவ்விடங்களை அறிந்து பாது
காத்துச்செல்லாதமாக்கட்குச் செயலறுதியாகிய
துன்பத்தைக் காட்டுதலைச்
செய்யினுஞ் செய்யுமென்றரென்க.

பொங்கர் - ஈண்டு வாடற்பூ. அதுபோர்த்தலாற்
பொய்யறைப் படுத்தென்
றார்; [1] "பொங்கர் வெண்பொரி சிந்தின புன்கு" என்ப
மேலும். கையறுதுன்
பம் - மீளாத்துன்பமுமாம். காட்டல் - தருதல்.
பொங்கர் படுத்துக் காட்டு
மென்க.

எ௨ - ௬. உதிர்பூஞ் செம்மலின்....
.....முட்டினு முட்டும்

(இ - ள்.) அங்ஙனமுதிர்ந்த செம்மற்பூ மறைத்த
குழியுள்ளவழி நாடு
தற்கு நிலனோக்கி ஒதுங்கிச்செல்வோரை முற்றிப்
பழுத்து விண்டு தேனொழு
கும் பலாப்பழங்கள் தாழ்ந்தகோட்டின்கணிருந்து
பகைபோல முட்டுதலைச்
செய்யினுஞ் செய்யுமென்றரென்க.

இனித் தேமென்பதனை இனிமையாக்கித்

தெங்கம்பழம் முட்டுமெனினு

மமையும்; பழம்பகையாயெனப் பண்பொட்டுவிரிக்க.

முட்டினுமுட்டுவரென்றது பாடமாயின்,

,கழிவோர்செய்யினுஞ்செய்வா

ரென்க; உம்மையை ஐயவும்மையாக்கிப் பொருளுரைக்க. படர்குவமெனிளே யெனக் கழிவோர்கருத்தைக் கொண்டு கூறினர், உலகியலாகலான்.

எச - ரு.

மஞ்சளுமிஞ்சியும்........பகையுறுக்கும்

(இ - ள்.) அவ்வாறன்றி வெள்ளிடைப் போவோமெனின், ஆண்டு மஞ்சள் முதலியன தம்மில் தலைமயங்கிய பிணக்கத்தையுடைய தோட்டங்களிற் பாத்தி தோறும் பலவின் செஞ்சுளைகளினுள்ள வெண்காழாகிய பருக்கைகள்[1] இவள் மெல்லடிக்குப் பகையாய் உறுத்தலைச் செய்யுமென்றாரென்க.

வலயம் - பாத்தி. வலயத்தோடு பரலும் பகையாயுறுக்குமெனினுமமை யும்; உறுக்கும் ; உறுத்தும்.

[1] சிலப்பதிகாரம், வேட்டுவவரி, "செம்பொன்வேங்கை"

## கங.—நாடுகாண்காதை.

உஎரு

என்றகருத்து: மஞ்சள் முதலியன நிலவண்மையான்

முற்றிப் பருவஞ்

செய்தமூளை சருகின் மறைந்துகிடந்தவற்ருேடு பரலும் உறுத்துமென்றதாம்.

எசு - எ. கயனெடுங் கண்ணி.........படர்குவ மெனினே

(இ - ள்.) கயல்போலும் கண்ணிணையுடையாள் காதலிக்கப்பட்ட கேள்வ

னே! அங்ஙனம் சோலையும் தோட்டமுமாகிய கரைவழியன்றி வயல்வழியே

போகக்கடவேமென்பேமாயின்,

எஎ - அக. ஆங்கு.................காரிகை

(இ - ள்.) தம்மிடத்துமலர்ந்த பூக்களின்மணம்கமழாநின்ற குளங்களில்

நீர்நாய் பொருகின்றகயல்கள் வெருவியோடவோட்டிக் கௌவப்பட்ட நீண்ட

முதுகையுடையவாளை மலங்குகள் நெளியுஞ்செறுவிற் குறுக்கிடப்பாயுமாயின்,

இக்காரிகை கலங்குதலை அடையவுங் கூடுமென்றுரென்க.

நீர்நாய் கௌவியவாளை பொருகயலோட்டிப் பாயினெனினுமமையும். இத

ஞற்சொல்லியது: மீனிரைதேரும் நீர்நாய்காணினும், இடையே பொருகயல்கள்

உகளக்காணினும், வாளை பாயக்காணினும், மலங்கு

மிளிரக்காணினும் மனத்திற்
கலங்கலுமுண்டு இக்காரிகையென்றதாம்.

அக - ரு. ஆங்கண்.........கொள்ளவுங் கூடும்

(இ - ள்.) அஃதன்றியும், [1] கரும்பல்லது
காடின்மையான் அவ்விடத்து
உள்தாய கரும்பின்வைத்த பெருந்தேனடைகள் முற்றி
நெருங்குதலானே தேன்
அழிந்தொழுகிச் சுரும்புசூழப்பட்ட பொய்கையின்
நல்லநீரோடு சென்று
கலந்துவிடும்; ஆதலான் அதனை அறியாமல் தணியாத நீர்வேட்கையான்
இவள் தன்குடங்கையான் முகந்துகொண்டு பருகவுங்கூடுமென்றாரென்க.

குடங்கையாவது ஐந்துவிரலுங்கூட்டி உட்குழிப்பது;
என்னை? [2] "குடங்
கை......உட்குழிப்பதுவே" என்றாராகலின்.
இதனாற்சொல்லியது: நமது [3] தரிச னத்துக்
கடியப்பட்டவாற்றால் தேனுண்டலைப் பரிகரிக்கவென்றதாம்.
எனவே
ஊனையும் உடன்கூறிற்றாம். மேலும் இவ்வாறு
வருவன கொள்க.

அசா - கூ. குறுந
ரிட்ட..............இடுதலுங் கூடும்

(இ - ள்.) களைபறிப்பார் பறித்து வரம்பிலிட்ட

குவளைப்பூவுடனே தம்

மெய்யிற் பொறியையும் வரியையுமுடைய வண்டினம் மதுமயக்கத்தாற் போக அறியாது உள்ளொடுங்கிக்கிடப்பனவற்றை வழிச்செல்வருத்தத்தாலே நீர் உணர்வுமயங்கி வரும்பூவெனக்கருதி அவற்றின்மேல் அடியிடவுங் கூடுமென்று ரென்க.

இதனாற்சொல்லியது உயிர்க்கொலைபுகாமற் பரிகரிக்கவென்பதாம்.

௬௦ - ௬௩. எறிநீ ரடைகரை ..............ஒண்ணு

(இ - ள்.) எறியுநீரையுடைய பெருவாய்க்காலினது அடைகரைவழியே போகக்கடவேமென்பேமாயின், அவ்வடைகரை நீரிலுள்ளனவாகிய பொறி

---

[1] "கரும்பலாற் காடொன் றில்லாக் கழனிசூழ் பழனநாடும்" சீவக. ௨௯௦௨.
[2] சிலப். ௨௪. ௬௪. [3] தரிசனம் - சாஸ்திரம்.



களினழகையுடைய அலவனும் நந்தும் உள்ளவழியறிந்து பாதுகாவாது முன்பு

நடக்கு முறைமையான் அடியிட்டுநடக்குநடையின் அவைதாம் உறக்கடவு நோயை நம்மாலுறுமாயின் அதனால் நமக்குவரும் கொலைப்பாவம் நம்மால் தாங்கவுமொண்ணாது;

எறிநீர் - வாய்த்தலையினின்றும் குதித்துவரும் வாய்க்காணீர். இயக்கம் - வழி. நந்து - ஈண்டு நத்தை. ஊழ் - முறைமை. ஒதுக்கம் - நடை. நோயென்றார்; கொலையென்று வாக்காற்கூறவுமாகாமையின்.

இக்கொலைப்பாவும் ஒன்றுனும்
கழுவப்படாது; அதுவேயுமன்றி மறுமைக்கண்
நரகத்திலுறுந்துன்பமும் நம்
மால்தாங்கலாமளவிற்றன்றென்பதனுன்,உம்மை
எச்சவும்மையாயிற்று. அடை
கரை - கடற்கரையென்பாருமுளர்.

கூச - எ. வயலுஞ் சோலையும்..........குறுகா
தோம்பென
சோலையுமெனவே ஒருசார்வுபற்றித்
தோட்டமுமடங்கிற்று. வயலும்
சோலையுமென்பனவற்றைக் கூறியமுறையானே
எதிர்நிரனிறையாகக்கொள்ளு
வாருமுளர்.
(இ - ள்.) ஈண்டுக்கூறியவயலும் ஆண்டுக்
கூறியசோலையுமல்லது வேறு
படக்கிடக்குநெறி மேல் நாம்செல்லுகின்ற
இடத்தில்இல்லை;ஆதலான், நெறித்த
குஞ்சியையுடையாய்! நீ நின்னைவிரும்பிய மனைவியோடே
அவ்வவ்விடங்களைக்
குறிப்பானறிந்து அவை *அபகாரங்களுறுமற்

பாதுகாப்பாயாகவென்றுரென்க.

வெய்யோனுக்குக் குறுகாமலெனினுமமையும்.

காட்டினுங்காட்டும்; முட்டினுமுட்டும்;

பரற்பகையுறுக்கும்; கலங்கலு

முண்டு; கொள்ளவுங்கூடும்; இடுதலுங்கூடும்;

தாங்கவுமொண்ணு;  ஆகலாற்

குறியறிந்து அவையவை குறுகாதோம்பென்றுரென்க.

இங்ஙனம் மென்மைத்தன்மைகூறுவார், வருணனைகளையும்

உடன்கூறினு

ரென்க. இத்துணையும் கவுந்தியடிகள் தமது பள்ளிக்கணிருந்துகூறினுரென வுணர்க. வயலுமெனவே வாய்க்காலுமடங்கிற்று.

கூஅ - கoக. தோமறு கடிஞையும்......வழிப்படர் புரிந்தோர்

(இ-ள்.) கவுந்தியடிகள்.

கடிஞைமுதலியவற்றைக்கொண்டு பஞ்சமந்திரமே

நமக்கு வழித்துணையாகவெனச்சொல்லிச்செல்ல,

அவரோடு பழித்தலரிய

ஒழுக்கத்தோடு வழிச்செலவைப்புரிந்தவரென்க.

தோம் - குற்றம். கடிஞை - [1] ஐயக்கடிஞை.

அறுவை - தோளிலிடுமுறி

மொழிப்பொருட்டெய்வம் - பொருண்மொழியாகியதெய்வம்; ஆவது [1] பஞ்ச மந்திரம்; க வி கூ உ ஸா — அ சி ஆ உ சா.

இனிக் கொண்டென்றதனைக் கொள்ளவெனத்திரித்து
அடிகளிதுசெய்ய
இவர்கள் துணையாகவென்ருரெனினுமமையும்.

---

[1] இந்தப் பஞ்சமந்திரத்தைப் பஞ்சநமஸ்காரமென்பர் சைனர்.

[2] "ஐயம்புகூஉந்தவசிகடிலகு" நாலடியார், ஈகை. கூ.

(பி - ம்) * 'அபசாரங்கள்'

## க0.—நாடுகாண்காதை.

உஎஎ

க0உ - கக. கரியவன் புகையினும்...ஒலித்தல் செல்லா
(இ - ள்.) கோள்களிற் சனிக்கோள் இடபம் சிங்கம்
மீனமென்னுமிவற்றி
ஞேடு மாறுபடினும், ஆகாயத்தே தூமக்கோளெழினும்,
விரிந்த கதிரையுடைய
வெள்ளிக்கோள் தென்றிசைக்கண்ணே பெயரினும்
காற்றுப்பொரும் குடகவரை
யினது உச்சிக்கண்ணே கடிய குரலையுடைய உருமேற்ருேடு
சூன்முதிர்ந்த பரு / வப்புயல் தன்பெயலாகிய வளத்தைச்
சுரத்தலானே அவ்வரையிற்பிறந்த பல
பண்டத்தோடு கடுகிவருதலையுடைய காவிரியினீர்,
முகத்தைக்குத்தியிடிக்குங்

கடல் தன் வளத்தைக்கொண்டு எதிர்தலானே தேங்கி, வாய்த்தலைக்கிட்ட கத

வின்மீதெழுந்து குதிக்கின்ற அப்புதுப்புனலொலியல்லது ஆம்பிமுதலாயின

ஒலித்தல்செல்லாவென்க

கரியவன் - சனி. புகைக்கொடி - வட்டம், சிலை, நுட்பம், தூமமென்னும்

[1] கோட்களுள்கினும் தூமக்கோள்; [2] "மைம்மீன் புகையினுந் தூமந் தோன்றினுந்,

தென்றிசை மருங்கின் வெள்ளி யோடினும்" என்றார் பிறரும். கால்பொருவிவ

ப்பு - குடகினுச்சி. ஏறு - இடியேறு. பஃறாரம் - பல்தாரம்; பலபண்டம்.

எனவே மலைவளனாயிற்று; ஆவன [3] "தக்கோலந்.....

.சாதியோ டைந்து."

கடல்வளனவன: "ஓர்க்கோலை சங்க மொளிர் பவளம் வெண்முத்த, நீர்ப்

படு முப்பினோ டைந்து"

கடுவரல் - முடுகிவரும்வரவு. ஓ - தூம்பிற்கதவு; இனி ஓவுதல், விகாரத்

தால் ஓவெனநின்றதெனவுமாம்; இதற்கு இறத்தல் ஈண்டுத் தவிர்தன்மேற்று.

ஆம்பி - பன்றிப்பத்தர். கிழார்-பூட்டைப்பொறி. பிழா- [4] இடா, [5] "நீர்த்தெவ்வு நிரைத்தொழுவர், பாடுசிலம்பு மிசையேற்றத், தோடுவழங்கு மகலாம்பியிற், கயமகைய வயனிறைக்கு, மென்றொடை வன்கிழாஅர்" என்றார் பிறரும்,

இனிக் கரியவன்புகையினுமென்பதற்குச் சனிவாரம் புகையினுமெனவுமாம். இனிப் புகையினும் தோன்றினும் படரினும் சுரப்ப எதிர நீர் வாய்த்தலை ஒவிறந்தொலிக்குமொலியல்லது ஆம்பிமுதலிய ஒலித்தல்செல்லாமைக்குக் காரணமாகிய காவிரியென முடிப்பினுமமையும். புகையினும் தோன்றினும் படரினுமென்ற உம்மைகள், மழை பெய்தொழில்மாற இவற்றில் ஒன்றே அமையுமாகவும் இவையெல்லாம் சேரினும் கடல்வளனெதிர நெரிக்குமெனக் காவிரியின்சிறப்பை விளக்கிநிற்றலிற் சிறப்பும்மைகள்.

**கககூ - ரு. கழனி...............கானத்து**

(இ - ள்.) அங்ஙனம் ஒலித்தல்செல்லாக் கழனியிற் செந்நெலும் கரும்புஞ்சூழ்ந்த இடத்தையுடைய நீர்நிலைச்செறுவிலுண்டாகிய தாமரைக்காட்டிலென்க.

---

[1] இவற்றைக் கரந்துறைகோட்களென்பர். [4] இடா - இறைகூடை.

[2] புறநானூறு, ககஎ.

[5] மதுரைக்காஞ்சி, அகூ - கூக.

[3] இலட். பக். கநுரு.

ககச - கூ. கம்புட் கோழியும்......பரந்த

வோதையும்

(இ - ள்.) கம்புட்கோழிமுதலியன

வெல்லும்போரைவல்ல அரசரிருவர்

பொருமிடம்போலப் பலவேறுவகைப்பட்ட திறத்தையும்

ஒலியையுமுடையன

வாய் ஒலிக்கும் மிக்க ஓசையுமென்க.

கூக்குரலும் பாடம். கம்புள் - சம்பங்கோழி. கானக்கோழி-கானுங்கோழி; நிலவண்மையாக்கிக்காட்டுக்கோழியென்பாருமுளர். நீர்நிறக்காக்கை-நீர்க்காக்கை. உள்ளு - உள்ளான். ஊரல் - குளுவை; நீர்மேலூர்தலினால், ஆகுபெயர். புள்ளு-கணந்துட்புள். போதா - பெருநாரை, மரக்காரை; புதா, விகாரம். வெல்

போரும், முனையிடமும் வினைத்தொகை. குழூஉக்குரல்

- பலவாயொன்றான

ஓசையுமாம்.

கஉ0 - உச. உழாஅ நுண்டொளி......

காய்த்தலைச் சொரிய

(இ-ள்.) உழவராலுழப்படாத சேட்டுக்குழியிற் சேற்றினுட்புக்கு அழுந்திய கழுவாதமயிரையுடைய யாக்கையையும் சிவந்தகண்ணையுமுடைய எருமை தன் தினவையுடையமுதுகை உரிஞ்சுதலாலே புரிதேய்ந்து அற்றுச்சரிதலுற்ற அழிவுற்ற புரிக்கூட்டினின்ற வளவிய பலவருக்கத்துநெல்லுக் கவரித்தொங்கல்போல

விளைந்துகிடக்கின்ற செந்நெற்கதிர்த்தலையிடத்தே

சொரியவென்க.

தொளி - சேறு.

கஉ௫ - ௯. கருங்கை..............ஒலியே

யன்றியும்

(இ - ள்.) அங்ஙனம் நெற்சொரிதலானே வினைஞரும் ஒன்றுபட நின்றொலிக்கும் ஒலியும், அதுவேயன்றியுமென்க.

களமருங்கூடி

கருங்கை - வலியகை. வினைஞர் - பறையர், பள்ளர் முதலாயினர். களமர்-உழவர்கீழ்க்குடிமக்கள். கருங்கை இருவர்க்கும்பொது.

கஉ௭ - ௱௧. கடிமலர்

களைந்து............விருந்திற் பாணியும்

(இ - ள்.) காலையின் முடித்த பூக்களைந்து முடித்தமுடியிலே முடியினுற்றை நறுக்கிச் சூடிக்கொண்டு வளைந்தவளையையுடைய தோளும் முலையாகமுந்தோய்ந்து சேறுடுகோலத்தொடு அழகுபெறத்தோன்றிச் சிவந்த கயல்போலும் பெரியகண்ணையும் சிறியமொழியையுமுடைய கடைசியர் கடுகமயக்கும் கள்ளை உண்டு தொலைத்ததனுலுண்டான பண் நிறத்திற்சேர்ந்து பழகிப்போதாத பாட்டுமென்க.

என்றது, மதுமயக்கத்தாற் பஞ்சலித்து மயங்கப் பாடினுரென்றபடி. இனிக் கடிமலர்களைந்து முடிநாறழுத்தியென்பதற்குப் போகாப்புல்லாகிய கழி நீர்முதலைப்பறித்து மறித்து அதன்மீதே முடியினைற்றைப் பகுந்துநட்டெனினு மமையும். தோளும் ஆகமும் தோய்ந்துசேருதல் - களித்து ஒருவர்மேல் ஒருவர் சேற்றை இறைத்துக்கோடல். வீறுபெறத்தோன்றலாவது - முலைமேற்றெறித்த சேறு கோட்டுமண் கொண்டாற்போன்றிருத்தல்; * "வாரிய....... கொள்ளா முலை" என்றாற்போல. சின்மொழி - இழிந்தமொழி; சிலவானமொழியுமாம்.

* முத்தொள்ளாயிரம்: "வாரிய பெண்ணை வருகுரும்பை வாய்த்தனபோ, லேரிய வாயினு மென்செய்யுங்—கூரிய, கோட்டானைத் தென்னன் குளிர்சாந் தணியகலங், கோட்டுமண் கொள்ளா முலை"

# கo.—நாடுகாண்காதை.

உஎக

விருந்திற்பாணி – தம் இசையிற் புதுமையுண்டாகப்பாடும் பாட்டெனினுமமை யும்; இதனைப் பெருமுளையென்பாருமுளர்.

கங-உ - ரு.

கொழுங்கொடி.........ஏர்மங்கலமும்

(இ - ள்.) செந்நெற்கதிரோடே அறுகையும் குவளையையும் கலந்து

தொடுத்தமாலையை மேழியிலேசூட்டிப் பாரை இரண்டாகப் பிளப்பாரைப்

போலப் போற்றுவார்தொழப் பொன்னேர்பூட்டிநின்றோர் ஏரைப்பாடும் ஏர்

மங்கலப்பாட்டுமென்க.

சூட்டித் தொழ நின்றோர் பாடும் ஏர்மங்கலமுமென்க.

கஙகு - எ. அரிந்துகால்........முகவைப்
பாட்டும்

(இ - ள்.) நெல்லையரிந்து போரிட்டார்
சூட்டைக் கடாவிடுதலானுண்டான
முகவைப்பாட்டும்;

ஆவது பொலிபாடுதல். முகக்கக் கொடுத்தலின்,

முகவையாயிற்று.

கஙஅ - கூ. தெண்கிணைப் பொருநர்...
...மகிழிசை யோதையும்

இது களவழிவாழ்த்து; என்னை? [1] "தண்பணை
வயலுழவனைத், தெண்கிணை
வன் றிருந்துபுகழ் கிளர்ந்தன்று." வரலாறு: "பகடுவாழ்
கென்று பணிவயலு
ளாமை, யகடுபோ லங்கட் டடாரித்—துகடுடைத்துக்,
குன்றுபோற் போர்விற்
குருசில் வளம்பாட, வின்றுபோ மெங்கட் கிடர்" எனவரும். கிணை - தடாரி;
புட்
பறையென்பதுங்கொள்க.

(இ - ள்.) தெளிந்த ஓசையையுடைய கிணைப்பொருநர் செருக்குதலோ

டெடுத்த மார்ச்சனையையுடைய திரண்டமுழவின து கேட்டோர்மகிழும் இசையின தொலியும்,

கசூ0 - சுக. பேர்யாற்று......அவலங் கொள்ளார்

(இ - ள்.) பெரிய யாற்றடைகரையிலே இவ்வோசைகளை முறையிற்கேட்டு நெஞ்சம்விரும்புதலாலே வழிநடத்தலினுண்டான வருத்தத்தை நெஞ்சிற் கொள்ளாராயென்க.

பரந்தவோதையும் ஆர்க்குமொலியும் விருந்திற்பாணியும் ஏர்மங்கலமும்

முகவைப்பாட்டும் மகிழிசையோதையுமென்னுமிவற்றைப் பேர்யாற்றடைகரைக் கண்ணே நீர்மைபெறக்கேட்டலா லுண்டான விருப்பத்தானே நெஞ்சில் அவலங் கொள்ளாராயென்க.

கசூஉ - எ. உழைப்புலிக்கொடி.....
.....இருக்கை யன்றியும்

(இ - ள்.) புலியைத் தன்னிடத்தேயுடைய கொடியையுயர்த்த தேரை யுடைய உரவோனாகிய கரிகாலனது கொற்றத்துடனே மழைக்கும் கருப்பத் தைத் தோற்றுவிக்கும் அழலை விளக்குகின்ற சாலையினுண்டான மறையோரா லாக்கப்பட்ட தேவருணவின் ஆவி இறையுயர்ந்த மாடமாகிய அகங்களெங்கும்

[1] புறப்பொருள்வெண்பாமாலை, வாகைப்படலம், கஉ.



போர்த்தலானே மஞ்சுசூழ்ந்த மலைபோல மாட்சிமைப்படத்தோன்றும் மங்கல மறையோரிருப்பிடங்களும், அவையன்றியும்,

கசூஅ - ருரு. பரப்புநீர்........சென்ற ளொருநாள்

(இ - ள்.) இரப்பவர்சுற்றத்தையும் புரப்பவர்கொற்றத்தையும் தம் உழவி னிடத்தே விளைப்போருடைய பழைய வலிபொருந்திய வூர்களுமாகிய இவ்விரு வகையூர்களையும் இடையிட்ட நாடெல்லாங்கண்டு நடக்குநாட் காதமென்னும் எல்லையல்லது நடந்துதொலைக்கமாட்டாராய்ப் பலநாட்டங்கி நடக்கின்ற நாளிலே ஒருநாளென்க.

தூற்றுப்பொலி ஆலையிற் பாகுகாய்கின்ற புகையாற் பரக்கப்பட்டு இருட்சி

யையுடைய முகிறவழ்ந்த மலைபோலத்தோன்றும்
பழவிறலூர்களுமென்க.

கொற்றத்தையும் கருவையும், சுற்றத்தையும்
கொற்றத்தையும் அழலினும்
உழவினும் விளைப்போரது இருக்கையும் ஊர்களுமென்க.

[1] காவிரிநீர் கங்கைநீராதலிற்
கங்கையின் புதல்வரைக் காவிரியின் புதல்வ
ரென்முர்; அன்றியும் [2] "மகவாய் வளர்க்குந் தாயாகி"
என்பதனுனுங்கொள்க.

தோன்றுமிருக்கையும் தோன்றுமூர்களுமென வியையும்.
அவ்வூர்களை இடை
யிட்ட நாடென்க. உடன்கண்டென்முர்,
இந்நாட்டுச்சிறப்பெல்லாம் கண்டு
தொலைத்துக் கழிதலருமையின். புதல்வராகி
உழவிடைவிளைப்போரென்க.

கறுசு - சுரு.

ஆற்றுவீ யரங்கத்து.........சாரணர் தோன்ற

(இ - ள்.) ஆற்றை மறைக்கும் அரங்கத்தில்
வேறிடத்தில்லாத தன்மைத்
தாய் வளர்ந்த மூங்கின்முள்ளால் வளைக்கப்பட்ட

வேலியையுடைய மரம்பயின்ற

செறிந்தசோலையில் தேவருறைதற்கொத்த

பூப்பொருந்தியதொருபக்கத்தே பட்

டினப்பாக்கத்து [2] வான்பெருமன்றத்துப்

பிண்டிகீழற்கண்ணே உலகநோன்பிக

ளிடப்பட்ட சிலாதலத்தின்மேலிருந்தருளிப் பெருமகனாற்செய்யப்பட்ட அதிசயங்கள்மூன்றுந் தப்பாத ஆகமநூலினுண்மைத்தன்மையையுடைய தருமவொழுக்கத்தை யாவருங்கேட்கும்படி அருளிச்செய்யும் [2] சாரணர் அப் பட்டினப்பாக்கத்தைவிட்டு நீங்கிவந்துதோன்றவென்க;

அதிசயமூன்றுவன: சகசாதிசயம், கர்மக்ஷயாதிசயம், தெய்வீகாதிசயமென்பன.

வீற்றுவீற்றுகி உடுத்த ஒருசிறைச் சாரணர்தோன்றவென்க.

---

[1] 'கங்கையாருழைச்சென்று காவிரியாரை வாங்கி' என்று கூறினர் நச்சினார்க்கினியரும்; தொல்காப்பியப், பாயிரவுரையிற்காண்க.

[2] சிலப்பதிகாரம், எ: உஎ.

[5] வான்பெருமன்றமென்பதுமுதலாக இங்கே தந்துரைத்தவற்றை, இக்காதை உ0-ஆம் அடி முதலியவற்றிற்காண்க.

[6] சாரணர்-சமணமுனிவர். அவர், தலசாரணர் சலசாரணர் பலசாரணர் புட்பசாரணர் தந்துசாரணர் சதுரங்குலசாரணர் சங்கசாரணர் ஆகாசசாரணரென எண்வகையர்; இவ்விருவராகச்சென்று தருமோபதேசஞ்செய்தல் அவர்கட்கு இயல்பென்பர்.

# க0.—நாடுகாண் காதை.

உஅக

கஞ்ச - க. பண்டைத் தொல்வினை.....
.கொள்ளான்

(இ - ள்.) முன்செய்த பழவினையெல்லாம் கெட்டோடுகவென்று உட்
கொண்டு அவர்வந்தமையைக் கண்டறிந்த
கவுந்தியடிகளுடனேசென்று அவ ரடியிலே தலையுறவீழ்ந்தார்;
அங்ஙனம்வீழ்ந்தவர் ஈண்டுவந்தது தனது விளங்
கிய கோட்பாட்டையுடைய [1] அவதிஞானத்தால் தெரிந்தவனாயினும் ஆர்வமும் செற்றமும் தன்னைவிட்டுப்போம்படி நீக்கிய [2] வீரனாகலாலே இவர்க்குவருந்
துன்பத்திற்குத் தான்வருந்தானாகியென்க.

[3] கண்டறிகவுந்தியென்பதனானும்
காலவுணர்ச்சியின்மையுணர்க.

ஓடு, ஒரு வினையொடு.

களO - எக.

கழிபெரு....................வல்வினை

(இ - ள்.) மிக்க பெரிய தவச்சிறப்பையுடைய கவுந்தி, யாவரானும் ஒழிக்க

ஒழியாததாய் நுகர்விக்க வந்துநிற்கின்ற தீவினையைக்

காணுயென்றுரென்க.

காணுய் - பாராய். ஒழிகெனவொழியாதென்பதற்கு, நீ * 'உரிய தன்றீங்

கொழிக' எனவும் ஒழியாது

ஊட்டுந்தீவினையையெனினுமமையும்.

களஉ - ரு. இட்ட வித்தின்..........ஒண்ணு

(இ - ள்.) விளைநிலத்திட்ட வித்துப்போலப் பயனெதிர்ந்து கண்கூடாக

நல்வினைவந்து நுகர்விக்குங்காலத்தும் ஒழிக்கவொண்ணு;

அதுபோல இதுவும்

ஒழிக்க வொழியாதென்றுரென்க.

[5] "உறற்பால... .........தணிப்பாருமில்"

என்றுராகலின், தீவினைதன்

னையேகூறினுமமையும். உம்மை, எச்சவும்மை.

கஎஅ - ரு. கடுங்கால்..............உடம்பிடை யுயிர்கள்

(இ-ள்.) கடியகாற்றையுடைய நெடியவெளியிலிட்டபட்ட விளக்கென்னும் படி மாயினல்லது கூடி உடனில்லா, உடம்பினின்ற உயிர்களுமென்றாரென்க.

நல்வினை தீவினைப்பயனாகிய இன்பமும் துன்பமும் வருங்கால் யாவரானும் ஒழிக்கவொண்ணாவென்பதூஉம், யாக்கைநிலையாமையும் இவர் தம்பால் உறுவது கண்டு கவுந்தியடிகட்குச் சாரணர்கூறினரெனவுணர்க. விளக்கு உவமித்தார்; நினைவற அழிவதற்கும், புக்குழிப் புலப்படாமைக்கும்.

கஎசு - கக. அறிவ னறவோன்.........பொதியறை யோரென

---

[1] அவதிஞானம் - அதீதகதமானபரிஞ்ஞானம்; அஃதாவது தன்னுடைய முற்பிறப்பையறியுமறிவு.

[2] வந்தசாரணரிருவருள், உபதேசிப்போர் மூத்தோரேயாதலின், வீரனென ஒருமையாற்கூறினர்.

[3] இஃது, 'உரிய தன்றீங் கொழிகென வொழியீர்' (இக்காதையில் ௬௩ - ஆம் அடி) என்பதன் உரையிற்கூறியதை வற்புறுத்தற்கு.

[4] சிலப்பதிகாரம், ௩௦: ௬௩. [5] நாலடியார், பழவினை, ௮;

ரு௬



கஎசு. அறிவன்—(இ-ள்.)

எல்லாப்பொருளையுமறியும் அறிவையுடை
யோன்,

அறவோன்—(இ - ள்.) அறஞ்செய்தலையே தொழிலாகவுடை
யோன்,

அறிவுவரம்பிகந்தோன்—(இ - ள்.) யாவருமறியப்படும் அறி
வெல்லையைக் கடந்தோன்;

கஎஎ. செறிவன்—(இ - ள்) எல்லாவுயிர்கட்கும் இதமுள்ளவன்;
சலியாதவனென்றுமாம்.

சினேந்திரன்—(இ - ள்.) எண்வகைக் கன்மங்களையும் சயித்
தவன,

அவையாவன [1] ஞானவரணீயம், தரிசனவரணீயம், வேதநீயம், மோகநீயம், ஆயுஷ்யம், நாமம், கோத்திரம், அந்தராயமெனவிவை.

சித்தன்—(இ - ள்.) கிருதகிருத்தியன் = செய்யவேண்டுவன

வற்றைச்செய் துமுடித்தவன்,

கன்மங்களைக் கழுவினவனுமென்ப.

பகவன்—(இ - ள்.) * கேவலஞானி,

௧௭௮. தரும முதல்வன்—(இ ள்)

தருமங்களுக்கு அடியாயுள்ளவன்,

தலைவன்—(இ - ள்.) எல்லாத்தேவர்க்கும்

தலைவனாக எண்ணப்

பட்டவன,

தருமன்—(இ - ள்.)

தருமம் தானாயுள்ளவன்,

௧௭௯. பொருளன்—(இ - ள்.) ஆகமத்தின் பொருளாயுள்ளவன்; உண்மைப்பொருளாயுள்ளவனெனவுமாம்.

புனிதன்—(இ - ள்.) சுத்தன்; புதியவனுமென்ப.

புராணன்—(இ - ள்.) பழையவன்,

புலவன்—(இ - ள்.) எல்லார்க்குமறிவாயுள்ளவன்,

௧௮0. சினவரன்—(இ. - ள்.) சினத்தைக் கீழ்ப்படுத்தியவன்,

தேவன்—(இ-ள்.)

தேவர்களுக்கு ஆதியாகிய தேவன்,

---

[1] ஞானவரணீயமுதலியவெட்டும் காதி
நாற்பத்தெட்டாக விரியுமென்பர்.

அகாதியென இருவகைப்பட்டு, நாற்ற

[2] கேவலஞானம் - ஐந்துஞானத்துள்ளுஞ்சிறந்தது. ஐந்து ஞானங்களாவன:— க. மதிஞானம் - சுபாவபுத்தி; உ. சுருதஞானம் - நாலுணர்ச்சி; ங. அவதிஞானம் - தன்னுடைய முற்பிறப்பையறியுமறிவு; ச. மனப்பரியயஞானம் - தன்னுடைய முற்பிறப்பையும் பிறருடைய முற்பிறப்பையும் அறியுமறிவு; ரு. கேவலஞானம் - திரிகாலவுணர்ச்சி.

## கo.—நாடுகாண்காதை.

உ அங

சிவகதி நாயகன்—(இ-ள்.) வீட்டுலகிற்கு

நாயகனுயுள்ளவன்,

கஅக. பரமன்—(இ-ள்.) மேலானவன்,

குணவதன்—(இ-ள்.)

குணத்தையுடையவன்; வதம்-[1] விரத

முமாம்.

பரத்தி லொளியோன்—(இ-ள்) மேலாய

உலகிற்கு விளக்கா

யுள்ளவன்,

கஅஉ. தத்துவன்—(இ-ள்.)

தத்துவங்களையுடையோன்,

சாதுவன்—(இ-ள்.) ஒடுங்கினவன்,

சாரணன்—(இ-ள்.) ஆகாசவாசி,

காரணன்—(இ-ள்.) எல்லாவற்றிற்கும்

காரணமாயுள்ளவன்

=காரணபூதன்,

கஅங. சித்தன்—(இ-ள்.) எண்வகைச்

சித்திகளையுமுண்டாக்கினவன்,

பெரியவன்—(இ-ள்.) எல்லாவற்றினும்

பெரியவன்,

செம்மல்—(இ - ள்.) நாயகமூர்த்தி,

திகழொளி—(இ - ள்.) விளங்கும்

ஒளியாயுள்ளவன்;

கஅ௪. [2] இறைவன்—(இ - ள்.) எப்பொருளினும்

தங்குகின்றவன்,

குரவன்—(இ - ள்.)

குருமூர்த்தியாயுள்ளவன்,

இயல்குணன்—(இ - ள்.) இயல்பையே

குணமாகவுடையவன்,

எங்கோன்—(இ - ள்.) எம்முடையசுவாமி,

கஅ௫. குறைவில் புகழோன்—(இ - ள்.)

நிறைந்த புகழுடை

யோன்,

குணப்பொருட் கோமான்—(இ - ள்.) குணங்களைச் சம்பத்
தாகவுடையவன்,

கஅ௬. சங்கரன்—(இ - ள்.)

சுகத்தைப்பண்ணுகின்றவன்,

ஈசன்—(இ - ள்.) ஐசுவரியவான்,

சயம்பு—(இ - ள்.) தானேதோன்றினவன்,

சதுமுகன்—(இ - ள்.)

நான்குமுகன் = அதிசயத்தோடுநான்

முகன்,

[1] விரதம் - அணுவிரதம், குணவிரதம், சிக்ஷாவிரதமென மூன்றுவகைப்படும்; அவற்றுள், குணவிரதம்:—திக்குவிரதம், தேசவிரதம், அநர்த்ததண்டவிரதமென மூன்றுவகைப்படும்.

[2] இறை - தங்குதல்,



கஅஎ. அங்கம் பயந்தோன்—(இ - ள்.) [1] அங்காகமத்தை யுண்டாக்கினவன்,

அருகன்—(இ - ள்.) பூச்சியன்,

அருண்முனி—(இ - ள்.) சிவபர

மூர்த்தி,

கஅஅ. பண்ணவன்—(இ - ள்.) கடவுள்,

எண்குணன்—(இ - ள்.)

எட்டுக்குணங்களையுடையோன்,

எண்குணமாவன:-அநந்தஞானம், அநந்தவீரியம், அநந்ததரிசனம், அநந்த சுகம், நிர்நாமம், நிர்க்கோத்திரம், நிராயுஷ்யம், அழியாவியல்பெனவிவை.

பாத்தில் பழம்பொருள்—(இ - ள்)

பகுத்தற்கரிய புராணப் பொருளாயுள்ளவன்;

மாம்.

ஒட்டமற்ற பொன்னையொப்பானென்று

கஅக. விண்ணவன்—(இ - ள்) சுவர்க்கவாசி,

வேத முதல்வன்—(இ - ள்.)

ஆகமமூன்றிற்கும் முதலாயுள்ளவன்,

விளங்கொளி—(இ-ள்.)

அஞ்ஞானவிருணீங்க விளங்குமொளி,

கஅ0 - கக. ஓதிய

வேதத்து ......பொதியறை யோரென

(இ - ள்.) இந்நாமங்களையுடையோனலோதப்பட்ட ஆகமமாகிய விளக்

கொளியைப் பெற்ருற்போந்தேறுவதல்லது யாவரும்

பிறவியாகிய சிறையினின்

றும் போகமாட்டாரென்ருரென்க.

[3] பொதியறை - துவாரமில்லாத கீழறை.

கஅஉ - ரு.

சாரணர்..............மேற்கொண்டு

(இ - ள்.) இங்ஙனம் சாரணருளிச்செய்த

உண்மைமொழியைக்கேட்டுத்

தவத்திற்கு முதல்வியாகிய கவுந்தியடிகளும் தமது

கைகளைத் தலைமேல்வைத்துக்

கொண்டு நின்றுகூறுவார்:—

கஅச - ரு. ஒருமூன்று..........செவியகந்

திறவா

(இ - ள்.) எனதுசெவிகள் காமவெகுளிமயக்கங்களைக் கெடுத்தவனுலோதப்பட்ட ஞானபாதமாகிய திருமொழியைக்கேட்டற்குத் திறப்பினல்லது பிறிதொன்றற்குத் திறப்பனவல்லவென்ருரென்க.

அவித்தல் அடக்குதலுமாம்.

---

[1] அங்காகமம், கஉ பகுப்புடைத்து. அவைவருமாறு:—க. ஆசாராங்கம், உ. சூத்திரகிருதாங்கம், ௩. ஸ்தானங்கம், ச. ஸமவாயாங்கம், ரு. வியாக்கியாப் பிரஜ்ஞப்தியங்கம், சு. ஞாதிருகதாங்கம், எ. உபாஸகாத்தியயனங்கம், அ. அந்தக்கிருததசாங்கம், சு. அநுத்தரோபபாதிகதசாங்கம், கO. பிரச்சிநவியாகரணங்கம், கக. விபாகசூத்திராங்கம், கஉ. திருஷ்டிவாதாங்கம்.

[2] ஆகமமூன்றுவன: அங்காகமம், பூர்வாகமம், பகுசுருதியாகமமென்பன.

[3] இது புழுக்கறையெனவும் வழங்கும்; மணி. ௩: சுகு; உ௩: சுO.

## ௬௰.—நாடுகாண்காதை.

உ-அரு

கக௬ - ஏ. காமனை....................நவிலா

தென்னு

(இ - ள்.) என்நாவும் காமன்செயலை

வென்றவனுடைய ஆயிரத்தெட்டு

வகைப்பட்ட நாமம் நவிலினல்லது பிறிதொன்றனை

நவிலாதென்றுரென்க.

கக௭ - க. ஐவரை

வென்றோன்......காணு வென்கண்

(இ - ள்.) எனதுகண்களும் ஐவகைப்பட்ட

இந்திரியங்களையும் வென்றவ

னுடைய அடியிணைகளைக் காணினல்லது பிறிதொரு

தேவரடியிணைகளைக் கைய

கத்தேகாணினும் காணுவென்றுரென்க.

ஐவர், செறலின்கண் திணைமயக்கம். இனிக்

கைவரைகாணினும் பாட

மாயின், கைவரைகாணல் கண்விழித்தலாக்கி

விழித்திருப்பினும் காணுவென்க.

உ00 - உ0க. அருளறம்

பூண்டோன்........பொருந்ாது . (இ - ள்.)

எனது பயனற்றயாக்கை அருளால் அறத்தைப்பூண்டோ
னுடைய திருமேனிப்பொருட்டுப் பூமியிற்பொருந்தினல்லது
பிறிதொன்றற்குப்
பொருந்ாதென்றுரெனக.

அருளறம், உம்மைத்தொகையுமாம்.

உ0உ - ந. அருகரறவன்........................குவியா

(இ - ள்.) எனது இருகையும் அருகர்க்கு அறத்தைக்கூறுவோனுகிய
அறிவன்பொருட்டு என்சிரத்தின்மிசையே குவியினல்லது
பிறிதொரு தேவர்
பொருட்டுக் குவியாவென்றுரெனக.

அருகர் - இருடிகள்.

உ0௩ - ரு. மலர்மிசை..............................
.பொருஅது

(இ - ள்.) எனது தலையினுச்சியும் பூவின்மீதே
நடந்தோனுடையமலரடி
யாகிய அணியை அணியப் பொறுப்பினல்லது
பிறிதொன்றனையும் அணியப்
பொறுதென்றுரெனக.

உ0சு - எ. இறுதியி லின்பத்து......

..........பெயராது

(இ - ள்.) என்மனமும்

ஈறிலின்பமாகிய அநந்தசுகத்தையுடைய இறைவ

னருளிச்செய்த ஆகமமாகியமொழியை உருவேற ஓதிப்

புடைபெயரினல்லது

பிறிதொருமொழியையோதிப்

புடைபெயராதென்றாரென்க.

மறுதர - மீளவும்.

உ0அ - கஅ. என்றவ

ளிசைமொழி......பணிந்தனர் போந்து (இ -

ள்.) தம் கையைத் தலைமேற்கொண்டுநின்று, கவுந்தியடிகள்,

திறவா;

நவிலாது; காணு; பொருந்தாது; குவியா; பொருது; பெயராதென்றுகொண்டு அவன்புகழ்மொழிகளை ஏத்தக்கேட்டு அதற்குப் பொருந்தியசாரணர் அவ்விடத்திட்டபட்ட சிலாவட்டத்தினின்றுமெழுந்து அதற்கு ஒருமுழவுயரம் மேலாநின்று பிறப்பைத்தரும்பாசம் கவுந்திக்குக் கெடுவதாகவென்றுகூறி அந்தர வழியாக விரைந்துசெல்கின்றவரைநோக்கித் தொழுது பாசங்கள் அறுக வென்று பணிந்தனராய்ப் போந்தென்க.

உகச - அ. காரணி

பூம்பொழில்......பூம்பொழி லிருந் துழி

(இ - ள்.) முகிலையணிந்த பொழிலையுடைய காவிரியாகிய பெரியயாற் றிற்கு மாதரும் கணவனும் கவுந்தியடிகளும் பள்ளியோடத்தேறிப்போய்த் தென்கரையைச்சென் றெய்திப் போதுகள் சூழ்ந்துகிடக்கின்றதோர் பொலி வினையுடைய பொழிலிடத்தே சென் றிருந்தபொழுதிலென்க.

உகக - ௨0. வம்பப்

பரத்தை......................சென்றோர்

(இ - ள்.) [1]இடங்கழிகாமத்தளாகிய குண்டக்கணிகையொருத்தியும் ஒருவ னுங்கூடி இவர்களிருக்கின்ற மணம்பரந்ததோர் பொழிலிடத்தே அணுகின ராய்ச் சென்றவரென்க.

வம்பப்பரத்தை - புதிய பரத்தைத்தன்மையையுடையாள்; குண்டமென்ற படி. இனி மனவெழுச்சியால் தோன்றினபடி சொல்லித்திரியும் பரத்தை யென்றுமாம். வறுமொழியாளன் - பயனில்சொல்லாளன்; விடனென்றபடி.

உஉக - உ. காமனுந் தேவியும்.........அறிகுவ

மென்றே

(இ - ள்.) இவ்விடத்துவந்திருக்கின்ற காமனையும்

இரதியையுமொக்கு

மிவர்களை யாரென்றுகேட்டு

அறியக்கடவோமென்று சொல்லியென்க.

இனி, இவ்விடத்துவந்தவிவர் காமனும்

தேவியுமே; அல்லராயின், யாரெ

னக் கேட்டறிகுவமென்றுரெனினுமமையும்.

இப்பொருட்குப் போலி ஒப்பில்

போலி. ஈங்கிவர்: ஈங்கு - இவ்விடத்து. கேட்டீங்கு:
ஈங்கு - இப்பொழுது.

உஉரு - ச. நோற்றுணல் யாக்கை..............

.வினவ

(இ - ள்.) [1] உவாமுதலிய

விரதநாட்களிற் பட்டினிவிட்டுண்டலான் மெலி

ந்தயாக்கையையும் நுண்ணிய தவத்தையுமுடையீர்!

நும்மொடுகூடி வழிவந்த

இவர் யாரென்று வினவவென்க.

ஆற்றுவழிப்பட்டோர் - வழியிற் கூடிவந்தோர்.

உஉசு - சு. என்மக்கள்..............[3] பரிபுலம்

பினரென

(இ - ள்.) அவ்விருவரும்

இவ்விருவரையும் வினவுதல்கண்ட கவுந்தியடிகள்

இவர் என்மக்கள்காணும் ; நீர்சொன்ன காமனும்

தேவியுமல்லர் ; மாணிடயாக்

கையர்; வழிவரும் வருத்தத்தால் மிகவும் வருந்தினர் ; அவருழைச்செல்லாதே விடப்போமினென்றுரெனக.

பரி - மிகுதி ; பரிபுலம்பினர், ஒருசொல்லுமாம்.

உ௨எ - அ. உடன்வயிற்றோர்கள்........ ..கற்றறிந் தீரென

(இ - ள்.) நூல்களையுங்கற்று

அதன்பயனையுமறிந்தவரே!' ஒருவயிற்று

உடன் பிறந்தோர் கொழுநனும் மனைவியுமாய்க்

கூடிவாழ்க்கடவதென்று நீர்

கற்றநூல்களிற் சொல்லிக்கிடப்பதுமுண்டோ?

உண்டாகிற் சொல்லுமென்று

ரெனக.

---

[1] இடங்கழிகாமம் - மிக்ககாமம்; மணிமேகலை க௮ - வது காதை, ககக.

[2] "ஒவா திரண்வேவு மட்டமியும் பட்டினிவிட்டு" சீவகசிந்தாமணி, கடுசஎ.

[3] "பரிபுலம் பினனிவன், றுனே தமியன் வந்தனன்" மணி. கசு : ௭ - அ.

௧0.—நாடுகாண் காதை

கற்றறிந்தீரென்றது இகழ்ச்சி; இவ்வாறே நீர்
கற்றனவுமென்பதாம்.                    உஉக - ௬௦. தீமொழி
கேட்டு............ .....உரையீரோவென

(இ - ள்.) இங்ஙனம் இவரிகழ்ந்தமொழியைக்
கேட்டலாற் செவியைப்
புதைத்துக் கண்ணைநிடுங்க, என்பூங்கோதைபோல்வாளை
இவரிகழ்கின்றனர்;
இவ்விகழ்ச்சியால் துடக்குமுட்களையுடையகாட்டில்
நுழைந்துதிரியும் முதுநரி
யாகக்கடவரெனக் கவுந்தியடிகளிட்டசாபம் தவத்தின்விளைவாகிய
சாபமாதலால்
அவரைச் சென்று பூண்டதாதலின், அங்ஙனம்
விளைந்தபடியையறியாராகிய
கோதையும் நம்பியும் குறியநரியினது
நெடியகுரலாகக்கூவும் விளியைக் கேட்டு
நடுங்கிச்சென்று ஒழுக்கநெறியினின்றும் நீங்கியோர்
நீர்மையல்லாதனவற்
றைச்சொல்லினும் இஃது அவர் அறிவின்மையாற் கூறியதன்றேவென்று
உயர்ந்தோர் தமதறிவான் உணரவேண்டும்; செய்தவத்தீர், உம்முடைய திரு
முன் பிழைத்த இவர்க்கு இனிச் சாபநீங்கி உய்தலுடைத்தாங்காலத்தை உரைத்

தருளீரென்றுகூறவென்க.

போலும், ஒப்பில்போலி. முதுநரி - ஓரி.

நடுங்கியென்றார், தம்பொருட்

டாகவிளைதலின். ஓகாரம், இசைநிறை. அடிகள்

மனத்தால் நினைத்திட்டசாப

மாதலாற் பட்டதையறியாரென்றார். இங்ஙனம்

அறியாதவர்கள் அவர்சொன்ன

இகழ்ச்சியாலும் இதற்கு இவரல்லது வேறு

சபிக்கவுரியாரின்மையானும்

உய்திக்காலமுரையீரென்றார். விளி - ஓரிக்குரல். 'நெறியி

னீங்கியோர் நீரல

கூறினு, மறியா மையென் றறியல் வேண்டும்' என்னுந்துணையும் அவருட்கோள். பின்னதை அடிகட்குக் கூறினர்.

உ௬௪ - ரு. அறியாமையினின்று.........

.சாபவிடை செய்து

(இ - ள்.) தமது மூப்பொறிகளான்வரும்

துன்பமென்பதனை அறிந்து

கூறுமையானே இன்று இழிபிறப்பையுற்றவிவர்

உறையூர் மதிற்புறமாகிய

காவற்காட்டிற்றிரிந்து பன்னிரண்டுதிங்கள் இங்ஙனம் துன்பமுழந்தபின்னர் முன்னைப்பிறப்பைப் பெறுவாராகவெனச் சாபவிடைசெய்தென்க

இன்று இழிபிறப்புற்றோரென்றது நெடுங்காலம் தவஞ்செய்துபெற்ற மக்கட்பிறப்பை ஒருவார்த்தையினிழந்து இழிபிறப்புற்றாரென்றவாறு; எனவே [1]யாகாவாராயினும் நாகாத்தல் வேண்டுமென்பதாயிற்று; “ஆக்கப்படுக்கும்...... வெல்லுமாறே” [2]என்பதூஉமாயிற்று. நொச்சியொருபுடையென்றது வேறு அரண்வேண்டாமை விளக்கிற்று; [3]“நொச்சி வேலித் தித்த னுறந்தை” என்றதுமது. இழிபிறப்பு - விலங்கின்பிறப்பு. முன்னையுருவம் - வம்பப்பரத்தையும் வறுமொழியாளனுமெனவுமாம்.

உசடு - அ. தவப்பெருஞ் சிறப்பின்........புக்கனர் புரிந்தென்.
(இ - ள்.) தவத்தான்மிக்க சிறப்பையுடைய கவுந்தியடிகளும் தேவியும் கணவனும் முறம்போலுஞ்செவியையுடைய யானையைச் சமரிடத்துக்கெடுத்த

[1] திருக்குறள், கஉஎ.
[2] “ஆக்கப் படுக்கு மருந்தனைவாய்ப் பெய்விக்கும், போக்கப் படுக்கும் புலைநரகத் தாட்பிக்குங், காக்கப் படுவன வித்திய மைந்தினு, நாக்கல்ல தில்லை நனிவெல்லு மாறே” (விளம்பநி.)  [3] அகநானூறு, கஉஉ.



புறத்தே சிறையையுடைய கோழியென்னுநகரின்கண்ணே விருப்பத்தோடு புக்காரென்க.

வாரணம் - கோழி; ஆவது உறையூர்.
முற்காலத்து ஒருகோழி யானை

யைப் போர்தொலைத்தவான் அங்கிலத்திற்செய்த நகர்க்குக் கோழியென்பது பெயராயிற்று. அந்நகர் காண்கின்றபொழுது சிறையும் கழுத்துமாக ஆக்கிய வதனாற் புறம்பே சிறையையுடைய கோழியென்றாயிற்றென்பாருமுளர்; அற்றன்று; புறஞ்சிறைவாரணமென்பது சிலேடை: புறத்தே சிறையையுடைய கோழியும், புறஞ்சேரியையுடைய உறையூரும்; [1] "புறஞ்சிறைப் பொழிலும்" என்ப மேலுமாகலின்.

பணிந்தனர்போந்து எய்தி இருந்துழிச் சென்றோர்
வினவப் பரிபுலம்பின
ரெனக் கடவதுமுண்டோ கற்றறிந்தீரெனச்
செவியகம்புதைத்து நடுங்க முது
நரியாகெனக் கட்டியதாதலின் உரையீரோவெனப்
பெறுக ஈங்கிவரெனச்

சாபவிடைசெய்து கவுந்தியும் தேவியும் கணவனும் புரிந்துபுக்காரென்க.

இஃது எல்லாவடியுந் தம்முளொத்துமுடிதலின் நிலைமண்டிலவாசிரியப்பா.

## கO.—நாடுகாண்காதை முற்றிற்று.

---

## கட்டுரை.

௧ - ௨. முடியுடை.........உதித்தோர்—மூவேந்தருள்ளும் சோழர் குலத்து உதித்தோருடைய; மூவர் - சோழர் பாண்டியர் சேரர்.

௩. அறன்—"அறவணம்படை" என்றது; [இந்திர. ௧௭௧.] தருமாசனமென் பாருமுளர்.

மறன்—"இமையவ ருறையுஞ் சிமையப் பிடர்த்தலைக், கொடுவரி யொற்றி" என்றது; [இந்திர. ௧௭ - அ.]

ஆற்றல்—"கோநகர் காத்த" என்றது; [கடலாடு. அ.)

௪. மூதூர்ப்பண்பு மேம்படுதல்—"புகாரேயாயினும்" என்றது; [மங்கல. ௧௫.]

௫. விழவுமலிசிறப்பு—"விண்ணவர் தலைவனை விழுநீ ராட்டி" என்றது; [இந்திர. ௧௬அ.]

விண்ணவர்வரவு—"அந்தரத் துள்ளோ ரறியா மரபின், வந்து காண் குறூஉம் வானவன் விழவு" என்றது; [கடலாடு. ௭௨ - ௩.]

௭. குடி—"இரட்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமு, முழவிடை விளைப்போர்" என்றது; [நாடுகாண். ௧௪௧ - ௫.]

---

[1] சிலப்பதிகாரம், ௧௪:. ௧.

## ௰.—நாடுகாண்காதை.

௨அ௧௬

கூழின்பெருக்கம்— "குமரிக் கூட்டிற் கொழும்பல் லுணவு, கவரிச் செந்நெற் காய்த்தலைச் சொரிய" என்றது; [நாடுகாண். ௧௨௩ - ௪.]

எ - அ. அவர்தம் தெய்வக்காவிரித்

தீதுதீர்சிறப்பு — "கரியவன்

..........ஒலிக்கும்" என்றது; [நாடுகாண்.

க01உ - கூ.]

கூ. பொய்யா வானம் புதுப்புனல்

பொழிதல்—"மழைக்கரு வுயிர்க்கு மழற்றிக முட்டின்

மறையோர்" என்றது; [நாடுகாண். கசஙூ - ச.]

க0. அரங்கு—"நூனெறி மரபி னரங்கம்" என்றதும்,

வரங்கில்" என்றதும். [அரங்கேற்று. கூகூ, க0சு.]

"தோற்றிய

ஆடல்—"ஆடலும்" என்றது; [அரங்கேற்று.

கசு.]

தூக்கு—"தூக்கும்" என்றது; [ ,, கசு.]

வரி—கண்கூடுவரிமுதல் எடுத்துக்கோள்வரியிறுதியாகவுள்ள எட்டு வரியும்; [வேனிற். எச - க0அ.]

கக. பாரதி விருத்தி—நாடகவுறுப்பாகிய பாரதிவிருத்தி; அது கடலாடுகாதையிற் கூறப்பட்டுள்ள பதினோராடலும்; [கடலாடு. ஙக - கூரு.]

கஉ. திணைநிலைவரி—"கடல்புக்கு" என்னுங் கவிமுதல் "சேரன் மடவன்னம்" என்பதிறுதியாகவுள்ள ஏழும்; [கானல். கஎ - உரு.]

இணைநிலைவரி—சார்த்துவரி முதலாகிய பலவரிகளால்வருவன.

[கானல்வரியிற்காண்க]

கா. யாழின்குருதி—"சித்திரப்படம்" முதல், "பட்டடை" ஈருக வுள்ளன; [கானல்வரி, க.]

கச. ஈரேழ்சகோடம்—"ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வி" என்றது; [அரங்கேற்று. எ௦.]

இடநிலைப்பாலை—"குரல்வா யிளிவாய்க் கேட்டனள்" என்றது; [வேனிற். ஙரு.]

கரு. தாரத்தாக்கம்—"குரலீருகவும்" என்பதனுல், தாரம் குரலாகிய விளரிப்பாலைபிறக்குங்கால் தாரம் ஆக்கம்பெறுதல்காண்க; [வேனிற். ஙஅ.]

தான்றெரிபண்—அகநிலைமருதம், புறநிலைமருதம், அருகியன்மருதம், பெருகியன்மருதமென்னும் பண் நான்கும் தெரியுந்திறன்; [வேனிற். ஙக - ச௦.]

கசு. ஊரகத்தேர்—"மகர வாசிகை..........வீதி" என்றது; [இந்திர. கருக - கூ.]

ஒளியுடைப்பாணி—"சீரியல் பொலிய" என்றது; [அரங்கேற்று. கஙரு.]

ஙஎ



கஎ. என்றிவையனைத்தும்—என்றுசொல்லப்பட்ட இவைகள் யாவும்,

கஎ - அ. பிறபொருள்......................நிலைமையும்

சொல்லாதொழிந்த பிறபொருள்கள்வைத்த வைப்போடே பொருந்தித் தோன்றும் ஒப்பற்ற முறைமை நிலைபெறலும்,

கக - உ0. ஒருபரிசா நோக்கிக்கிடந்த புகார்க்காண்டம் முற்றிற்று—ஒருபடிப்பட நோக்கிக்கிடந்த புகார்க்காண்டம் முற்றியது.

## முதலாவது புகார்க்காண்டத்தின்

அடியார்க்குநல்லாருரை முற்றிற்று.

---

## இரண்டாவது மதுரைக்காண்டம்.

### கக.—காடு காண்காதை.

திங்கண்மூன் றடுக்கிய திருமுக்
குடைக்கீழ்ச்

செங்கதிர் ஞாயிற்றுத் திகழொளி சிறந்து
கோதைதாழ் பிண்டிக் * கொழுநிழ லிருந்த
வாதியி றோற்றத் தறிவனை வணங்கிக்

ரு. † கந்தன் பள்ளிக் கடவுளர்க் கெல்லா
மந்தி லரங்கத் தகன்பொழி லகவயிற்
சாரணர் கூறிய தகைசா னன்மொழி
மாதவத் தாட்டியு மாண்புற மொழிந்தாங்
கன்றவ ருறைவிடத் தல்கின ரடங்கித்

௧௦. தென்றிசை
மருங்கிற் செலவுவிருப் புற்று

வைகறை யாமத்து ‡ வாரணங் கழிந்து
வெய்யவன் குணதிசை விளங்கித் தோன்ற

---

க.

திங்கள்மூன் றடுக்கிய - மூன்று திங்களை அடுக்கினாலொத்த.

௬. அறிவனென்றது - உறையூர் ஸ்ரீகோயில் நாயனுரை.

௨ - ௬. (பா) ஞாயிற்றைப்போல ஒளிசிறந்த அறிவன்; சிறந்தகோதை யெனக்கூட்டினுமாம்.

௫. கந்தன்பள்ளி - உறையூர் ஸ்ரீகந்தன்பள்ளி.

௬. அந்தில், அசைநிலை. அரங்கம் - திருவரங்கம்; ஆற்றின்குறையென் பாருமுளர்.

௯. அல்கினரடங்கி - விட்டு அங்குத் தங்கி. ௧௨. இருக்கை - இருப்பிடம்.

(௬) அரங்கத்திற்கண்ட (௭) சாரணர்சொன்ன தருமவுரையைக் (௫) கடவுளர்க்கு (௮) மொழிந்து (௧௧) வாரணங்கழிந்துவழிக்கொண்டு (௧௨) இளமரக்கானத்துப் புக்குழியென்க.

---

(பி - ம்.) * 'குளிர்நிழல்' † 'கந்தம்பள்ளி' ‡ 'வாரணங்காட்டவெய்யவன்'



வளநீர்ப் பண்ணையும் வாவியும் பொலிந்தோ

ரிளமரக் கானத் திருக்கை புக்குழி

௧௫. வாழ்க வெங்கோ மன்னவர் பெருந்தகை

யூழிதொ * றாழிதொ றுலகங் காக்க

[1] வடியிற் றன்ன வரசர்க் † குணர்த்தி

வடிவே லெறிந்த வான்பகை பொறாது
* பஃறுளி யாற்றுடன் பன்மலை
யடுக்கத் துக் .
உ0. குமரிக் ‡ கோடுங் கொடுங்கடல்
கொள்ள
வடதிசைக் கங்கையு மிமயமுங் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி
திங்கட் செல்வன் றிருக்குலம் விளங்கச்
செங்கணா யிரத்தோன் றிறல்விளங் காரம்
உரு. பொங்கொளி மார்பிற் பூண்டோன் வாழி
முடிவளை யுடைத்தோன் முதல்வன் சென்னியென்
றிடியுடைப் பெருமழை § யெய்தா தேகப்
பிழையா || விளையுட் பெருவளஞ் சுரப்ப
மழைபிணித் தாண்ட மன்னவன்
வாழ்கெனத்
௩0. தீதுதீர் சிறப்பிற் றென்னனை வாழ்த்தி
மாமுது மறையோன் வந்திருந் தோனை

யாது நும்மூ ரீங்கென் வரவெனக்
கோவலன் கேட்பக் குன்றாச் சிறப்பின்
மாமறை யாளன் வருபொரு ளுரைப்போ

(ச) வணங்கி (அ) மொழிந்து (கச) கானத்திருக்கை புக்குழியென்க.

கஎ. அடியில் தன்னளவு அரசர்க்கு உணர்த்தி – கடலினளவை அடியாலே இன்ன அளவினது இதுவென்று அரசர்க்குக்காட்டி; அன்றி அடியினாலே தன்பெருமையை அரசர்க்கு அறிவித்தென்பாருமுளர்.

கஅ. வேலானுமெறிந்தபகை.

கக. பஃறுளியாறு – குமரிப்பக்கத்ததோர் யாறு.

உ0. கோடு – கரை. கொடுங்கடல்கொள்ள – வளைந்தகடல்கொள்ளுகையி[லே.

உக. முதல்வன் – இந்திரன்; இந்திரன்சென்னிமுடியிலே வளையுடைத்தோனென்க.

[1] கஎ - உஉ: "மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின், மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப், புலியொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை, வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்" கலித்தொகை, க0ச.

[2] பஃறுளியாறு: புறநானூறு, உ.

(பி - ம்.) * 'ஊழியுலகம்' † 'உணர்த்திய' ‡ 'கோடுகொடுங்' § 'பெப்யாதேக' || 'வினையுள்'

## கக.—காடுகாண் காதை.

௩௫. னீல மேக நெடும்பொற் குன்றத்துப்

பால்விரிந் தகலாது படிந்தது போல
[1] வாயிரம் * விரித்தெழு தலையுடை யருந்திறற்
பாயற் பள்ளிப் பலர்தொழு தேத்த
விரிதிரைக் காவிரி வியன்பெருந் † துருத்தித்

௪0. திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்

வீங்குநீ ரருவி வேங்கட மென்னு
மோங்குயர் மலையத் துச்சி மீமிசை

[2] விரிகதிர் ஞாயிறுந் திங்களும் விளங்கி
யிருமருங் கோங்கிய விடைநிலைத் தானத்து
௪௫. மின்னுக்கோடி யுடுத்து விளங்குவிற் பூண்டு
நன்னிற மேக நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமுந்

தகைபெறு தாமரைக் கையி னேந்தி
நலங்கிள ராரம் மார்பிற் பூண்டு
௫0. பொலம்பூ ‡ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்க ணெடியோ னின்ற வண்ணமு
மென்கண் காட்டென் றென்னுளங் கவற்ற

வந்தேன் குடமலை மாங்காட் டுள்ளேன்
றென்னவ ணாட்டுச் சிறப்புஞ் செய்கையுங்

ருரு. கண்மணி குளிர்ப்பக் கண்டே னாதலின்
வாழ்த்திவ ணிருந்தே னிதுவென் வரவெனத்
தீத்திறம் புரிந்தோன் செப்பக் கேட்டு
மாமறை § முதல்வ மதுரைச் செந்நெறி
கூறு நீயெனக் கோவலற் குரைக்குங்
சு௦. கோத்தொழி லாளரொடு கொற்றவன் கோடி
வேத்திய லிழந்த வியனிலம் போல

ருஉ. (பா) கண்கள் என் னுள்ளத்தைக்கலக்குதலாலே; கண், எழுவாய்.
ருஎ. தீத்திறம் - அக்கினிகாரியம். சு௦. தொழிலாளர் - மந்திரிகள்.

[1] "பூமின்னவிர் சுடர்மணி யாயிரம் விரித்த, கல்வநா வருந்தலைக் காண்பின் சேக்கைத், துளவஞ் சூடிய வறிதுயி லோனும்" பரி. கங.
[2] ௩௩ - ௫௧. "பருவம் வாய்த்தலி னிருவிசும் பணிந்த, விருவேறு மண்டிலத் திலக்கம் போல, நேமியும் வளையு மேந்திய கையாற், கருவி மின்னவி ரிலங்கும் பொலம்பூ ணருவி யுருவி னாரமொ டணிந்தநின், றிருவரை யகலம்." பரி. கங.
(பி - ம்.) * 'விரிந்ததலை' † 'தருத்தியுட்டிருவமர்' ‡ 'ஆடைபொலித்துதோன்றிச்' § 'முதல்வன்'



வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்
றனலங் * திருகத் தன்மையிற் குன்றி
[1] முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து
சுரு.

+ நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளுங்
காலை யெய்தினிர் காரிகை ‡ தன்னுட
னறையும் பொறையு மாரிடை
மயக்கமு
நிறைநீர் வேலியு முறைபடக்
கிடந்தவிற்
எ0. நெடும்பே ரத்த நீந்திச் சென்று
கொடும்பை நெடுங்குளக் கோட்டகம்
புக்காற்
பிறைமுடிக் கண்ணிப்
பெரியோ னேந்திய
வறைவாய்ச் சூலத்
தருநெறி கவர்க்கும்
வலம்படக் கிடந்த வழிநீர் துணியி
எ௫. § னலறுதலை மராமு முலறுதலை
யோமையும்
பொரியரை யுழிஞ்சிலும் புன்முளி
மூங்கிலும்
வரிமரற் றிரங்கிய கரிபுறக் கிடக்கையு

நீர்நசைஇ வேட்கையின்

மானின்று விளிக்குங்

கானமு மெயினர் கடமுங் கடந்தா

௪0. லைவன வெண்ணெலு

|| மறைக்கட் கரும்புங்

கொய்பூந்

தினையுங் கொழும்புன் வரகுங்

---

௬௫ நலந்திருக - நலம்வேறுபட.

௬௮. அறை - கற்பாறை.

பொறை - பொத்தைமலை; சிறுமலை. ஆரிடை -

அருவழி.

௬௯. நிறைநீர் வேலி - நிறைந்த நீர்க்கு வேலியான

ஏரிகரை.

௭௧. கொடும்பை - கொடும்பாளூர்; அவ்வூரிலே

நெடுங்குளக்கரைக்கு

உள்ளாகப்புக்கால்.

௭௩. அறைவாய் - அற்றவாய்; சூலம்போலக் கவர்க்கும்.

௭௫. அலமுதலை - விரிந்ததலை.

எகூ. புல்முளி மூங்கில் - தீண்டுலர்ந்த மூங்கில். எகூ. கடம் - வழி.
அூ0. அறுத்தலையுடைய கண்ணையுடையகரும்பு.

---

[1] கச - கூ: மதுரை. ககச - ந; தொல். அகத்திணை. சூ. உ0 - இளம்; ௯ ௯ சூ. உ - ந; தொல். முதற் சூத்திரவிருத்தி, மேற்; கருத்து: சீவக. உக0கூ.

(பி - ம்.) * 'திருகி' † 'நல்லியல்பழித்து', 'நல்லியல்பிறந்துநடுங்குதுறபருவத்து' ‡ 'தன்னெறிமேறையும்' § 'அலர்தலை', 'அலந்தலை' ‖ 'அறைகட்'

## கக.—காடுகாண்காதை.

உகூ0

காயமு மஞ்சளு மாய்கொடிக் கவலையும்
வாழையுங் கமுகுந் * தாழ்குலைத் தெங்கு
மாவும் பலாவுஞ் † சூழடுத் தோங்கிய
௫. தென்னவன் சிறுமலை ‡ திகழ்ந்து தோன்று
மம்மலை வலங்கொண் டகன்பதிச் செல்லுமி
னவ்வழிப் § படரீ ராயி னிடத்துச்
செவ்வழிப் பண்ணிற் சிறைவண் டரற்றுந்
தடந்தாழ் வயலொடு ‖ தண்பூங் காவொடு
௯0. கடம்பல கிடந்த காடுடன் கழிந்து

திருமால் குன்றத்துச் செல்குவி ராயிற்
பெருமால் கெடுக்கும் பிலமுண் டாங்கு

விண்ணோ ரேத்தும் வியத்தகு மரபிற்
புண்ணிய சரவணம் ¶. பவகா ரணியோ
கூடு. டிட்ட சித்தி யெனும் பெயர் போகி
விட்டு நீங்கா விளங்கிய பொய்கை
முட்டாச் சிறப்பின் மூன்றுள வாங்குப்
புண்ணிய சரவணம் பொருந்துவி ராயின்
விண்ணவர் கோமான் விழுநூ லெய்துவிர்
க00. ** பவகா ரணிபடிந் தாடுவி ராயிற்
†† பவகா ரணத்திற் பழம்பிறப் பெய்துவி
ரிட்ட சித்தி யெய்துவி ராயி

---

அஉ. காயம் - வெள்ளுள்ளி.

அடு. சிறுமலையென்றது - ஒருமலை.

அசு. வலங்கொண்டு - வலத்திட்டு. அகன்பதி - மதுரை. அஎ. இடத்து - இடப்பக்கத்து. கூ0. கடம் - பாலைநிலத்துவழி. கூக. திருமால்குன்றம் - அழகர்திருமலை. கூஉ. ஆங்கு - அப்பிலத்துவாய்.

கசு. விட்டுநீங்கா - தம்மினீங்கா.

கள. சிறப்பு - விசேடம்; இந்தவிசேடம் எக்காலத்துமுள. மூன்றுள - மூன்றுபொய்கையுள.

கஅ. பொருந்துதல் - ஆடுதல்.

கக. விழுநூல் - ஐந்திரவியாகரணம். எய்துவிர் - உணர்விர்.

---

(பி - ம்.) * 'சூழ்குலைத்' † 'குழுமேத்தோங்கித்' ‡ 'திகழுத்' § 'படிஇராயி னிடத்ததுசெவ்' || 'தன்பெருங்கா' ¶ 'பவகாரணிய மிட்டசித்தியெனப்பெயர்' ** 'பவகாரணியம்படிந்தாடுவிர்' †† 'பவகாரணத்துப்'



னிட்ட சித்தி யெய்துவிர் * நீரே
யாங்குப் பிலம்புக வேண்டுதி ராயி

கoரு. ணோங்குயர் மலையத் துயர்ந்தோற்
றெழுது

சிந்தையி லவன்றன் சேவடி வைத்து
வந்தனை மும்முறை மலைவலஞ் செய்தா
னிலம்பக வீழ்ந்த சிலம்பாற்
றகன்றலைப்

பொலங்கொடி மின்னிற் புயலைங்

கூந்தற்

கக0. கடிமல ரவிழ்ந்த கன்னிகா ரத்துத்
தொடிவளைத் தோளி யொருத்தி

தோன்றி

யிம்மைக் கின்பமு மறுமைக் கின்பமு
மிம்மையு மறுமையு மிரண்டு † மின்றியோர்
செம்மையி னிற்பதுஞ் செப்புமி ‡ னீயிரிவ்
ககரு. § வரைத்தாள் வாழ்வேன்

வரோத்தமை யென்பே

னுரைத்தார்க் குரியே னுரைத்தீ ராயிற்
றிருத்தக் கீர்க்குத் திறந்தேன்

கதவெனுங்

கதவந் திறந்தவள் ‖ காட்டிய

நன்னெறிப்

புதவம் பலவுள ¶ போகிடை கழியன
கஉ0. வொட்டுப் புதவமொன் றுண்டத

னும்பர்

வட்டிகைப் பூங்கொடி வந்து தோன்றி
யிறுதியி லின்ப மெனக்கீங் ** குரைத்தாற்

---

க0எ. வந்தனை - வந்தனையோடே.

க0அ. சிலம்பாறென்றது - ஓராறு. அகன்றலை - அகன்றவிடம்.

க0க - கக. பொற்கொடிபோன்ற ஒளியினையும், புயல்போலும் ஐங்கூந்த

லையுமுடைய தொடிவளைத்தோளாள் ஒருத்தி கன்னிகாரம்போலத் தோன்றி; 'கன்னிகாரம்போல' என்றார், மதாணியணிந்திருத்தலின். கோங்கடியிலே தோன்றியென்றுமாம்,

கஉ. இம்மைக்கின்பம் - பொருள். மறுமைக்கின்பம் - புண்ணியம்.

கக௩ - ச. இரண்டுமின்றிச் செம்மையினிற்பது - வீடுபேறு.

ககரு. உரியேன்-தொழில்செய்வேன். ககஎ. திறந்தேனென்றது, விரைவு.

ககக. போகிடைகழியன - நீண்ட இடைகழியினுள்ளன.

கஉ0. ஒட்டுப்புதவம் - இரட்டைக்கதவம்.

கஉக, வட்டிகையிலெழுதிய கொடிபோல்வாள்.

கஉஉ. இறுதியிலின்பம் - வீடு.

---

(பி - ம்.) * 'நீரென' † 'இன்றிச்செம்மை' ‡ 'நீவிர்' §. 'வரைத்தாழ்' ||. 'வாட்டியவந்தெதிர்' ¶ 'போகிடைகழியின' ** 'உரைத்திர்'.

## கக—காடுகாண்காதை.

உகுள்

பெறுதிர் போலுநீர் பேணிய

பொருளெனு

முறையீ ராயினு முறுகண் செய்யே

௧௨௫. னெடுவழிப் புறத்து நீக்குவ னும்மெனு

முரைத்தா ருளரெனி னுரைத்த

மூன்றின்

கரைப்படுத் தாங்குக்

காட்டினள் பெயரு

மருமறை மருங்கி னைந்தினு

மெட்டினும்

வருமுறை யெழுத்தின் மந்திர மிரண்டு

௧௩௦. மொருமுறை யாக வுளங்கொண்

டோதி

வேண்டிய தொன்றின் * விரும்பினி

ராடிற்

காண்டகு மரபின வல்ல மற்றவை

மற்றவை நினையாது † மலைமிசை

நின்றோன்

பொற்று மரைத்தா ளுள்ளம்

பொருந்துமின்

௧௩௫. னுள்ளம் பொருந்துவி ராயின்

மற்றவன்

[1] புள்ளணி ‡ நீள்கொடி புணர்நிலை

தோன்றுந்

தோன்றிய பின்னவன் றுணைமலர்த்

தாளிணை

யேன்று துயர் கெடுக்கு § மின்ப மெய்தி

மாண்புடை மரபின் மதுரைக் ||

கேகுமின்

கசo. காண்டகு பிலத்தின் காட்சி யீதாங்

கந்நெறிப் படரீ ராயி னிடையது

செந்நெறி யாகுந் தேம்பொழி லுடுத்த

---

கஉகூ. பேணியபொருள் - மூன்றி னுளொன்ருய் நினைத்தகாரியம்.

கஉரு. நெடுவழிப்புறம் - நீங்கள்போகின்ற பெருவழியிடம்.

கஉஅ. ஐந்தும் எட்டுமாவன:—பஞ்சாக்கரம், அட்டாக்கரம்.

கங்க - உ. வேண்டியதொருபொய்கைக்கண் ஆடினல் ஏனையவிரண்டும் தோன்றும் மரபினவல்ல.

கஙச. உள்ளம்பொருந்துமின் - நினையுங்கோள்.

கசுசு. புள்ளணிநீள்கொடி நின்ற நிலைமைதோன்றும்; கொடிபுணர்நிலை - கொடிமரநிற்கும் திருவாசலுமாம்.

கசுஎ. (பா) துணைமலர்த்தாமரை - திருவடி.

கசுஅ. கெடுக்குமென்றது, முற்று; கெடுத்தலால் இன்பமெய்தியென ஒரு சொல் வருவிக்க.

கசஉ. செந்நெறி - செவ்வியவழி.

---

[1] திருமுருகாற்றுப்படை, கஙக

(பி - ம்.) * 'விரும்பினராயின்' † 'மலர்மிசை' ‡ 'நீள்கொடிப்புணர்நிலை' § 'இன்புமெய்துவிர்' || 'எய்துமின்'





ஊரிடை யிட்ட காடுபல கடந்தா
லாரிடை யுண்டோ ராரஞர்த் தெய்வ
கசரு. நடுக்கஞ் * சாலா நயத்திற் றோன்றி
யிடுக்கண் செய்யா தியங்குநர்த் தாங்கு
மடுத்துடன் கிடக்கு மதுரைப் பெருவழி
நீணிலங் கடந்த நெடுமுடி யண்ணா

ளுடொழு தகையேன் போகுவல் யானென
கஙூ௦. மாமறை யோன்வாய் வழித்திறங் கேட்ட
† காவுந்தி யையையோர் கட்டுரை சொல்லு
நலம்புரி கொள்கை நான்மறை யாள
பிலம்புக வேண்டும் பெற்றியீங் கில்லை
கப்பத் திந்திரன் காட்டிய நூலின்
கஙரு. மெய்ப்பாட் ‡ டியற்கையின் விளங்கக் காணு
[1] யிறந்த பிறப்பி னெய்திய வெல்லாம்
பிறந்த பிறப்பிற் காணு யோநீ
வாய்மையின் வழாது மன்னுயி §

ரோம்புநர்க்

கியாவது முண்டோ வெய்தா

வருபொருள்

கசு௦. காமுறு தெய்வங் கண்டடி பணிய
நீபோ யாங்களு நீணெறிப் || படர்குது

மென்றம் மறையோற் கிசைமொழி

யுணர்த்திக்

குன்றாக் கொள்கைக் கோவலன் றன்னுட
னன்றைப் பகலோ ரரும்பதித் தங்கிப்
கசுரு. பின்றையு மவ்வழிப் பெயர்ந்து**செல் வழிநாட்

கருந்தடங் கண்ணியுங் கவுந்தி யடிகளும்
†† வருந்துசெல் வருத்தத்து வழிமருங் கிருப்ப

---

கசசு. ஆரஞர்த்தெய்வம் - வருத்துந்தெய்வம்.

கசசரு. (1.15) இயங்குநர்த்தடுக்கும் - வழிபோவாரைப் போக்குவிலக்கும்.

கசஎ. இவ்வகைச்சென் றுகிடக்கும்.

கருச. கற்பம் கப்பமென நின்றது; பிராகிருதம்.

கருரு. மெய்ப்பாட்டியற்கை - பரமாகமம்; பரமாகமத்தில் இந்திரன் நூலினைக் காணலாம்.

---

[1] "இறந்த பிறப்பிற்றுஞ் செய்த வினையைப், பிறந்த பிறப்பா லறிக-பிறந்திருந்து, செய்யும் வினையா லறிக வினிப்பிறந், தெய்தும் வினையின் பயன்" அறநெறி. கூ.

(பி.- ம்.) * 'சாரா நலத்திற்' † 'காவுந்திகையோர்' ‡ 'இயற்கை' § 'ஓம்பினர்க்கு' ¶ 'படர்குவம்' ** 'செல்வுழிநாட்' †† 'வருந்துசெல்'

## கக.—காடுகாண் காதை.

உகக

விடைநெறிக் கிடந்த * வியவுகொண்

மருங்கிற்

புடைநெறிப் போயோர் பொய்கையிற் †

சென்று

கள0. நீர்நசை வேட்கையி னெடுந்துறை நிற்பக்
காணுறை தெய்வங் காதலிற் சென்று
நயந்த காதலி னல்குவ னிவனென
‡ வயந்த மாலை வடிவிற் றோன்றிக்
கொடிநடுக் குற்றது போல வாங்கவ

களரு. னடிமுதல் வீழ்ந்தாங் கருங்கணீ ருகுத்து
வாச மாலையி னெழுதிய மாற்றந்
தீதிலேன் பிழைமொழி செப்பினை

யாதலிற்

கோவலன் செய்தான் கொடுமையென்

றென்முன்

மாதவி மயங்கி வான்றுய ருற்று

கஅ0. மேலோ ராயினு நூலோ ராயினும்
பால்வகை தெரிந்த பகுதியோ ராயினும்

பிணியெனக் கொண்டு பிறக்கிட் டொழியுங்
கணிகையர் வாழ்க்கை கடையே போன்மெனச்

செவ்வரி யொழுகிய செழுங்கடை மழைக்கண்
கஅரு. வெண்முத் துதிர்த்து வெண்ணிலாத் திகழுந்
தண்முத் தொருகாழ் § தன்கையாற் பரிந்து
|| துனியுற் றென்னையுந் துறந்தன ளாதலின்
மதுரை மூதூர் மாநகர்ப் ¶ போந்த
தெதிர்வழிப் பட்டோ ரெனக்காங் குரைப்பச்

---

கசஅ, இடைநெறி - முன்சொற்றவழிமூன்றினும் நடுவில்வழி; நெறியிடையிலேயென்றுமாம். இயவுகொள் - செலவுகொண்ட.

கஎஉ. நயந்தகாதலுடையனுதலால், யான்சொல்லுகின்றவதற்கு இவன் நல்குவானென.

கஎக - எ. யான் மாற்றம் தீதிலேன்; நீபிழைக்கச்செப்பினுய்.

கஅ0. மேலோர் - அருந்தவர். நூலோர் - கற்றோர்.

கஅக. பால்வகைதெரிந்தபகுதியோர் - ஓதாது நன்மைதீமையறிவோர்; ஞானிகளில் உயர்ந்த கூற்றோரென்றுமாம்.

கஅஉ. பிறக்கிடுகை - பின்னிடுகை; என்றது முகம்பாராமை

கஅ0-அரு. அவர்கள் இது பிணியென்கருதிக் கழிந்துபோம் கணிகையர்.

---

(பி - ம்.) * 'இயவுக்கொண்' † 'பொருந்தி' ‡ 'வசந்த' § 'தன்கையிற்' || 'துனிவுற்று' ¶ 'போந்தீங்கு'



கக0. சாத்தொடு போந்து தனித்துயர்

ருழூந்தேன்
பாத்தரும் பண்பநின் * பணிமொழி
யாதெனை
மயக்குந் தெய்வமிவ் வன்காட்
டுண்டெனை
வியத்தகு மறையோன் விளம்பின
ளுதலின்
வஞ்சம் பெயர்க்கு மந்திரத் தாலிவ்
கக௫. வைஞ்சி லோதியை † யறிகுவென்
யானெனக்
கோவல னவிற் கூறிய மந்திரம்

பாய்கலைப் பாவை மந்திர மாதலின்
வனசா ரிணியான் மயக்கஞ் செய்தேன்

புனமயிற் சாயற்கும் புண்ணிய முதல்விக்கு
உ00. மென்றிற முரையா தேகென் றேகத்
தாமரைப் பாசடைத் தண்ணீர் ‡
கொணர்ந்தாங்
கயர்வுறு மடந்தை யருந்துயர் தீர்த்து
மீதுசெல் வெங்கதிர் வெம்மையிற்

ரொடங்கத்

தீதியல் கானஞ் செலவரி தென்று

உ0ரு. கோவலன் றன்னொடுங் கொடுங்குழை

மாதொடு

மாதவத் தாட்டியு மயங்கத ரழுவத்துக்

குரவமு மரவமுங் கோங்கமும் வேங்கையும்

விரவிய பூம்பொழில் விளங்கிய விருக்கை

யாரிடை யத்தத் தியங்குந ரல்லது

உகூ0. மாரி வளம்பெறு § வில்லே ருழவர்

கூற்றுறழ் || முன்பொடு கொடுவி லேந்தி

வேற்றுப்புலம் ¶ போகிநல் வெற்றங் கொடுத்துக்

கழிபே ராண்மைக் கடன்பார்த் திருக்கும்

விழிநுதற் குமரி விண்ணோர் பாவை

உகரு. **மையறு சிறப்பின் வான நாடி

யையைதன் கோட்டந் †† மடைந்தன ராங்கென்.

---

ககூக. பாத்தரும்பண்ப - பகுத்தலரியபண்பனே! என்றது, பிறர்க்கில்லாத, பண்டையாயென்றபடி.

ககூ௫. அதிருவெனென்றுகருதி. உ0௫. ஒடு, எண்ணொடுவுமாம்.

உ0௬ - க0. ஆரிடையத்தத்தியங்குநருடைய வளமல்லது மழைவளம் பெறுமறவர்.

உ0அ - ககூ. பொழில் விளங்கிய இருக்கையிடத்து ஐயைகோட்டமென்க.

(பி - ம்.) * 'பழிமொழி' † 'அறிகுவெனென்று' ‡ 'கொணர்ந்து வப்பாவுறும்படைத்தைக்கு வருந்துயர்' § 'வல்லேருழவர்' || 'மொய்ம்பொழி' ¶ 'போகில்வெற்றங்' ** 'மறுவறு' †† 'உறைந்தனரங்கென்'

## கக.—கா டு கா ண் கா தை.



க - ௪. திங்கண்மூன்று..................அறிவனை வணங்கி

(இ-ள்.) கோதைகள் தாழ்ந்த பிண்டியினது வளவிய கிழற்கண்ணே மூன்று திங்களையடுக்கினாற்போலும் திருமுக்குடையினதுகீழ் யினும் ஒளிசிறப்பவிருந்த அறிவனை வணங்கியென்க. இளஞாயிற்றினது ஒளி

திங்கண்முதலிய[1] மூன்றெனினுமாம்.

முக்குடையாவன: சந்திராதித்தம் நித்தியவிநோதம், சகலபாசனமென்பன. இன்னுருபு தொக்கது; பொருவாம் பொருண்மை தந்தது. திகழ்தல் - விளங்குதல். சிறந்து -

சிறப்ப, 'கோதைதாழ்

பிண்டி' என்றார்; [2] அவன்பிண்டி கடவுட்டன்மையான்

எஞ்ஞான்றும் மாலை

யாகப் பூக்குமாதலின். ஆதியி றேற்றத் தறிவனென்றது ஆதியின்மையைத் தோற்றமாகவுடையனென்றதாம்; எனவே இனஞ்செப்பி அந்தமின்மையை முடிவாகவுடையனென்பதூஉமாம்; ஆகவே ஆதியும் அந்தமும் இல்லாதவனென்றவாறும்; எனவே தனக்குப் பிறிதொருவர் முதலாதலில்லாதவனென்பதாம். இன்னும் இதற்கு யாவர்க்கும் தானேமுதலாயவனென் றுரைப்பினுமமையும். ஆதியிற்றோற்றம் பாடமாயின், ஆதிக்காலத்தினும் முற்றோன்றியவனென்க. என்றகருத்து காலத்தின்முற்றோன் றும்பொருள்கள் யாவுமின்மையின், அதனினும் முற்றோன்றியவனென்பதாம். 'அறிவன்' - உறையூரிலருகன். வணங்கி - முதனூட் (கo: உசஅ) புரிந்து புக்கவர் வணங்கியென்க.

ரு - அ. கந்தன் பள்ளி..........மாண்புற மொழிந்து

(இ - ள்.) முற்கூறிய நிக்கந்தனுடைய பள்ளியிடத்துள்ள [3] கடவுளர்க்கெல்லாம் ஆற்றிடைக்குறையாகிய அவ்விடத்து அகன்றபொழிலின்கட் சாரணர்கூறியமொழியைக் கவுந்தியடிகளும் இனிமையுறமொழிந்தென்க.

[4] நிக்கந்தனைக் கந்தனென்றார். அந்தில், அசையுமாம். அரங்கம் - முற்கூறிய ஆற்றுவீயரங்கம்; திருவரங்கமுமாம். அகன்பொழில் - அம் மரம்பயில் ஒலிக்கம். சாரணர் - [5] பெரும்பெயரையரிட்ட சிலாதலத்துத் தருமஞ்சாற்றுஞ் சாரணர்; அவர்கூறியமொழி - [6] "ஒளியுறி னல்லது, போதார் பிறவிப் பொதியறையோர்" என்றமொழி; அதனைக் கவுந்தியடிகளும் மொழிந்தென்க.

அ - கூ. ஆங்கு..........................................அடங்கி

(இ - ள்.) அன்று [7] சாவகருறைவிடத்து விட்டுத் தங்கியென்க.

[1] மூன்றுவன:—சந்திரன், சூரியன், அக்கினி.

[2] இவ்வசோகு மாலையாகப் பூக்குமென்பதை, "மூழாத்திரண் மொய்ம்மலர்த் தாமந் தாழ்ந்துமேல், வழாத்திரு மலரெலா மலர்ந்து வண்டினங், குழாத்தொடு மிறைகொளக் குனிந்து கூய்குயில், வீழாக்கொள விரிந்தது வீரன் பிண்டியே" என்னும் சீவகசிந்தாமணி, ௩௦௧௨ - ஆம் செய்யுளாலுணர்க.

[3] கடவுளர் - சண்டு முனிவர்; "தொன்முது கடவுட் பின்னர் மேய" என (௪௧) மதுரைக்காஞ்சியுள்ளும், "இப்போழ்து போழ்தென் றதுவாய்ப்பக் கூறிய, வெக் கட்வுள்" எனக் (௯௩) கலித்தொகையுள்ளுங்கூறினர்.

[4] நிக்கந்தன் - அருகன்.

[5] சிலப்பதிகாரம், ௧௦: ௧௧௦.

[6] ,, ௧௦: ௧௧0 - ௯௧.

[7] சாவகர் - சைனர்களில் இல்லறத்தார்; இவர்களை சிராவகரென்பர்.



என்றது காலைப்பொழுதில் வாய்மொழிகேட்டு மாடப்புணைபோகித் தென்
கரையெய்திப் பூம்பொழிலிருந்துழிச் சாபவிடைசெய்த மாலைப்பொழுதின்
கட் புறஞ்சிறைவாரணம் புரிந்துபுக்கனரெனவே அற்றைஞான்று தங்குதல் கூற
வேண்டாதுமுடியும்; [3]முடியவே வழிநாட்சாவகருறைகின்றவிடத்தே தங்கினு
ராய் ஒடுங்கியென்க. அவரெனக் கடவுளரைச்சுட்டின், அவருறைவிடம் கந்தன்
பள்ளியாமாகலானும், ஆண்டு அடங்காமை சொல்லவேண்டாவாகலானும் அவ

ரென்றது சாவகரையென்க. கடவுளர்க்கெல்லாம் மாதவத்தாட்டி மாண்புற

மொழிந்தெனவே கவுந்தியடிகள் கந்தன்பள்ளியுட் புக்கமையுணர்க. இங்ஙனங்

கூறியது, [1] "ஆறைங்காதம்" என்றமையானும் [2] "காவத மல்லது கடவாராகிப், பன்னாட் டங்கிச் சென்னொருநாள்" என்றமையானும், ஈண்டும் "அன்றவ ருறைவிடத் தல்கின ரடங்கி" என்றமையானும் சிலநாட்சென்றவழிச்

செலவொழிந்தொழிந்து ஆண்டாண்டிருந்து ஆறிச்சென்றமை உணர்த்தற்கெ

னக்கொள்க.

கூ - கூ.

தென்றிசை மருங்கிற்.............புக்குழி

(இ - ள்.) தென்றிசைக்கண்ணேசெல்லுதலை விருப்பமுறுதலானே கோழி

யூரை வைகறையாமத்தே கழிந்து செல்லாநின்றுழி வெய்யோன்வந்து முன்

னர்க் குணதிசையை விளக்கிப் பின்னர்த் தான் தோன்றினனாக, வளவிய நீர்

நிறைந்த மருதநிலமும் வாவியுஞ்சிறந்ததோர் இளமரக்காவின்மண்டபத்தே

சென்று புக்கவிடத்தென்க.

வாரணம் - கோழியூர்.

வணங்கி மொழிந்து அல்கினரடங்கி விருப்புற்று[1]
வாரணங்கழிந்து தோன்றினவளவிலே
இருக்கைபுக்குழியென்க. விளங்கி -
விளக்கி; விகாரம்.

கரு - சு. வாழ்க வெங்கோ.........உலகங்
காக்க

(இ - ள்.) மன்னர்யாவரினும் மிக்க
பெரியதகைமையினையுடைய எங்கோ
வாழ்வானாக; ஊழிதோறும் ஊழிதோறும் இவ்வுலகை
அவனே காப்பானாக
வென்க.

கஎ - உஉ. அடியிற் றன்னளவு.......
.தென்னவன் வாழி

(இ - ள்.) முன்னொருகாலத்துத் தனது
பெருமையினதளவை அரசர்க்

குக் காலான்மிதித்துணர்த்தி வேலானெறிந்த அந்தப் பழம்பகைமையினைக் கடல் பொறுது பின்னொருகாலத்து அவனது தென்றிசைக்கண்ணதாகிய[3] பஃறுளி யாற்றுடனே பலவாகிய பக்கமலைகளையுடைய குமரிக்கோட்டையும் கொண்ட

தனால் வடதிசைக் கண்ணதாகிய கங்கையாற்றினையும் இமயமலையினையும் கைக்கொண்டு ஆண்டு மீண்டும் தென்றிசையையாண்ட தென்னவன் வாழ்வானாக வென்க.

---

[1] சிலப்பதிகாரம், கo: சஉ. [2] சிலப்பதிகாரம், கo: கஙச - ரு.

[3] "எங்கோ வாழிய... ... ...முந்நீர் விழவி னெடியோன், னன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே" எனப் பஃறுளியாற்றைப் பாராட்டிக்கூறினர் புறப்பாட்டிலும்; க.

## கக.—காடுகாண் காதை.

ஙoங

அடியில் - அடியால் தன்னளவென்றதனைக் கட்டின்மேலேற்றலுமொன்று.

அரசர்க்கு - உலகிலரசரெல்லார்க்குமென்க. வான்பகை - முன்புசெய்த

பகைமை. பஃறுளியென்னும் ஆற்றின்றன்மை[1] வேனிற்காதையிற்கூறிப்

போந்தாம். கோடு - மலை. கொடுங்கடல் - இவ்வளவெல்லாந்தந்தகடல். கடல்

எதிர்ந்துகொண்ட எல்லையளவும் வடபால் தனதாக்கி மீண்டும் தென்றிசையை

யாண்டவென ஒப்பாக்கலுமொன்று. அடியாலுணர்த்தி

எறிந்த பகைபொருது

**கொள்ளத் தானுங்கொண்டு ஆண்ட தென்னவனென்க.**

என்றது: அங்ஙனமாகிய கிலக்குறைக்குச் சோழநாட்டெல்லையிலே முத்தூர்க்கூற்றமும் சேரமானாட்டுக் குண்டூர்க்கூற்றமுமென்னுமிவற்றை இழந்த நாட்டிற்காகவாண்ட தென்னவன் வாழ்வானாகவென்றவாறு.

## உரு - ரு. திங்கட்

**செல்வன் ............ பூண்டோன் வாழி**

(இ - ள்.) திங்களாகிய செல்வனுடைய மரபு

மேம்படுதற்கு இந்திரன்

பூட்டிய வலிவிளங்கிய ஆரத்தை ஒளிபொங்கிய தனதுமார்பத்தே பூண்ட பாண்டியன் வாழ்வானாகவென்க.

விளங்கவென்பதனை விகாரவகையான் வியங்கோளாக்குவாருமுளர். விளங்கப்பூண்டோனென இயைக்க. [2]திங்கட்செல்வனென்பதற்கு வேனிற்காதையில் உரைத்ததுரைக்க.

உசு - ருக. முடிவளை யுடைத்தோன்......வந்திருந் தோனை

(இ - ள்.) இவன் நம்முடைய முதல்வனது சென்னிமுடியிலே வளையை யுடைத்தோனென்று இடியையுடைய பருவமழை தனதுநாட்டிற் பெய்தற்றொழிலெய்தாது ஏகிற்றாகத் தப்பாத விளையுளாகிய மிக்க வளஞ்சுரக்கும்படி அதனை [3]விலங்கிட்டாண்ட மன்னவன் வாழ்வானாகவெனக் குற்றந்தீர்ந்த சிறப்பினையுடைய தென்னவனை இங்ஙனம் ஏத்திவந்திருந்த முதுமறையோனையென்க.

ருஉ - ரு. யாது நம்மூர்............கோவலன் கேட்ப

(இ - ள்.) அம்மறையோனைநோக்கி; ஆண்டு, நம்மூர்யாது? ஈண்டு நம் வரவு என்னையெனக் கோவலன்வினவவென்க.

௩௩ - ௪. குன்றாச் சிறப்பின்............ உரைப்போன்

(இ - ள்.) மிக்க சிறப்பினையுடைய அம்மறையோன் தான் வருகின்றபொருளை உரைக்கின்றவனென்க.

வருபொருளென்ற பொதுமையான் வருதற்குக் காரணமும் ஊரின்பெயருமென்பதாயிற்று.

---

[1] சிலப்பதிகாரம், பக். ௨௩௦. [2] சிலப்பதிகாரம், பக். ௨௩௩.

[3] வேலெறிந்து கடலை வற்றச்செய்ததும், இந்திரன் பூட்டிய ஆரத்தைப்பூண்டதும், இந்திரன்முடிமேல் வளையைச்செலுத்தியதும், மேகத்தைச் சிறைப்படுத்தியதும் பாண்டியன் உக்கிரவன்மன் செயலென்று திருவிளையாடற்புராணமுதலியன கூறும்.



௩௫ - ௪0. நீல மேகம்.........கிடந்த வண்ணமும்

(இ - ள்.) நீலமேகம் ஓங்கிய பொன்மலைமீதே பக்கங்களில் விரிந்து மிகா

மல் ஒக்கப் படிந்ததுண்டாகில் அதனையொப்பத் தனது படம்விரித்தெழுந்த

ஆயிரந்தலையையும் கிட்டுதற்கரிய திறலையுமுடைய பாம்பணைப்பள்ளிமீதே

தேவர்கள் பலரும் தொழுதேத்தத் திரைவிரியும் காவிரியாற்றிடைக்குறையிலே

திருமகள்பொருந்திய திருமார்பையுடையோன் கிடந்தகோலமுமென்க.

மேகம் படிந்ததுபோலக்கிடந்தவென்க.

௬௧ - ௫௧. வீங்குநீரருவி.........நின்ற வண்ணமும்

(இ - ள்.) கொடிவழித்தீர்த்தமுதலிய மிக்க அருவிநீரையுடைய வேங்கட
மென்று பெயர்கூறப்படும் மலையினுச்சிமீதே ஞாயிறும் திங்களும் இருமருங்கும்
ஓங்கிவிளங்கிய இடைப்பட்டவிடத்தே நல்ல நீலநிறத்தையுடையமேகம் தன்
மின்னுகிய புதப்புடைவையையுடுத்துத் தன்வில்லாகிய பணியைப்பூண்டுநின்
றாற்போலப் பகையைவருத்தும் ஆழியையும் சங்கையும் அழகிய தாமரைக்கைய
கத்தே வலனுமிடனுமேந்தி அழகுகிளருமாரத்தைத் திருமார்பிற்பூண்டு பொற்
பூவாடையையுடுத்து வெளிப்பட்ட சிவந்த திருக்கண்மலரையுடைய நெடி
யோன் நின்ற கோலமுமென்க.

மேகம் இடைநிலைத்தானத்து உடுத்துப் பூண்டு நின்றதுபோல ஏந்திப்

பூண்டு பொலிந்து உச்சிமீமிசைத்தோன்றிய
நெடியோன் நின்றவண்ணமு
மெனக. இது மயக்கிரனிறை உச்சிமீமிசையென
ஒருபொருட்பன்மொழி
சிறப்பின்கண்வந்தன.

ருஉ - ரு. என்கண் காட்டென்று..........
....உள்ளேன்

(இ - ள்.) இங்ஙனமாகிய இரண்டுவண்ணத்தையும் காட்டுவாயாகவென்று
என்கண் என்னுள்ளத்தைக் கவலைசெய்தலாலே
ஈண்டுவந்தேன்; ஆண்டுக் குடக
மலைப்பக்கத்து
மாங்காடென்னுமூரின்கண் உள்ளவன் நானென்றானென்க.

என்கண், எழுவாய். [1] "கண்ணுந் தோளும்" என்பதனாற் கண்ணென்றார்.
உள்ளேன் - உள்ளவன் நான்.

ருச - எ. தென்னவ
னாட்டு.............செப்பக் கேட்டு

(இ - ள்.) அத்தென்னவனுடைய
நாட்டிலுள்ளசிறப்பும், அவன் கொடை

அளிமுதலிய செய்கைகளும் கேட்டலன்றிக் கண்கள்குளிரக் கண்டேனாகலான்,
அவன் புகழை நாவால்வாழ்த்திவந்திருந்தேன்; என்வரவு இதுவென்றுகொண்டு
மூத்தியின்திறத்து மனம்புரிந்தோன் சொல்லக்கேட்டென்க.

[1] நிலந்தரு திருவி னிழல்வாய் நேமி
[2] கடம்பூண் டுருட்டுங் கௌரியர்
பெருஞ்சீர்க்
கோலின் செம்மையுங் குடையின்
றண்மையும்
வேலின் கொற்றமும் விளங்கிய
கொள்கைப்
ரு. [3] பதியெழு வறியாப் பண்புமேம் பட்ட
மதுரை மூதூர் மாநகர் கண்டாங்
[4] கறந்தரு நெஞ்சி னறவோர் பல்கிய
புறஞ்சிறை மூதூர்ப் பொழிலிடம் புகுந்து
தீதுதீர் மதுரையுந் தென்னவன் கொற்றமு
கo. மாதவத் தாட்டிக்குக் கோவலன் கூறுழித்
தாழ்நீர் வேலித் தலைச்செங் கானத்து
[5] நான்மறை முற்றிய நலம்புரி கொள்கை
மாமறை முதல்வன் மாடல னென்போன்
மாதவ முனிவன் மலைவலங் கொண்டு
கரு. குமரியம் பெருந்துறை கொள்கையிற்
படிந்து
தமர்முதற் பெயர்வோன் றாழ்பொழி
லாங்கண்

வருந்துசெல் வருத்தத்து வான்றுயர் நீங்கக்
கவுந்தி யிடவயிற் புகுந்தோன் றன்னைக்
கோவலன் சென்று சேவடி வணங்க

---

க. நிலந்தருதிரு - விளைவு. நேமி - நேமியை.
உ. கடம்பூண்டு - முறைமையைமேற்கொண்டு. கவுரியர் - பாண்டியர்.
ரு. ஆங்கு - அப்பொழுதே. (ச) விளங்கிய (கூ) மூதூர்.
கச. முனிவன் - அகத்தியன்.

---

[1] "நிலந்தருதிருவினெடியோன்" (மதுரை. எகூகூ); "நிலந்தரு திருவிற்பாண்டியன்" (தொல். பாயிரம்.)

[2] கடம்பூணல்: மணி. கூ: எ0.

[3] "பதியெழுவறியாப்பழங்குடி" சிலப். க: கடு; மலைபடு. சஎகூ.

[4] சிலப். கக: கக௫ - சு; டை கடு: கக௫-சு.

[5] "நான்மறைமுற்றியவதங்கோட்டாசான்" தொல். பாயிரம்.



உ0. [1] நாவ லந்தணன் றுனவின்
றுரைப்போன்

வேந்துறு சிறப்பின் விழுச்சீ ரெய்திய
மாந்தளிர் மேனி மாதவி மடந்தை
பால்வாய்க் குழவி பயந்தனை ளெடுத்து
* வாலா மைந்நா ணீங்கிய பின்னர்
உரு. மாமுது கணிகையர் மாதவி மகட்கு
நாம நல்லுரை நாட்டுது மென்று

தாமின் புறாஉந் தகைமொழி கேட்டாங்

* கிடையிருள் யாமத் தெறிதிரைப் பெருங்கட
* லுடைகலப் பட்ட வெங்கோன் முன்னாட்
௩௦. புண்ணிய தானம் புரிந்தோ னாகலி
னண்ணுவழி யின்றி நாள்சில நீந்த
விந்திர னேவலி னீங்கு வாழ்வேன்
வந்தே னஞ்சன் மணிமே கலையா
னுன்பெருந் தானத் துறுதி யொழியாது
௩௫. துன்ப நீங்கித் துயர்க்கட லொழிகென
விஞ்சையிற் பெயர்த்து விழுமந் தீர்த்த

---

உ௦. நவின் றுரைத்தல் - பலகாற்சொல்லுகை.

உ௪. வாலாமை - தூய்மையின்மை.

உரு. முதுகணிகையராவார்-பாட்டிமார், தாய்மார்.

உகூ - ௩0. எங்கோனென்றது, கோவலன் மரபினுள்ளானொருவனை;

புண்ணியதானம் முன்பு செய்து ஒழுகினனாதலால்.

௩க. நண்ணுவழியின்றி -

கரையைக் கிட்டுமிடமின்றி.

(உஅ) கடலின் இடையிருள்யாமத்துக் (௩க) கரைகாணாது சிலநாள் நீந்திச்செல்ல.

௩உ. இந்திரனேவலால் இத்தீவிலுள்ளாரை அசுரர் வாதியாமற் காத்து இங்கு வாழ்வேன்.

௩௪. நீ முன்புசெய்த தானங்களால் வந்தபுண்ணியம் உன்னைவிடாது; உறுதி யொழியாது, முற்று.

௩ரு. ஒழிகவென்ச்சொல்லி.

---

[1] "நாவலந்தணரருமறைப்பொருளே" பரி. க, உ.

[2] மணி. எ: ௩௩ - ௫; ௸ உக: கஅக - உ; ௸ உ௩: க௪-௩க.

[3] உடைகலப்பட்டல்: மணி. கரு: உ0; ௸ கஅ: ௩௪.

(பி - ம்.) * 'வாலாமைநாணிக்கிய'

# கரு.—அடைக்கலக்காதை.

௩க௩

வெங்குல தெய்வப் பெயரீங் கிடுகென
வணிமே கலையா ராயிரங் கணிகையர்

மணிமே கலையென வாழ்த்திய ஞான்று

சo. மங்கல மடந்தை மாதவி தன்னொடு
செம்பொன் மாரி செங்கையிற் பொழிய
ஞான நன்னெறி நல்வரம் பாயோன்
றானங் கொள்ளுந் தகைமையின் வருவோன்
[1] றளர்ந்த நடையிற் றண்டுகா லூன்றி

சரு. வளைந்த யாக்கை மறையோன் றன்னைப்
[2] பாகுகழிந் தியாங்க ணும் பறைபட வரூஉம்
வேக யானை வெம்மையிற் கைக்கொள
வொய்யெனத் தெழித்தாங் குயர்பிறப் பாளனைக்
கையகத் தொழித்ததன் கையகம் புக்குப்

ருo. [3] பொய்பொரு முடங்குகை வெண்கோட் டடங்கி
[4] மையிருங் குன்றின் விஞ்சைய னேய்ப்பப்
பிடர்த்தலை யிருந்து பெருஞ்சினம் பிறழாக்
கடக்களி றடக்கிய கருணை மறவ
பிள்ளை நகுலம் பெரும்பிறி தாக

ருரு. வெள்ளிய மனையோ ளினைந்துபின் செல்ல

௩எ. எங்குல தெய்வமென்றான்; அவ்வுதவிபற்றி. என - என்று கோவலன்கூற.

௪௧. பொழிய - பொழியாநிற்க.

(௪௩) வருவோனாகிய (௪௫) மறையோனை.

௪௪. பாகு - பாகர்.

௪௮. ஒய்யென - விரைய. தெழித்து - உரப்பி.

௫௦. பொய்பொருந்து கை - பொய்பொருந்தின துதிக்கை. கோட்டிடைப்புக்கு - கொம்புகளுக்கு நடுவே புக்கு.

௫௩. கருணை மறவ - கிருபாவீரனே.

௫௪. பிள்ளைநகுலம் - [5] கீரிக்குட்டி. பெரும்பிறிதாக்கை - மரிக்கை.

௫௫. எள்ளியமனையோள் - அவனால் இகழப்பட்ட மனையாள்.

---

[1] ௪௪-௫. மு. மணி. ௧௪: ௩௦-௧௧; நாலடி. ௧௪.
[2] மணி. ௪: ௪௧. [3] மலைபடு. ௧௦எ. [4] சீவக. ௧௮௧௮.
[5] குட்டியென்னும் இளமைப்பெயர் கீரிக்குமுரித்தென்பர், தொல்காப்பியனார்; மரபு. ௧௮எ.





# சிலப்பதிகாரம்

கடவ தன்றுநின் [1] கைத்தூண்

வாழ்க்கை

வடமொழி வாசகஞ் செய்த நல்லேடு
கடனறி மாந்தர் கைந்நீ கொடுக்கெனப்

கூ0. பீடிகைத் தெருவிற்

பெருங்குடி வாணிகர்

மாட மறுகின் மனைதொறு மறுகிக்

கருமக் கழிபலங் கொண்மி னோவெனு

மருமறை * யாட்டியை யணுகக் கூஉ

யாதுநீ யுற்ற விடரீ தென்னென

கூரு மாதர்தா னுற்ற வான்றுயர் செப்பி

யிப்பொரு ளெழுதிய விதழிது

வாங்கிக்

கைப்பொரு டந்தென் கடுந்துயர்

களைகென

வஞ்ச லுன்ற னருந்துயர் களைகே

னெஞ்சுறு துயர † நீங்குக வென்றாங்

எ0. கோத்துடை யந்தண ருரைநூற்

கிடக்கையிற்

றீத்திறம் புரிந்தோள் செய்துயர் நீங்கத்

தானஞ் செய்தவ டன்றுயர் நீக்கிக்

ருஎ. நின்கைத்தூண் வாழ்க்கை - நின் ஒழுக்கத்திஞல் நான் உண்டு வாழும் வாழ்க்கை; நீ இட்டதனை உண்டுவாழ்தல் கடவதன்றென்றுமாம்.

ருஅ. வடமொழி வாசகமாவது ஒருகிரந்தம்; அது,

"அபரீக்ஷ்யநகர்த்த
வ்யங்கர்த்தவ்யம் ஸுபரீக்ஷிதம், பச்சாத் பவதி ஸந்தாபம் ப்ராஹ்மணீ நகுலம் யதா" என்பது.

ருகூ. கொடுக்கென - கொடுக்கவென.

கூஉ. கருமக் கழிபலங் கொண்மின் - இவ்வேட்டைவாங்கிப் பாவத்தைக் கழிக்கும் புண்ணியஞ்செய்து கொண்மின்; என்றது, காரியமாயிருப்பதொரு நிமித்த பலமென்றவாறு; அஃதாவது, தான்கொன்ற கொலைத்தொழினீங்கப் போனகணவன் வரும்படி தானம்பண்ணவேண்டும் பொருளளிக்குங் காரியமாயிருப்பதொரு நிமித்தபலம்.

கூகூ. (பா) கூவி - அழைத்து.

கூச. நீயுற்ற இடர்யாதென; ஈது என்னென - இவ்வேடு என்னென்று சொல்ல.

எ0. நூற்கிடக்கை - வேதவிதி. எக. தீத்திறம் - கொலைத்திறம்.

---

1 "கைத்தூணல்க" மணி. கக: கூ.

(பி - ம்) * 'ஆட்டியையழைத்தனன் கூஉ, யாதுநீயுற்றனை யிடரீங்கென்னென'

† 'நீங்குகென்றுங் கோத்துடையத்தணனுரை'

கரு.—அடைக்கலக்காதை.

நடகூரு

கானம் போன கணவனைக் கூட்டி
யொல்காச் செல்வத் துறுபொருள் கொடுத்து
எரு. நல்வழிப் படுத்த செல்லாச் செல்வ

பத்தினி யொருத்தி படிற்றுரை யெய்த
மற்றவள் கணவற்கு வறியோ னொருவ
[1] னறியாக் கரிபொய்த் தறைந்து ளுளும்

பூதத்துக்

கறைகெழு பாசத்துக் கைப்பட லும்
அ௦. பட்டோன் றவ்வை படுதுயர் கண்டு
கட்டிய பாசத்துக் கடிதுசென் றெய்தி
யென்னுயிர் கொண்டிவ னுயிர் தாவென
நன்னெடும் [2] பூத நல்கா தாகி
நரக னுயிர்க்கு நல்லுயிர் கொண்டு
அரு. பரகதி யிழக்கும் பண்பீங் கில்லை

யொழிகளின் கருத்தென வுயிர்முன் புடைப்ப
வழிதரு * முள்ளத் தவளொடும் போந்தவன்
† சுற்றத் தோர்க்குந் தொடர்புறு கிளைகட்கும்
பற்றிய கிளைஞரிற் பசிப்பிணி யறுத்துப்
௬0. பல்லாண்டு புரந்த வில்லோர் செம்ம

[3] லிம்மைச் ‡ செய்தன யானறி நல்வினை
யும்மைப் பயன்கொ லொருதனி யுழந்தித்

---

எச. செல்வத்துறுபொருள்-செல்வத்திலேயுற்றபொருள்; செல்வத்தாலே யுற்றவென்றுமாம்.

எடு. செல்லாச்செல்வ - தொலையாச்செல்வ.

எசு. படிற்றுரை - பொய்ப்பழி. எஎ. வறியோன் - அறிவில்லான்.

எக. கறைகெழுபாசம் - கரியபாசம். அடு. இழக்கும் - நழுவும்.

அசு. உயிரென்றது, ஆகுபெயரான் உடம்பை.

அக. கிளைஞரின் - கிளைஞரைப்போல.

௬0. இல்லோர் - வறியோர். செம்மல் - தலைவன். இல்லோர்செம்மலென் பதற்கு இல்லறத்தார் தலைவனென்றுமாம்.

---

[1] "அறிகரிபொய்த்தலான்றோர்க்கில்லை" குறுந். ௧அச.

[2] சிலப். ௫: ௧௨அ - ௯ச; மணி. க: உ௯-ச; ௸ உஉ: சகூ - ௫௬.

[3] ௧௧-௧. திருக்குறள், ௯௬௯ - பரிமேல். மேற்.

(பி - ம்.) * 'உள்ளத்தளுரொடு' † 'சுற்றத்தோர்க்குத்துடர்' ‡ 'செய்தயானறி'

திருத்தகு மாமணிக் கொழுந்துடன்
போந்தது
விருத்தகோ பால நீயென வினவக்
கூரு. கோவலன் கூறுமோர் குறுமகன்
றன்னூற்
காவல் வேந்தன் கடிநகர் தன்னி
னுறைங் கூந்த னடுங்குதுய ரெய்தக்
கூறைகோட் பட்டுக் கோட்டுமா வூரவு
மணித்தகு புரிகுழ லாயிழை தன்னொடும்
கர௦. [1] பிணிப் * பறுத் தோர்தம் பெற்றி யெய்தவு
மாமலர் வாளி வறுநிலத் தெறிந்து
[2] காமக் கடவுள் கையற் றேங்க
வணிதிகழ் [3] போதி யறவோன் றன்முன்
† மணிமே கலையை மாதவி யளிப்பவு
கரரு. நனவு போல நள்ளிருள் யாமத்துக்
கனவு கண்டேன் கடிதீங் குறுமென

வறத்துறை மாக்கட் ‡ கல்ல திந்தப்
புறஞ்சிறை யிருக்கை பொருந்தா தாகலி
னரைசர் பின்னோ ரகநகர் § மருங்கினின்

---

கசச. விருத்தகோபால - ஞானவிருத்தகோபாலனே. வினவ - (கஉ) ‘உம்மைப்பயன்கொல்’ என்றலால் மாடலன்வினவவென்க.

கடு. குறுமகன் - கீழ்மகன்.

கஅ. கோட்டுமா - பன்றி; எருமைக் கடாவுமாம்.

க00. பிணிப்பு - பற்று. பெற்றி - பெருமை=சுவர்க்கம்.

க0க. வாளி - வாளியை. க0உ. கையறவு - செயலறவு.

க0௩. போதியறவோன் - புத்தன்.

க0ச. கடிதீங்குறும் - பொல்லாததொன்று இவ்விடத்தே வரும்.

க0௬. அகநகர்மருங்கில் அரசர்பின்னோரென்க.

---

[1] “பிணிப்பறுமாதவன்” மணி. உக. கரு. [2] மணி. ௩ : உ௩.

[3] போதியறவோன் : மணி. கக : எக - ச ; கஉ : க0க - உ, ககக ; கடு : உரு, உ௬ ; உஅ : ளஎச ; உக : உ௩-ச ; ௩0 : க0.

(பி - ம்.) * ‘அறத்தோர்பெற்றியை’ † ‘மணிமேகலையொடு மாதவி துறப்பவு நனவேபோலும்’ . ‡ ‘அல்வழை யிந்தப் புறத்துறைவாழ்க்கை’ § ‘மருங்கினுரையிற்’

## கடு.—அடைக்கலக்காதை.

கக0. னுரையிற் கொள்வரிங் கொழிகவின் னிருப்புக்
காதலி தன்னொடு கதிர்செல் வதன்முன்

மாட மதுரை மாநகர் புகுகென

மாதவத் தாட்டியு மாமறை முதல்வனுங்
கோவலன் றனக்குக் கூறுங் காலை
ககரு. [1] * யறம்புரி நெஞ்சி னறவோர் பல்கிய

புறஞ்சிறை மூதூர்ப் பூங்க ணியக்கிக்குப்
பான்மடை கொடுத்துப் பண்பிற் பெயர்வோ

ளாயர் முதுமகண் மாதரி யென்போள்

† காவுந்தி யையையைக் கண்டடி தொழலு

கஉ0. மாகாத் தோம்பி யாப்பய் னளிக்குங்
கோவலர் வாழ்க்கையோர் கொடும்பா டில்லை
தீதிலண் முதுமகள் செவ்விய ளளியண்

மாதரி ‡ தன்னுடன் மடந்தையை யிருத்துதற்
கேத மின்றென வெண்ணின ளாகி
கஉ௫. மாதரி கேளிம் மடந்தைதன் கணவன்
றாதையைக் கேட்கிற் § றன்குல வாண
ரரும்பொருள் பெறுநரின் விருந்தெதிர் கொண்டு
கருந்தடங் கண்ணியொடு கடிமனைப் ‖ படுத்துவ
[2] ருடைப்பெருஞ் செல்வர் மனைப்புகு மளவு

---

க0௯ - கம0. நின் உரை - மாசாத்துவானென்னும் பிரகாசம்; வணிகர் நின்பிரகாசத்தாலே நின்னை அகநகர்மருங்கில் வைத்துக் கொள்வரென்றுமாம்.

(க0அ) ஆதலால் (கக௨) மதுரையிலே போவென்று (கக௩) மாடலனும் கவுந்தியும் (கக௪) கூறுகிற்கையில்.

கக௭. பான் மடை - பாற்சோறு.

க௨௮. கடிமனைப் படுத்துவர் - காவலையுடைய தங்கள் வீடுகளிலே வைத்துக்கொள்வர்.

---

[1] கக௫ - ௬: சிலப். கங: கக௫ - ௬: டி கடு: எ - அ.

[2] "உடைப்பெருஞ் செல்வத் துயர்ந்த பெருமை" பழ. ௨00.

(பி - ம்.) * 'அறந்தரு' † 'காவுந்திகையைக் கண்டடிவணங்க வாகாத் தொம்பியாடயன்' ‡ 'தன்னொடு மடந்தையையிருத்தற்கு' § 'தங்குலவாழ்நர்' ‖ 'படுக்குவர்'

கஉ௰.

மிடைக்குல மடந்தைக் கடைக்கலந் தந்தேன்

மங்கல மடந்தையை நன்னீ ராட்டிக்
செங்கய னெடுங்க * ணஞ்சனந் தீட்டித்
தேமென் கூந்தற் சின்மலர் பெய்து
தூமடி யுடீஇத் தொல்லோர் சிறப்பி
கஉ௫. ஞயமுங் காவலு மாயிழை தனக்குத்
தாயு நீயே யாகித் தாங்கிங்
கென்னொடு போந்த விளங்கொடி

நங்கைதன்

வண்ணச் சீறடி மண்மக ளறிந்திலள்

கடுங்கதிர் வெம்மையிற் காதலன்

றனக்கு கச௰. நடுங்குதுய ரெய்தி நாப்புலர

வாடித்

தன்றுயர் காணாத் தகைசால் †

பூங்கொடி

யின்றுணை மகளிர்க் கின்றி யமையாக்
[1] கற்புக்கடம் பூண்ட வித்தெய்வ

மல்லது

பொற்புடைத் தெய்வம்

யாங்கண் டிலமால்

கசரு. வானம் பொய்யாது வளம்பிழைப்

பறியாது

நீணில வேந்தர் கொற்றஞ் சிதையாது

பத்தினிப் பெண்டி ரிருந்தநா டென்னு

மத்தகு நல்லுரை யறியா யோநீ

தவத்தோ ரடைக்கலந் தான்சிறி தாயினு

கரும். மிகப்பே ரின்பந் தருவது கேளாய்

[2] காவிரிப் படப்பைப் பட்டினந் தன்னுட்

பூவிரி பிண்டிப் பொதுநீங்கு திருநிழ

---

கஙசு. அவளைப் புறப்படவிடாமையாலே அவளடியைப் பூமிதேவியும் கண்டறியாள்; இனி, கொப்புளங் கொண்டதென்பாள், 'மண்மகளறிந்திலள்' என்றாள் என்றும், காலின்மென்மைக்குத்' தக்கபடி தானும் மெல்கிற்றில ளென்றுமாம்.

கருக. காவிரிப் படப்பைப் பட்டினம் - காவிரிப்பூம்பாக்கத்துப் பட்டினம்.

கருஉ. பொதுநீங்கு திருநிழல் - பிறிது மரம்போல ஆதித்தனுடன் திரியாதுநிற்குநிழல்; ஆவது ஆதித்தன் கிரணத்தாற் சாயாதேநிற்றல்.

---

[1] "கற்புக்கடம்பூண்டு காதலன் பின்போந்த...நங்கை" (சிலப். உக: "தற்பயந் தான்"); "கற்புக்கடம்பூண்டு துங்கடன்முடித்த" மணி. உக: அ.

[2] "காவிரிப்படப்பை நன்னகர்" மணி. உஇ: கக.

## கரு.—அடைக்கலக்காதை.

௱௬௰௯

[1] லுலக நோன்பிக ளொருங்குட னிட்ட
* விலகொளிச் சிலாதல மேலிருந் தருளித்
௧௫௫. தருமஞ் சாற்றுஞ் சாரணர் தம்முன்
[2] றிருவி லிட்டுத் திகழ்தரு மேனியன்
[3] றூரன் மாலையன் றமனியப் பூணினன்
பாரோர் காணாப் பலர் † தொழு

படிமையன்

கருவிரற் குரங்கின் கையொரு பாகத்துப்
௧௬௦. ‡ பெருவிறல் வானவன் வந்துநின் றோனைச்
சாவக் ரெல்லாஞ் சாரணர்த் தொழுதீங்
§ கியாதிவன் வரவென [4] விறையோன்

கூறு -

மெட்டி சாயல னிருந்தோன் றனது
பட்டினி நோன்பிகள் பலர்புகு மனையிலோர்
௧௬௫. மாதவ முதல்வனை மனைப்பெருங் கிழத்தி
யேத நீங்க வெதிர்கொள மயத்

தூர்ச்சிறு குரங்கொன் றொதுங்கி
யுள்புக்குப்

பாற்படு மாதவன் பாதம் பொருந்தி
யுண்டொழி மிச்சிலு முகுத்த நீருந்
௧௭0. தண்டா வேட்கையிற் றன்சிறி தருந்தி
யெதிர்முக நோக்கிய வின்பச் செவ்வியை

---

௧௫௫. உலக நோன்பிகள் - சாவகர்.

௧௫௬. (பா) திருவில் விட்டு - நல்ல ஒளியை விட்டு.

(௧௫௮) பாரோர்கண்டறியா (௧௬0) வானவன் நின்றோனை.

(௧௫௧) ஒருபாகத்துக்கை குரக்குவடிவாயிருக்கின்ற (௧௬0) வானவன் வந்து நின்றோனைக் (௧௬௨) கேட்க இறையோன்கூறும்.

௧௬௫. எட்டிசாயலனென்போன் ஒருவாணிகன்; எட்டி - பட்டப்பெயர். இருந்தோனென்றார்; தன்மஞ்செய்தவன்றானும் இங்கேயிருந்தானென்றற்கு.

௧௬௮. தன்பாற்பட்ட மாதவத்தை யுடையவன்.

௧௭0. தண்டாவேட்கை - பசி.

௧௭0 - ௭௧. பசிகெட்டுநோக்கிய முகச்செவ்வி.

---

[1] மு. ௧௫௧ - ௪: சிலப். ௧0: ௨௪ - ௫. [2] மு. மணி. ௬: ௩0.

[3] மு. ௧௫௭-௮: மணி. ௩: ௧௬ - ௭.

[4] இப்புத்தகத்தின் ௨௮௧ - ஆம் பக்கத்தின் அடிக்குறிப்பைப் பார்க்க.

(பி - ம்.) * 'இலங்கொளிச்' † 'தொழுசிறப்பினன்' ‡ 'பொருவிறல்' § 'யாதிவர்வரவென'

யதிராக் கொள்கை யறிவனு * நயந்துநின்
மக்களி னோம்பு மனைக்கிழத் தீயென
மிக்கோன் கூறிய † மெய்ம்மொழி
யோம்பிக்

களரு. காதற் குரங்கு கடைநா ‡ ளெய்தவுந்
தானஞ் செய்வுழி யதற்கொரு கூறு
தீதறு கென்றே செய்தன ளாதலின்
மத்திம நன்னாட்டு வாரணந் தன்னு
ளுத்தர கௌத்தற் கொருமக னாகி

கஅ(). யுருவினுந் திருவினு முணர்வினுந் தோன்றிப்
பெருவிறற் றானம் பலவுஞ் செய்தாங்
கெண்ணா லாண்டி னிறந்த பிற்பாடு
§ விண்ணோர் வடிவம் பெற்றன னாதலிற்
பெற்ற செல்வப் பெரும்பய னெல்லாந்

கஅரு. தற்காத் தளித்தோ ||
டானச் சிறப்பெனப்

பண்டைப் பிறப்பிற் குரங்கின் ¶ சிறுகை
கொண்டொரு பாகத்துக் கொள்கையிற் ** புணர்ந்த
சாயலன் மனைவி தானந் தன்னு
லாயின னிவ்வடி வறிமி னோவெனச்
கஅ0. சாவகர்க் கெல்லாஞ் †† சாற்றினன் காட்டத்
‡‡ தேவ குமரன் றோன்றின னென்றலுஞ்
[1] சாரணர் கூறிய தகைசா னன்மொழி
யாரணங் காக வறந்தலைப் பட்டோ
ரன்றப் §§ பதியு ளருந்தவ மாக்களுந்

---

கஎச. மொழி – மொழியை. கஎடு. கடைநாளெய்த – மரிக்க.

கஎகூ. தானமென்றது, முன்பு சாரணர்க்குச் செய்துபோதுகிற தானம்.

கஎஅ. வாரணம் – ஸ்ரீவாரணசி.

கஎகூ. (பா) கவிப்பன் – பசுமறையத் தேடின பொருளுடையவன்.

கஅரு. ஆரணங்காக – மந்திரவுபதேசமாகக்கொண்டு; மிக்க தெய்வப் பிரார்த்தியமாகக் கொண்டென்றுமாம்.

---

[1] மு. சிலப்பதிகாரம், கக: எ.

(பி - ம்.) * 'நயந்தமக்களின்' † 'மிகுமொழி' ‡ 'எய்தத்தானஞ்' § 'வின்னுருவம்' ‖ 'தானப்பயனென' ¶ 'சிறுவிரற்' ** 'புணர்ந்து' †† 'சாற்றிக் காட்ட' ‡‡ 'தேவர்குமரன்' §§ 'பதியிலருந்தவ'

கசுரு. தன்னெறறல் வாழ்க்கைச் சாவக மாக்களு
மிட்ட தானத் தெட்டியு மனைவியு
முட்டா வின்பத்து * முடிவுல கெய்தினர்
கேட்டனை † யாயினித் தோட்டார்
குழலியொடு
நீட்டித் திராது நீபோ கென்றே
௨௦௦. கவுந்தி கூற வுவந்தன ளேத்தி
வளரிள வனமுலை
வாங்கமைப் பணைத்தோண்
¹ முளையிள வெண்பன் முதுக்குறை
நங்கையொடு சென்ற ஞாயிற்றுச் செல்சுட
ரமயத்துக்
கன்றுதே ராவின் கனைகுர லியம்ப
௨௦௫. மறித்தோ ணவியத் ² துறிக்கா வாளரொடு
³ செறிவளை யாய்ச்சியர் சிலர்புறஞ் சூழ

மிளையுங் கிடங்கும் * வளைவிற் பொறியுங்
‡ கருவிர லூகமுங் கல்லுமிழ் கவணும்
§ பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியுங்
உக0. காய்பொன் னுலையுங் கல்லிடு கூடையுந்
தூண்டிலுங் || தொடக்கு[5] மாண்டலை யடுப்பும்

கக௫. தன்றெறல் வாழ்க்கை - தன்மதத்துக்குள்ளானோர்க்கெல்லாம் பொதுப்பட்டவாழ்க்கை; பொதுவிலப்பட்டோராகிய சாவகர்.

கக௮. தோடார்குழலி, தோட்டார் குழலியென விகாரம்.

உ0உ. முதுக்குறைநங்கை - பெரிய அறிவினையுடைய நங்கை.

உ0௩. சென்ற ஞாயிறு - உவரின் ஞாயிறு; செல்சுடரமயம் - இதனையுடைய மாலைப்பொழுது; விழுந்தஞாயிற்றுச் சுடர் செல்லுகின்ற பொழுதின்கண்.

உ0௮. (பா) கருவிறல் - கொடியவெற்றி.

உ0௯. பாகடு குழிசி - செம்புருக்கும்மிடா; சாணகங்கரைத்துக் காய்கிற மிடாக்களுமாம்.

உக0. இருப்புவட்டுக்கள் காய்கிற உலை. கல்லிடுகூடை - இடங்கணிக்கல் வீசுங் கூடை.

உகக. தொடக்கு - கயிற்றுத்தொடக்கு. ஆண்டலையடுப்பு - ஆண்டலைப் புள்ளின்வடிவாகிய அடுப்பு.

---

[1] "முளைவளரிளநகையே" (சிலப் எ. க௯); "முளையெயிறரும்பி" மணி. ௭: க00.

[2] "உறிக்காவூர்ந்த மறுப்படு மயிர்ச்சுவல்" பெரும்பாண். கஎக.

[3] "செறிவளையாய்ச்சியர்" சிலப். க௯: எ.

[4] உ0எ-க௯: இவ்வடிகள், திருக்குறள், எ௪௩ - பரிமேல். மேற்கோள்; "வந்தெறி பொறிகள் வகைமாண்புடைய கடிமதில்" மணி. உ௮; ௨௩ - ௭.

[5] "ஆண்டலையணங்கடுப்பின்" மதுரை. உ௯.

(பி - ம்.) * 'உயருலகு' † 'ஆயிற்றேட்டவர்' ‡ 'தருவிரற்கூகையும்' § 'பரிவுறுநெய்யும்' || 'துடக்குமாண்டலையடக்கலுங்'

கவையுங் கழுவும் புதையும் புழையு
மையவித் துலாமுங் கைபெய ரூசியுஞ்
சென்றெறி சிரலும் பன்றியும் பணையு
௨௧௫. [1] மெழுவுஞ் சீப்பு முழுவிறற் கணையமுங்
கோலுங் குந்தமும் வேலும் பிறவு
ஞாயிலுஞ் சிறந்து நாட்கொடி நுடங்கும்
வாயில் * கழிந்துதன் மனைபுக் கனளாற்
† கோவலர் மடந்தை கொள்கையிற்

புணர்ந்தென்.

---

---

௨௧௪. கவை - கவைக்கோல். கழு - கழுக்கோல்.
புதை - அம்புக்கட்டு;
மண்ணிற்புதைத்த இரும்பாணியுமென்ப.

புழை - ஏவறை.

௨௧௫. ஐயவித்துலாம் - கதவை அணுகாதபடி
கற்கவிதொடங்கி நாற்றுங்

திலாம்; அப்புப்பற்ருக்கை தூக்கிற்றென்பாருமுளர்;
சிற்றம்புகளை வைத்து
எய்யும் இயந்திரமுமாம்.

கைபெய ரூசி - கையின்கட்[2] பொதுக்கும் ஊசி; பொய்யூசியென்று பாட
மோதி, மாற்ருரைக்
கையைப் பொய்யாக்குமூசியென்பாருமுளர்.

உகச. சிரல் - சிச்சிலி. பணை - வேய்வடிவாகப்பண்ணி வைப்பது; முர
சென்பாருமுளர்; குதிரைப்பந்தியுமாம்.

உகரு. எழுவுஞ்சீப்பு - கதவுக்குவலியாக உள்வாயிற்படியிலே வீழாது
எடுக்கவிடுமரங்கள்; [சீப்பு = விசை]; கதவோடு பொருந்தின மேவிற்றுமாம்;
நிரைத்த கதவுமாம். திறக்குங்காலத்து மேலேயெழுப்புகையால், எழுவுஞ்
சீப்பென்ருர். கணையம் - சீப்பு அகப்படக்குறுக்கே போடக்கடவ மரம்.

உகசு. கோல் - விட்டேறு. குந்தம் - சிறுசவளம்.

உகஎ. நாட்கொடி - நல்லநாளிலே கட்டின கொடி; நாள்தோறுஞ்செய்த
வெற்றிக்குக்கட்டின கொடியுமாம்.

உகஅ. கோவலர்மடந்தை - இடைச்சியான மாதரி.

(உகக) கோவலர்மடந்தை அடைக்கலங்கொண்டகொள்கையொடு (உகஅ)
வாயில்கடந்து தன்மனை புக்காளென்க.

---

[1] "ஏணியுஞ் சீப்பு மாற்றி, மாண்வினை யானையு மணிகளைந் தனவே" (புறநா. ௩௦௫); "சீப்புள் ளுறுத்துத் திண்ணெழுப் போக்கிக், காப்புள் ளுறுத்த கடிமதில் வாயில்" பெருங். ௧. ௪௩ : ௧௬௩ - ௪.

[2] பொதுக்கும் - துளைக்கும்; "அண்டத்தைப்பொதுத் தப்புறத் தப்பினு ளாமெ" கம்ப. இரணிய. ௪.

(பி - ம்.) * 'கடந்ததன்' † 'கோவலன்மடந்தையொடு கொள்கையிற் சிறந்தேன்'



தமர்முதல் - தமரிடம். வகுந்து - வழி ; [1] "வரைசேர் வகுந்திற் கானத் துப் படினே" என்றார் மலைபடுகடாத்தினும். இடவயின் - இடத்தில்.

வான்றுயர்நீங்கத் தாழ்பொழிலாங்கட் கவுந்தியிடவயிற் புகுந்தோனென்க.

௨௦. நாவ லந்தணன் றனவின் றுரைப்போன் :—

(இ - ள்.) நாவாற் சொல்வன்மையையுடைய அந்தணன், நீ இங்ஙனம் வரு தற்குக் காரணம் யாதென்று இவனை வினவித் தானுரைக்கின்றவனென்க.

௨௧ - ௭. வேந்துறு சிறப்பின் ........ தகைமொழி

கேட்டாங்கு

(இ - ள்.) கரிகாலன்கொடுத்த மிக்க
தலைவரிசையாற், சிறந்தபுகழினைப்
பெற்ற மாவின்றளிர்போலும் மேனியையுடைய மாதவியாகியமடந்தை மேற்
பெறக்கடவ நல்ல பகுதியைத் தன்னிடத்தேயுடைய குழவியைப் பயந்தெடுத்து
வாலாமையாகிய நாட்கழிந்தபின் மிகவும்
பிராயமுதிர்ந்த கணிகையர் மாதவி
மகட்கு நாமகரணம்பண்ணுவோமென்று தாம்
மகிழ்வுற்றுச்சொல்லிய மங்கல
மொழியைக் கேட்டு அப்பொழுது,

வாலாமை - ஆசௌசம். முதுகணிகையர் - தாயத்தாராயபெண்டிர்; அவர்[2] சித்திராபதிமுதலாயினர். முன்னர்க் குழவியென்றதன் பொதுமை நீங்க 'மகட்கு' என்றார். நாட்டுதல், பன்மைத்தன்மை. நாட்டுதல் - நிறுத்தல்.

உஅ - ருஎ. இடையிருள்

யாமத்து............பெயரீங்கிடுகென

(இ - ள்.) முன்னாளிலே எறியுந்திரைகளையுடைய கடலிடத்து இடையிருள்
யாமத்தில் தன்மரக்கலம் உடையப்பட்ட எங்கோன் முற்பவத்திற் புண்ணியத்
தையும் தருமதானத்தையும் செய்தோனாதலின் தன்னையணுகும் இடையூறு
ஓரிடத்துமின்றி அக்கடலிடையே [3] சிலநாணீந்துழி,
ஒருதெய்வந்தோன்றி,

இத்தீவினுள்ளாரை அரக்கர் வாதைபண்ணுமல் இந்திரனேவலாலே பாதுகாத்து வாழ்கின்ற யான் நின் துயர் கண்டு அதனையொழித்தற்குவந்தேன்; இனி அஞ்சாதொழிக; என்பெயர் மணிமேகலைகாண்; என்னையன்றியும் நீ முன்பண்ணிய தானமிகுதியான்வரும் புண்ணியமும் நின்னைஒழியாதாகலான், நீ இத்துன்பத்தினின்று நீங்கி இக்கடலினின்றும் ஏறுவாயாகவெனச்சொல்லித் தன்விஞ்சையால் ஒரு திடரிற்பெயர்த்து இடும்பையைத்தீர்த்த [4] எம்குலதெய்வத்தினுடையபெயரை ஈங்கு நீரிடுமினென்று நீ சொல்லவென்க.

கரைகாணக்கடலென்பார் பெருங்கடலென்றார்; எங்கோன் - எம்மரபில் முற்பட்டான். முன்னுளென்பதனை உடைகலப்பட்டவென்பதனோடும் புண்ணியதானமென்பதனோடுமொட்டுக. நண்ணுவழியின்றியென்பதற்குக் கரைசேரு

---

[1] மலைப்படுகடாம், உசஉ. [2] சித்திராபதி - மாதவியின்தாய்; மணி. உ: ஏ0 - எக. [3] சிலதாளென்றது ஏழுநாளை; மணி. உக: கக.

[4] இதனை, "திரையிரும் பௌவத்துத் தெய்வமொன் றுண்டெனக், கோவலன் கூறிக் கொடியிடை தன்னையென், னுமஞ் செய்த நன்னு ளன்னிருட், காமன் கையறக் கடுநவை யறுக்கு, மாபெருந் தவக்கொடி யீன்றனை யென்றே, நனவே போலக் கனவகத் துரைத்தேன்" (மணி. எ: கக - அ.) என்பதனுலுமறிக.

கரு.—அடைக்கலக்காதை.

சுoரு

மிடமின்றியென்றுமுரைப்பர். புண்ணியதானம்,

உம்மைத்தொகை. தானத்

உறுதி - தானப்பயன்; ஆவது புண்ணியம். விஞ்சையிற்பெயர்த்தென்பதற்கு இக்கரையிலே மீளவுந்தந்தெனினுமமையும். எங்குலதெய்வம் - எங்குலத்தை யுண்டாக்கியதெய்வம்; இன்னும் விஞ்சையிற் பெயர்த்து விழுமந் தீர்த்தவென்பதற்குத் தன்விஞ்சையினுலே போயபொருளும் [கல்வியும்] வஞ்சமறத்தந்து இடும்பையைத்தீர்த்த எங்குலதெய்வமெனினுமமையும்; "விஞ்சைகள் வல்

லேன் விளிந்தநின் ருேழரொ, டெஞ்சிய வான்பொரு

ளெல்லா மிமைப்பினுள்,

வஞ்சமொன் றின்றி மறித்தே தருகுவ, னெஞ்சிற் குழைந்து

நினையன்மி னென்

ருன்" என்ருர்பிறரும்.

ஈங்கு - இக்கடலிடத்தெனவும், இந்நகரிடத்தெனவும்,

இப்படி விபத்தி

னின்றுமெடுப்பதற்கெனவுமாம்.

வந்தேன்; அஞ்சல்; உறுதியொழியாது; நீங்கி ஒழிகெனப் பெயர்த்துத்

தீர்த்த எங்குலதெய்வமென்க.

ரு-அ - சக.

அணிமே கலையார்........செங்கையிற்பொழிய

(இ - ள்.) அணிந்தமேகலையையுடைய அநேகங்கணிகையர்கூடி மணிமேகலையென்று பெயர்கூறி அரசனையும் நகரையும்வாழ்த்திய அற்றைநாளிலே நிறைந்த அழகையுடைய மடந்தையாகிய மாதவியுடனே செம்பொன்னாகிய மாரியைச் செங்கையாலே நீ பொழியாநிற்கவென்க,

௪௨ - எ. ஞான நன்னெறி ..................கைக்கொள

(இ - ள்.)[1] அங்ஙனம்பொழியாநிற்க, [2] வீட்டுலகஞ்சேர்தற்கு நல்லநெறியாகிய ஞானத்திற்குத் தானெல்லையாகிய மறையோனொருவன் தன்மூப்பான் யாக்கைவளைந்து நடைதளர்தலால் தான்பிடித்த தண்டினையே காலாகவூன்றிக் கூனியாக்கையையுடையனாய்த் தானங்கொள்ளுதற்குத் தன்னைமதித்துவருகின்றவனைப் பாகர்செயலைக்கழிந்து எங்கணும் பறைகொட்டவருகின்ற மதவேகத்தையுடைய யானை சினத்தாற் கைக்கொண்டதாகவென்க.

௪௬ - ௫௩. ஒய்யெனத் தெழித்தாங்கு ..........கருணை மறவ

(இ - ள்.) அங்ஙனம் மறையோனைக்கைக்கொண்டவளவிலே யானையை அவனை நெருங்காதொழியென உரப்பி அக்கணத்திலே சென்றுசேர்ந்து தன் கையாலே மறையோனைநீக்கி அதன்கையில் தான்புக்கவளவிலே யானை கையால் வளைப்பப் புரைபொருந்திய வளைந்த கையினின்றுநீங்கி வெளிய கோட்டிலே யடங்கி அது பற்றுக்கோடாகவேறிக் கரிய பெரிய குன்றின்மேலிருந்த விஞ்சையனைப்போல அதன்பிடரினிடத்திருந்து மிக்கசினநீங்காத மதத்தையுடைய களிற்றை யடக்கிய கிருபாவீரனே !

---

[1] சீவகசிந்தாமணி, ௩௨0.

[2] "தானத்தாற் போகந் தவத்தாற் சுவர்க்கமா, ஞானத்தால் வீடாக நாட்டு" (சிறுபஞ்ச. ௧௯); "ஞான முன்னிய நான்மறை யாளர்கைத், தானமென்னத் தழைத்தது நீத்தமே" (கம்ப. ஆற்று. ௫.) என்பவை இங்கே அறியற்பாலன.



[1] ஒய்யென்பது

யானையைப் பாகர் வையும் ஆரியமொழியெனினுமமையும்;

[a] "அண்ணலங் களிற்றை வையா" என்றார் பிறரும். இனி விரையத் தெழித்தெனினுமமையும்; 'தெழித்தல் - பிரித்தலுமாம்; குடநாட்டார்வழக்கு. பொய்-

புரை. பொரு - பொருந்தின ; விகாரம்.

முடங்குகையையுடையகோடெனினு

மமையும். மை - மஞ்சுமாம் ;

முகபடாத்துக்குவமையாக்குக. பிறழ்தல் -

நீங்குதல்; [a] "மொய்கொளப் பிறழ்ந்து முத்தார் மருப்பிடைக் குளித்து" என்றார் பிறரும். கருணை - அருள். மறம் - வீரம்.

கைக்கொளத் தெழித்து ஒழித்துப் புக்கு அடங்கி

இருந்து அடக்கிய

மறவவென்க.

ெ - எரு. பிள்ளை நகுலம். ..

...............செல்வ

(இ - ள்.) தான்வளர்த்தகீரி தன்பிள்ளையைக்காத்திருந்ததாக, ஒரு பாம்பனுக அதனைக் கௌவித்துணித்த குருதிவாயோடு தன்வரவுபார்த்து எதிர்கொண்டதனைத்

தன்பிள்ளையைக்கடித்ததெனக்கருதித்

தன்கையின் மணையாற்புடைக்க

அது மரித்தலாலே வடதிசையைநோக்கிக் கங்கையாடப்போகின்ற கொழுநனை மனைவி பின்செல்லப் பொறுதிகழ்ந்து நின்னொழுக்கத்தின் உண்டு மனையறத்தின்கண் வாழும் வாழ்க்கை இனிக் கடவதன்று; ஆதலான், வடமொழிவாசகமெழுதிய இவ்வேட்டினை உணரக்கடவ பொருளையறியும் மாந்தர்கையகத்தே

நீகொடுக்கவெனச்சொல்லி அவன்போக,

பீடிகைத்தெருவினும் மாடமறுகினும்

பிறர்மனைகளினும் போகிமீளத்திரிந்து கருமக்கழிபலங்கொண்மினெனக் கூவும் அருமறையாட்டியைக்கூவி நீ இங்ஙனமாதற்கு நீயுற்றவிடர்யாது? இக்கூறிய தியாதென்று கேட்ப, அம்மார்தர் தான் கொலைசெய்தலாற் கொழுநன்பிரிய அவனைக்காணாது மிக்கதுன்பமுற்றதனைக்கூறி இத்திறமாகிய பொருளையெழுதிய ஏட்டினை வாங்கிக்கொண்டு கைப்பொருளைத் தந்து எனது கடுந்துயரைக் களைக

வென்றுசொல்ல, அஞ்சாதொழி; நின்துயரை யானேகளைகேன்; நின்னெஞ்சின்மிக்கதுயரத்தை இனி நீங்குவாயாகவெனச்சொல்லி அப்பொழுதே தருமாசனத்தோருரைத்த நூல்வழியே அப் பார்ப்பனிக்குள்ளதாகிய கொலைப்பாவநீங்கு தற்குத் தானத்தையுஞ்செய்து அவள்துன்பநீக்கிக் காட்டுநெறிக்கட்போன கணவனையுங்கூட்டி அவர்க்கு மேலுள்ளகாலத்திற்குத் தளராத [4] பலபடைப்பாகிய செல்வத்தோடே மிக்க கைப்பொருளையும் [5] கொடுத்தது வேள்வியையுஞ் செய்வித்த தொலையாத செல்வனே!

வடதிசைப்பெயர்தல் - கங்கையாடப்போதல். கை - ஒழுக்கம்; கையானுண் டொழுகும் இல்வாழ்க்கையெனவுமாம். வடமொழி - ஆரியம். வாசகம் - கவி; ஆவது "அபரீக்ஷ்ய நக‌ர்த்தவ்யம் கர்த்தவ்யம் ஸுபரீக்ஷிதம் - பஶ்சாத் பவதி ஸந்தாபம் *ப்ராஹ்மணீ நகுலம்யதா" [அபரீக்ஷ்ய

---

[1] "ஒய்யெனப் பெறலருங் குஞ்சரமேறலின்" சீவகசிந்தாமணி, ௧௮௩௯.
[2] சீவகசிந்தாமணி, ௬௭௮. [3] ,, ௧௮௩௯.
[4] "படைப்புப் பலபடைத்து" புறநா. ௧௮௮.
[5] கோவலன் கொடையிற்சிறந்தவனென்பது, "கொடைகெழு தாதை கோவலன்" (மணி. ௨௬ : ௧.) என்பதனாலு மறியலாகும்.

(பி - ம்.) * "ப்ராஹ்மண்யா நகுலாஹிவ" (பிராஹ்மண்யா நகுலாஹிவ.)

## ௧௫.—அடைக்கலக்காதை.

நகர்த்தவ்யம் கர்த்தவ்யம் ஸ்பரீக்ஷிதம், பச்சாத் பவதி ஸந்தாபம் ப்ராஹ்மணீ நகுலம்யதா.] என்பது. ஏடு - இக்கவியையெழுதியவேடு. மறுகி - சுழன்று கருமக் கழிபலம் - பாவத்தைக்கழிக்கும்புண்ணியம். கருமம் - அவள்கொன்ற கொலை. அதனைக் கழிக்கையாவது போனகணவனைக்கூடுதல். பலங்கொள்கை - அவன் வரும்படி தானம் பண்ணவேண்டும்பொருட்டுருதல். தீத்திறம் - கொலைத் திறம்.

ஒல்காச்செல்வமுடையோனுதலாலே [1] உறுபொருள்கொடுத்தென்றுமாம்.

## எசு - கூ0. பத்தினி யொருத்தி......

..இல்லோர் செம்மல்

(இ - ள்.) ஒருபத்தினி பொய்ப்பழியெய்துதற்கு அறிவிலாதானொருவன் அவள் கணவனுக்குப் பொய்ச்சான்றேறுதலாலே [2] தவமறைந்தொழுகுவோர் முதலாகிய அறுவகையோரையும் புடைத்துண்ணும் பூதத்தினுடைய கரியபாசத்தினிடத்தே அவனகப்பட அங்ஙனம் அகப்பட்டோனுடைய தாய்படாநின்ற துயரத்தைக்கண்டு அவனைக்கட்டிய பாசத்தினுள்ளே விரையத்தான்புகுந்து, பூதநாதனே, நினக்குணவாக என்னுயிரைக்கைக்கொண்டு இவனுயிரைத்தருவாயாகவென்றிரப்பவும், பூதம் நல்காதாய் இக்கீழ்மகனுடைய உயிர்க்கு நினது நல்லுயிரைக்கொண்டு மேலானகதியை இழக்குமுறைமை என்பாலில்லை; ஆதலால் நீ இக்கருத்தை யொழிவாயாக; நின்முன்பே இவனைப்புடைத்துண்பேனெனப் புடைத்து விழுங்கிற்றாக; அதனால் நெஞ்சழிந்த இடும்பையோளொடு

மீண்டுபோந்து அவனுடைய சுற்றத்தினுள்ளார்க்கும் தொடர்புபட்ட [3] கிளைகட்கும் நெஞ்சாறப்பற்றிய நின்கிளைஞரைப்போல அன்புபட்டுப் பசியாகியபிணியைத்தீர்த்துப் பல்யாண்டு பாதுகாத்த இல்லத்தோர்தலைவனே !

படிறு - பொய். அறியாக்கரி - பொய்க்கரி.

தவ்வை - தாய். நரகன் - நரகிற்கேதுவான வினையையுடையவன்.

தன்னைவணங்கியகோவலனை, மாடலன், கடகளிறடக்கிய கருணை மறவ! நல்வழிப்படுத்த செல்லாச்செல்வ! பல்யாண்டுபுரந்த இல்லோர்செம்மலெனப் புகழ்ந்து மேலுஞ்சொல்லுவான் :—

கக - உ. இம்மைச் செய்தன ..............நீயென வினவ

(இ - ள்.) கோபால ! யானறிய இப்பிறப்பிற்செய்த வெல்லாம் நல்வினையாகவும் இம்மாணிக்கக்கொழுந்துடன் நீ போந்து ஒருதனியுழந்தது உம்மைத் தீவினைப்பயனோதானென்று வினவினவளவிலேயென்க.

உம்மை - முற்பிறப்பு. ஒருதனியுழத்தல் - உசாவில்லாத்துன்பம். திருத்தகுமாமணி-முழுமாணிக்கம். கொழுந்தென்றான்; அவளிளமைபற்றி. விருத்தஞான்விருத்தனே.

கடு - கருசு. கோவலன் கூறும்........கடிதீங் குறுமென

(இ - ள்.) மாடலன் உம்மைப்பயனோவென்றவினுவிற்குக் கோவலன்கூறுவான் :—ஒருகீழ்மகனால் இக்காவல்வேந்தனுடைய இந்நகர்தன்னிலே மனம்

---

[1] திருக்குறள், எகூசு. [2] சிலப். இ : கஉ-அ - கூச. [3] தாய்த்தார்.

பொருந்திய ஐவகைக்கூந்தலையுடைய இவள் நடுங்கித்துயரமுற யான் உடுத்த கூறைபிறர்கொள்ளப்பட்டுக் கோட்டினையுடைய கிடாவின்மேலேயேறவும் அணிபெற வகுக்கத்தக்க புரிந்த குழலையுடைய ஆயிழையுடனே பற்றற்றோர்பெறும் பேற்றை யான்பெறவும் காமக்கடவுள் மலர்வாளியை வெறுநிலத்தேயெறிந்து செயலற்றேங்கும்படி போதியறவோனிடத்தே மணிமேகலையை மாதவியளிப்பவும் மெய்போலச் செறிந்த இருளையுடைய வைகறையாமத்தே கனவுகண்டேனாதலான் அது நன்றன்று; இப்பொழுதே வந்துறுமென்று சொல்லவென்க.

குறுமை, ஈண்டுப்பண்பன்று; சிறுமையென்னும்பொருட்டாய்க் குலத்திற்கடியாய் அதன் உயர்பின்மையுணர்த்திநின்றது. காவல்வேந்தன்கடிநகரென்பதற்கு, இகரச்சுட்டுவருவித்துரைக்க. கோட்படுதல் - பிறராற் கொள்ளப்படுதல். கோட்டுமா - எருமையேற்றை; என்னை? [1] "சொல்லத் தகுமுகட் டொட்டகம் வெட்டுந் துணைமருப்பா, ரில்லத் தெருமை கழுதைக ளொன்றிவை யேறிநின்றே, மெல்லத் தரையி லிழிவதன் முன்னம் விழித்திடுமேற், கொல்லத் தலைவரு மாற்றருஞ் சீற்றத்துக் கூற்றுவனே" என்றாராகலின். இனிப் பன்றியெனவுமாம்; [2] "களிறுமேற் கொள்ளவுங் காழக நீப்பவும்,..................கனவினரியன காணாய்" என்றார் புறத்தினுமாதலால். களிறென்றது ஈண்டுப்பன்றியை; என்னை? [3] "மிக்க வெயிற்றின கொம்பின பன்றி விறற்குரங்கு, தொக்கன

தம்மைக் கனவினிற் காணிற் சுடர்மகுடச், சக்கர வர்த்திக ளாற்பய மூண்டெ னுந் தம்மயிர்க, ளுக்கன வாதல்செய் தாற்பொரு டேயும் பயமுடைத்தே" என்றாராகலின். கோட்டுமாவென்பதனை யானையெனின்,—[4] "ஓதும் பசுவு மிடபமும் யானையு மோங்கல்களுஞ், சீர்துன்று கோயிலு மேறிடக் காணினுந் தீமலத்தை, மீதொன்ற மேனியிற் பூசிடக் காணினு மெல்லியலார், சூதொன்று கொங்கை புணரினும் வாழ்வென்று சொல்லினரே" என்பதனால் யானையன்மை யறிக. பிணிப்பு -[5] பற்று; ஆவது அன்பாகிய ஒரு தளை. அதனையறுத்தோர் அருளுடையோர்; அவர்பெற்றியாவது சுவர்க்கமெனக்கொள்க; [6] "அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க், கிவ்வுலக மில்லா கியாங்கு" என்றாராகலின். வாளி-வாளியை. வறுநிலம்-வெறுநிலம்; [நிலங்கண்டும் அல்லாமைகூறிற்று.] கையற்று - செயலற்று. போதியறவோன் - புத்தன். நள், நளியென்னுமுரிச் சொல் ஈறு திரிபு; செறிவின்கண்வந்தது; எனவே வைகறையாமமென்பதா யிற்று. கடிது - பொல்லாததொன்று. ஈங்குறும் - இவ்விடத்தே வரும். இனி, இக்கனக் கடையாமத்துக்கண்டதாதலால், இவ்விடத்தே கடிதிற்பலிக்குமென்று னெனினுமமையும்; [7] "ஆயிடை, வெஞ்சுடர் தோன்றி விடிந்ததை யன்றே" என்றார் சிந்தாமணியினும். [8] "படைத்தமுற் சாமமோ ராண்டிற் பலிக்கும் பகிரண்டே, கிடைத்தயிற் சாம மிருதிங்க ளொட்டிற் கிடைக்குமென்னு, மிடைப்பட்ட சாமமொர் மூன்றினிற் றிங்களொர் மூன்றென்பவாற், கடைப் பட்ட சாமமு நாள்பத்து ளேபலங் கைபெறுமே." இவை கனநூலாதலாற் கொள்க. இன்னும், கடிதீங்கு-மிக்கதீங்கு; அச்சத்தையுடைய தீங்கெனவுமாம்.

---

[1] கனநூல், கரு.
[2] புறநானூறு, சக.
[3] கனநூல், கo.
[4] கனநூல், ச.
[5] திரிகடுகம், உஉ.
[6] திருக்குறள், உசஎ.
[7] சீவகசிந்தாமணி, உகக.
[8] கனநூல், உ.

கரு.— அடைக்கலக்கா

ை த.

க01எ - கசு. அறத்துறை மாக்கட்கு........

.கூறுங் காலை

(இ-ள்.) துறவறத்தா னுறையுமாக்கட்கல்லது இந்தப்

புறஞ்சிறையிலிருக்கு

மிருப்புப் பொருந்தாதாகலின், இவ்வகநகரிடத்துவாணிகர்

மாசாத்துவான் மக

னென்னும்புகழால் எதிரேற்றுக்கொள்ளுவார்; ஆகலின்,

இவ்விடத்து நின்னி

ருப்பையொழிக; இனிக் கதிர்செல்வதன்முன்னே

நின்காதலியுடனே மதுரை

மாநகர் புகுகவென்று கவுந்தியடிகளும் மாடலனும்

கோவலனுக்குக் கூறுகின்ற காலத்தேயென்க.

அறத்துறை - அறத்தின் றுறையெனவும், அறத்தின் கணுறையெனவுமாம். புறஞ்சிறை-புறம்பின்கட்பள்ளி. அகநகர்மருங்கின் அரசர்பின்றோரெனமாறுக. நின்னுரையென்றார், மாசாத்துவான் மகனென்பதனை. மதுரையாகிய மாநகரென்க.

ககரு - கூ. அறம்புரி நெஞ்சின்........கண்டடி

தொழலும்

(இ - ள்.) அங்ஙனங்கூறுகின்றுழி,

ஆயர்குலத்துப்பிறந்து மாதரியென்று

பெயர்கூறப்படுவோள் ஒருமுதுமகள் பூப்போலுங்கண்ணையுடைய [1] இயக்கிக்குப் பான்மடையேற்றி வழிபாட்டோடு வருகின்றவள் அறத்தைப்புரிந்தநெஞ்சினையுடைய அறவோர்பலராயிருக்கின்ற புறமதிற்பள்ளிக்கணிருந்த கவுந்தியடிகளைக்கண்டு வந்து அடிதொழுதவுடனென்க.

இயக்கி - [2] ஆரியாங்கனை. பான்மடை - பாற்சோறு.

கஉO - உச. ஆகாத் தோம்பி...............எண்ணின ளாகி

(இ - ள்.) ஆவைக்காத்தோம்பி அவ்வாவின்பயனை யாவர்க்குமளிக்கும் இந்த இடையருடைய இல்வாழ்க்கையில் ஒருகொடுமைப்பாடுமில்லை; அதன்மேலும் இவள் நமதுரைநெறியினிற்றலால் மனத்தில் அழுக்காறிலள்; அதுவுமன்றி முதுமகள்; ஔவியமில்லாள்; அளிக்குந்தன்மையையுடையள்; ஆதலான் மாதரியிடத்தே இம்மடந்தையை அடைக்கலமாக இற்றைக்குவைப்பதற்கு வரும் தீங்கு யாதுமில்லையெனத் தன்மனத்தில் எண்ணினளாகியென்க.

ஆக்களைக்காத்து - வெருவும் பிணியுமுற்றழிக் காத்து. ஓம்பி - புலத்தலைப் புல்லார்த்தி அலைத்தலை நீரூட்டி. ஆப்பயன் - பால்முதலியன. அளிக்குங்கோவலர் - கன்றருத்தி மிக்கதனை யாவர்க்குமளிக்குங்கோவலரென்க. அழுக்காறுவது மனத்தழுக்கு. செவ்வியள் - ஔவியமில்லாள்; ஆவது மனக்கோட்டமிலளென்றபடி. அளியள் - யாவரானும் அளிக்கத்தக்காள்.

கஉகு - நO. மாதரி கேள்...............அடைக்கலந் தந்தேன்

(இ - ள்.) மாதரி! கேளாய்; இம்மடந்தையுடையகணவன் தந்தைபெயரைக் கேட்பாராயின், அவன்குலத்திலுள்ள இவ்வூரில்வாழ்வோர் பெறுதற்கரிய

---

[1] இயக்கி - யக்ஷிதேவதை; உச - தீர்த்தங்கரர்களுள் ஒவ்வொருவருக்கும் பணிசெய்தற்குரியவர்களாக யக்ஷனென்றும் யக்ஷியென்றும் இவ்விருவருள்ளாரென்று ஜைனநூல்கூறும்; இப்பெயர் கன்னியாகுமரிப்பக்க ஊர்களில் இசக்கியென வழங்கும்.

[2] ஆரியாங்கனை - கணவனிருக்கும்பொழுது துறந்தவள்; "கணவனிற்றுறவின் மன்னுமாரி யாங்கனைகள்" திருவிளை. சுக: கஎ.

ருஉ

பொருளைப் பெற்றாரைப்போல நல்விருந்தாக எதிர்கொண்டு கரிய பெரிய கண்ணினையுடையாளோடு இவனைத் தங்கள் காவலையுடைய மனையகத்தே கொண்டு சென்று வைத்துக்கொள்வார்கள்; அங்ஙனமாகிய உடையபெரிய செல்வரது மனையகத்தே சென்றுபுகுமளவும் இடைக்குலமடந்தாய்! உனக்கு நான் இவளை

அடைக்கலமாகத் தந்தேனென்றாளென்க.

கஙக - கூ. மங்கல மடந்தையை..............

..........தாங்கு

(இ - ள்.) இவ்வுயர்குடியிற்பிறந்த இவளை நின்கையில் அடைக்கலமாகத் தந்தேனாதலால், இம்மடந்தையை மங்கலநீராலாட்டிச் சிவந்த கயல்போலும் நெடிய கண்ணில் அஞ்சனத்தையுமெழுதி நறிய மெல்லிய கூந்தலிலே சிலவாகிய மலரைப்பெய்து தூய மடிப்புடைவையையுடுத்து இவ்வாயிழைக்கு ஆயமகளிரும் செவிலித்தாயரும் நற்றாயும் நீயேயாய்த்

தாங்குவாயாகவென்றாளென்க.

தொல்லோர்சிறப்பினுயம்-பழையோராகச் சிறப்பித்துக் கூறப்பட்டவாயம்.

ஆட்டினைத் தீட்டிப் பெய்து உடீஇத்

தாங்கென்றாளென்க.

கஙகூ - அ.

எங்கு.........................................அறிந்திலள்

(இ - ள்.) இப்படித்துயருற்று என்னோடுபோந்த இளையகொடிபோலும் நங்கையுடைய அழகிய சிறிய அடியை முன்பு மண்மகளும் கண்டறியாள்;

இவளடியைப் பூமிதேவியும் கண்டறியாளென்றது அகம்விட்டுப்புறப்பட்டறியாளென்றவாறு. இனி மண்மகள் இவள் மென்மையைத் தானறிந்து நெகிழ்ந்திலளென்றுமாம். இன்னும் கால் கொப்புளங்கொண்டு நிலத்திற் பாவாமையிற் கூறினுளெனினுமமையும்.

(இ - ள்.) கதிரின்வெம்மையால் தன் காதலன்மெய் வருந்தியதென்று நடுக்குதுயரமுற்று நாவும்புலர வாடித் தன் றுயரென வேறுகாணாத பெருமை யமைந்த பூங்கொடியை ஒப்பாள்; தங்காதலர்க்கு இனியவாழ்க்கைத்துணையாகிய மாதர்க்கு இன்றியமையாத கற்பைக் கடமாகப்பூண்டுகொண்ட இத்தெய்வமே யல்லது வேறு பொலிவினையுடைய தெய்வத்தினை யாம்கண்டிலேம்; அதுவுமன்றிக் காலமழை பொய்த்தறியாது; வளம் பிழைத்தலையறியாது; வேந்தர்கொற்றம் சிதைந்தறியாது; அஃது எந்தநாடெனிற் பத்தினிப்பெண்டிரிருந்த நாடென்ற நல்லோர்சொல்லும் அத்தகு மிகுதியையுடைய தருமநூலுரையை நீ யறிவையோ அறியாயோவென்றுளென்க.

இன்பதுன்பம் [1]தேர்க்கக்கும் தோன்றற்கும் ஒன்றாய்வருதலின், தன்றுயர் காணாவென்றார். கற்பைக் கடமாகப்பூண்ட பூங்கொடியாகிய இத்தெய்வமென்க.

கசக - ௫0. தவத்தோ ரடைக்கலம்..........கேளாய்

(இ - ள்.) தவத்தினராயுள்ளோர் தாம்கொடுத்த அடைக்கலந்தான் அப்போது சிறிதாயிருப்பினும் பின்பு மிகப்பேரின்பத்தைத்தரும்; அதை யான் நீ கேளாயென்றுளென்க.

---

[1] "தோகைக்குந் தோன்றற்கு மொன்றாய் வருமின்ப துன்பங்களே" திருச்சிற். எக.

## ௧௫.—அடைக்கலக்காதை

த. சுகக்கி

ஆய், அசை.

கஙக - ௫. காவிரிப் பட்டபை..... ... .. .

.சாரணர் தம்முன்

(இ - ள்.) காவிரியைத் தோட்டக்கூற்றிற்கு எல்லையாகவுடைய பட்டினத்துள்ளே பூவிரிந்த பொதுமைநீங்கின அழகியநிழலையுடைய பிண்டிமுதற்கண்ணே சாவகர் ஒருங்குகூடியிட்ட விளங்கொளிச்சிலாதலத்தின்மீதேயிருந்து

தருமத்தை யாவர்க்கும்போதிக்கும்[1] சாரணர்
முன்பாகவென்க.

படப்பை பக்கமுமாம். பொதுநீங்குதிருநிழல் - பிறிதொருமரத்திற்கின்றித் தனக்கேயுரிய நிழல்; ஆவது ஆதித்தன்சாயச் சாயாநிழல். உலகநோன்பிகள் - துறவாது விரதங்காக்குஞ்சாவகர். சிலாதலம் - அப்பட்டினத்துச் சிலாதலம்.

கஙிசு - சுo. திருவி லிட்டு............வந்துநின்
றோனை

(இ - ள்.) [2] திருவிற்போல ஒளிவிட்டு அழகுதரும்
திருமேனியையுடைய

ணுய்த் தாரையுடையனுய் மாலையையுடையனுய்ப் பொற்பூணினையுடையனுய் மக்கள்கண்ணிற்குப்புலப்படாத தேவர்பலருந்தொழும் படிமையுடையவன் ஒரு பாகத்துக்கை கருவிரற்குரங்கின்கையாகவுடைய தேவனொருவன் வந்துநின்றான்; நின்றவனையென்க.

திருவில் - இந்திரவில். வில்லிட்டென்பதற்குத் தருமத்தானவொளியைப் புறப்படவிட்டென்பாருமுளர்; தார் - பூமாலை. மாலை - மணிமாலை. தாரமாலையனெனப்பாடமோதி, மந்தாரமாலையையுடையனெனினுமமையும். படிமை - தெய்வ வடிவு. பெருவிறல் - பெரியவெற்றி. நின்றோனை, [3] "ஆவோ வாகும்"

என்பதனுன்முடியும்.

கசுக - உ. சாவக ரெல்லாம்........இறையோன் கூறும்

(இ - ள்.) அச்சிலாதலத்தின்கீழிருந்து அறங்கேட்டசாவகரெல்லாரும் எழுந்து சாரணரைத்தொழுது இவன் இங்ஙனம்வந்தவரவிற்குக் காரணம் யாதெனக்கேட்பச் சாரணன் கூறுவான் :—

கசுரு - கூக. எட்டி சாயலன்........தோன்றின னென்றலும்

(இ - ள்.) * எட்டிப்பட்டத்தையுடைய சாயலனென்னும் வாணிகன் துறவாது இல்லறத்திருந்தவன்றனது உண்ணாவிரதத்தையுடையோர்பலரும் புகும்

---

[1] உஅ௦ - ஆம் பக்கத்துள்ள அடிக்குறிப்பைப் பார்க்க.

[2] "மற்றவன் றேவனுகி வானிடு வில்லிற் றோன்றி" (சீவக. கூ௧௪) என்பதும், 'நால்கள் இந்திரவில் இன்னவாறு தோன்றுமென்று அது தோன்றுமுறைமை கூறுவாகவின், அங்ஙனந் தோன்றுகின்ற தேவர்க்கு அஃது உவமையாயிற்று' என்னுமதன் உரையும், "வானிடுவில்லின் வரவறியா" (நாலடி. கடவுள்) என்பதும் ஈண்டு அறியற்பாலன.

[3] தொல்காப்பியம், வினையியல், சூ. ௧௪. * எட்டியென்பது அரசனால் வணிகர் பெறுவதொரு பட்டப்பெயர்; "எட்டிகுமரனிருந்தோன்" (மணி. ௪ : ௫அ); "எட்டிப்பூப்பெற்று" (ஷ. ௨௨ : ௧௧௫); "எட்டிகுமரன்" (பெருங். ௧. ௪௦ : ௧௧௧), "எட்டிகாவிதிப்பட்டம்" (ஷ. ௨. ௩: ௧௪௪;) "எட்டி, காவிதியென்பன தேயவழக்காகிய சிறப்புப்பெயர்" என்பர்; (தொல். தொகை. சூ. ௧௨ - ந.)



மனையகத்தே அவன்மனைக்கிழத்தி ஒரு பெரிய தவமுதல்வனைத் தன்வினைநீங்க எதிர்கொள்கின்ற பொழுதின்கண் அவ்வூரிடத்துத் துரப்புண்டு உணவும் பெறுது சிறுமையுற்றதொரு கருங்குரங்கு அச்சத்தோடு ஒதுங்கிவந்து உள்புக்கு அருளறத்தின்பகுதிப்பட்ட மாதவனுடைய பாதத்தின்வணங்கி அவன் உண்

டொழிந்த அன்னத்தையும் கைகழீஇய நீரையும் சிறிதருந்திப் பெரும்பசி தீர்ந்து எதிர்முகநோக்கிய முகச்செவியைக்கண்டு சவியாவுள்ளத்தையுடைய அறிவனும் மனமகிழ்ந்து, இல்லறக்கிழத்திதன்னை, நீ நின்மக்களின் ஒருதன்மை யாக ஓம்புகவெனக் கைப்படுப்ப, அவளும் மிக்கோனாற்கூறப்பட்ட மெய்ம்மொழியைத் தப்பாமற் பரிகரித்தொழுகாநிற்கின்றுழி, அங்ஙனங்காதலித்த அக்

குரங்கு மரிக்க, அதனுடைய ஒருகூற்றைத் தானஞ்செய்கின்ற மனைக்கிழத்தி இதன் தீப்பிறப்பறுகவெனச் செய்தனளாதலானே மத்திமதேசத்து வாரண வாசியென்னுநகரியின் உத்தரகௌத்தனென்னுமரசனுக்கு

ஒருமகனாய் அழகி

னோடும் மெய்ப்பொறியோடும் உணர்வோடுந்தோன்றி மிக்க தானசூரனாய்ப் பல்வகைப்பட்ட தானங்களையுஞ்செய்து அந்த அரசுரிமையிலே முப்பத்திரண் டாண்டிருந்து பின்பு தெய்வயாக்கைபெற்றனன்; ஆதலானே அங்ஙனம்பெற்ற சீமத்தான பெரும்பயனெல்லாம்

தன்னைக்காத்தளித்தவள்செய்த தானத்தாற்

பெற்ற சிறப்பென்று உட்கொண்டு முற்பிறப்பிற்

கருங்குரங்கானவடிவிற் சிறிய

கையைத் தனது பெரிய ஒருபாகத்தேகொண்டு

சாயலனுடைய மனையாள் தலைநாளிற்செய்த

நன்மைக்கூற்றிலேபொருந்திய

தானத்தாலே இந்தவடிவாயி

னேன் ; இதனை நீங்களறிமினென்று

சாவகநோன்பிகட்கெல்லாம் விளங்க அறி

வித்தற்குத் தேவகுமாரன்

இங்ஙனந்தோன்றினனென்றுசொல்லவுமெனக்.

பட்டினிநோன்பிகள் - [1] இரண்டு உவாவும்

பட்டினி விட்டுண்ணும் விரதிகள். சிறுகுரங்கு - மெலிந்தகுரங்கு. கடைநாள் - மரணம். ஒருகூறென்றார், பிள்ளைகளொருபாதியை. உத்தரன் கவிப்பற் கொரு மகனாகியெனப்பாடமோதி, இக்குரங்கு உத்தரனென்னும்பெயரோடு கவிப்ப னென்னும் வாணிகனுக்கு ஒருமகனாகப் பிறந்தெனபாருமுளர்.

கக௨ - ,எ. சாரணர் கூறிய.........முடிவுல கெய்தினர்

(இ - ள்.) அங்ஙனம் சாரணர்கூறிய பெருமையமைந்த நன்மொழியைத் தெய்வ வாக்கியமாகக்கொண்டு அறத்தின்கட்டலைப்பட்டு அப்பதியிலிருந்த அருந் தவமாக்களும் தவத்தினர்க்கெல்லாம் பொதுப்பட்டவாழ்க்கையையுடைய சாவ கமாக்களும் தானமிட்ட எட்டியும் மனைவியும் முட்டாத இன்பத்தையுடைய வீட்டுலகத்தைப் பெற்றார்கள்காணென்றாளென்க.

'தவத்தோ ரடைக்கலந் தான்சிறி தாயினு மிகப்பே ரின்பந் தருவது கேளாய்' என்றவள் இங்ஙனங்கூறினாளென்க. தன்றறவாழ்க்கை - தனதென்னுந் தன்மையில்லாதவாழ்க்கை; [2] "மன்றில் வதியுநர் சேட்புலப் பரிசிலர், வெல் போர்ச் சேஎய் பெருவிற லுள்ளி, வந்தோர் மன்ற வளியர் தாமென" என்றார் மலைபடுகடாத்திலும்.

---

[1] "ஓவா திரண்டேவு மட்டமியும் பட்டினிவிட் டொழுக்கங் காத்த, குவாத். தவமென்றார்" சீவக. கஙசஎ. [2] மலைபடுகடாம், சகஉ - ௪.

## கரு.—அடைக்கலக்காதை

த. ௪௧௧

கக௮ - ௨௦௦. கேட்டனை யாயின்..........

..........ஏத்தி

(இ - ள்.) இவ்வடைக்கலத்தின்பயனை நீகேட்டியாயின்

இந்தத் தோடார்

குழலினையுடையாளுடனே பொழுதுசெல்லுமளவும் நீட்டித்து இவ்விடத்திராது நீ போவாயாகவென்று கவுந்தியடிகள்கூறத் தான்பெற்ற கையடைக்கு உவந்தனளாய்க் கவுந்தியடிகளையேத்தியென்க.

தோட்டார், விகாரம்.

உ0க - சூ. வளரிள வனமுலை

..........சிலர்புறஞ் சூழ

(இ - ள்.) வளராநின்ற இளைய அழகிய முலையினையும் அமையினழகை வாங்கிக் கொண்டுபூரித்த தோளினையும் இளைய முளையெயிற்றினையும் சிறிய பருவத்தே பெரிய அறிவினையுமுடைய நங்கையுடனே அத்தகிரிக்கட்சென்ற ஞாயிற்றினது சுருங்கினசுடரையுடைய மாலைப்பொழுதிலே மடிசுரந்து கன்றைத் தேடிவாராநின்ற பசுக்களினுடைய முழங்குகுரல்களியம்ப ஆட்டுமறியையும் கோடரியையுமுடையதோளிலே

உறிகட்டின காவையுடைய இடையருடனே

கூடப் பால்சுமந்துவரும் செறிந்த வளையையுடைய இடைச்சியரிற்சிலர் இவளழகுகண்டு புறஞ்சூழ்ந்துவாரா நிற்பவென்க.

உ0எ. மிளையும்—(இ - ள்.) காவற்காடும்,

கிடங்கும்—(இ - ள்.) அகழியும்,

வளைவிற் பொறியும்—

(இ - ள்.) வளைந்து தானேயெய்யும் எந்திர வில்லும்,

உ0அ. கருவிர லூகமும்—(இ - ள்.)

கரியவிரலையுடைய குரங்குபோ

லிருந்து சேர்ந்தாரைக் கடிக்கும்பொறியும்,

கல்லுமிழ் கவணும்—(இ - ள்.) கல்லையுமிழுங்கவணும்,

உ0௯. பரிவுறு வெந்நெயும்—

(இ - ள்.) காய்ந்திறைத்தலாற் சேர்ந்தாரை வருத்துவதாய நெய்யும்,

பாகடு குழிசியும்—(இ - ள்.) செம்புருக்குமிடாவும்,

அன்றி அங்ஙனமிறைத்தற்குப் பாகுகாயுங்குழிசிகளுமாம்.

உக0. காய்பொன் னுலையும்—

(இ - ள்.) உருகக்காய்ச்சியெறிதற்கு எஃகுபட்டிருக்கும் உலைகளும்,

கல்லிடு கூடையும்—

(இ - ள்.) இடங்கணிப்பொறிக்குக் கல்லிட்டு வைக்குங்கூடையும்,

உகக. தூண்டிலும்—(இ - ள்.) தூண்டில்வடிவாகப்பண்ணிப் போகட்டு வைத்துக் கிடங்குநீங்கி மதில்பற்றுவாரைக் கோத்துவலிக்குங்கருவியும்,



தொடக்கும்—

(இ - ள்.) * கழுக்கோல்போலக்
கழுத்திற்பூட்டிமுறுக்குஞ்சங்கிலியும் ;

கயிற்றுத்தொடக்குமாம்.

ஆண்டலை யடுப்பும்—(இ - ள்.) [1]
ஆண்டலைப்புள்வடிவாகப்பண்ணிப்

பறக்கவிட

உச்சியைக்கொத்தி மூளையைக்கடிக்கும் பொறிநிரைகளும்;

உகஉ. கவையும்—

(இ - ள்.) கிடங்கிலேறின் மறியத்தள்ளும்
இருப்புக்கவையும்,

கழுவும்—(இ - ள்.) கழுக்கோலும்,

கழுகும பாடம.

புதையும்—(இ - ள்.) அம்புக்கட்டும்,

" அப்புப் புதையு மணிவரிச் சிலையும் "
என்றார் கதையினும்.

புழையும்—(இ - ள்.) ஏவறைகளும்,

உகங. ஐயவித் துலாமும்—

(இ - ள்.) பற்றுக்கை தூக்கிப்போகட்ட விட்டமும்,

அன்றிக் கதவையணுகாதபடி கற்கவிதொடங்கி
நாற்றும் துலாமுமாம்;
சாணம்புக்கூடென்பாரும், சிற்றம்புகள்வைத்தெய்யும்
இயந்திரமென்பாரு
முளர்.

கைபெய ரூசியும்—(இ - ள்.)
மதிற்றலையைப்பற்றுவாரைக் கை
யைப் † பொதுக்கும் ஊசிப்பொறிகளும்,

இனிக் கதவொடுசேராதபடிவைத்த
நிரைக்கழுவெனினுமமையும்.

உகசு. சென்றெறி சிரலும்—(இ - ள்.) மாற்றார்மேற்சென்று கண்ணைக்கொத்தும் சிச்சிலிப்பொறியும்,

பன்றியும்—(இ - ள்.) மதிற்றலையினேறினருடலைக் கோட்டாற்கிழிக்க இரும்பாற்செய்துவைத்த பன்றிப்பொறியும்,

பணையும்–(இ-ள்.) வேய்வடிவாகப்பண்ணி அடித்தற்கமைத்த பொறியும்,

உகடு. எழுவுஞ் சீப்பும்—(இ - ள்.) கதவுக்குவலியாக உள்வாயிற்படியிலே நிலத்திலேவீழவிடுமரங்களும்,

திறக்குங்காலத்து மேலேயெழுப்புகையால் 'எழுவுஞ்சீப்பு' மென்றார்; "சீப்புப் படியுறின்" என்றார் கதையினும்.

[1] ஆண்டலைப்புள் - ஆண் மகனது தலைபோன்ற வடிவமுள்ள ஒருவகைப்பறவை; "நீண்டபலி பீடத்தி லரிந்து வைத்த நெடுங்குஞ்சித் தலையைத்தன் னினமென் றெண்ணி யாண்டலைப்புள் ளருகணைந்து பார்க்குமாலோ" கலிங்க. கோயில். கசு.

[3] பெருங்கதை, க. ௪௨: கக.
(பி - ம்.) * 'கழிகோல்' † 'பொதிர்க்கும்'

## கரு.—அடைக்கலக்காதை

த. ௬கரு

முழுவிறற் கணையமும்—(இ - ள்.) கணையமரமும்,

இனிச் சீப்பு அகப்படக் குறுக்கேபோடக் கடவ மரமுமாம்.

உகசு. கோலும்—(இ - ள்.) விட்டேறும்,

குந்தமும்—(இ - ள்.) சிறுசவளமும்,

வேலும்—(இ - ள்.) வல்லயமும்;

ஈட்டிமுதலியனவுமாம்.

பிறவும்—(இ - ள்.) சதக்கினி, தள்ளிவெட்டி, களிற்றுப்பொறி, விழுங்கும்பாம்பு, கழுகுப்பொறி, புலிப்பொறி, குடப்பாம்பு, சகடப்பொறி, தகர்ப்பொறி, அரிநூற்பொறியென்பனவும்,

சதக்கினி - நூற்றுவரைக்கொல்லி.

உகஎ. ஞாயிலும்—(இ - ள்.) குருவித்தலைகளும்,

இதனை ஏவறையென்பாருமுளர்.

சிறந்து—(இ - ள்.) இவை சிறப்பெய்தப்பட்டு ;

மிக்கென்றுமாம்.

[1] "மாற்றவர்..........கோண்மா" எனவும், "விற்பொறிகள்.........மரகிலையே" எனவும், "செம்புருகு......பொறியே" எனவும், "கரும்பொனியல்.........திருந்தின்றே" எனவுஞ்சொன்னார் சிந்தாமணியிலும்.

உகஎ - க. நாட்கொடி நுடங்கும்..............புணர்ந்தென்.

(இ - ள்.) நாடோறும் [2] வென்றுவென்றெடுத்த கொடிதானுடங்கும் மதில் வாயிலைக்கழிந்து மாதரி தன்மனையிடத்தே புக்காளென்க.

இடைக்குலமடந்தைக்கு மனைப்புகுமளவும் அடைக்கலந்தந்தேன் ; ஆதலால், ஆட்டி நீட்டிப் பெய்து உடஇத் தாங்கு ; அறியாயோ நீ ; தருவது கேளாய் ; முடிவுலகெய்தினர் ; நீபோகென, முதுக்குறைநங்கையொடு கனைகுரலியம்பச் சிலர் புறஞ்சூழக் கோவலர்மடந்தை வாயில்கழிந்து தன்மனைபுக்கனளென்க.

ஆல், அன்றேயென்னும் அசை.

இஃது எல்லாவடியும் முதனடுவிறுதி அளவடியான் முடிதலின், நிலைமண்டில வாசிரியப்பா.

## கரு.—அடைக்கலக்காதை முற்றிற்று.

---

[1] சீவகசிந்தாமணி, கஙக - ச.

[2] "செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி" (முருகு. கஎ) "விசயவெல் கொடியுயரி" (முல்லை, கக) "நாடோறெடுத்த நலம்பெறு புனைகொடி.........நுடங்க" (மதுரை. ருகஅ) ; "மலைநீர் வென்றெழு கொடியிற் றோன்றும்" (மலைபடு. ருஅக - உ); "மலையுறழ்யானை வான்றோய் வெல்கொடி......நுடங்க" (பதிற். கக.)

பதினாறாவது

# கொலைக்களக் காதை.

அரும்பெறற் பாவையை யடைக்கலம் பெற்ற
விரும்பே ருவகையி னிடைக்குல மடந்தை
[1] யளைவிலை யுணவி னாய்ச்சியர் தம்மொடு
மிளைசூழ் கோவல ரிருக்கை யன்றிப்
௫. [2] பூவ லூட்டிய புனைமாண் பந்தர்க்
காவற் சிற்றிற் கடிமனைப் படுத்துச்
[3] செறிவளை யாய்ச்சியர் சிலருடன் கூடி
நறுமலர்க் கோதையை நாணீ ராட்டிக்
கூடன் மகளிர் கோலங் கொள்ளு
௧0. மாடகப் பைம்பூ ணருவிலை யழிப்பச்
[4] செய்யாக் கோலமொடு வந்தீர்க் கென்மக
ளையை காணீ ரடித்தொழி லாட்டி

⁵ பொன்னிற் பொதிந்தேன் புனைபூங் கோதை
யென்னுட னங்கையீங் கிருக்கெனத் தொழுது

---

ரு. அளை - மோர்.

௬ - ௯. பூவலூட்டிய சிற்றில் - செம்மணூட்டியசிற்றில்; புதிதாகச் செம்மண்பூசிய சிற்றிலாகிய காவன்மனையிலே இருத்தி.

௯. கூடலென்றாள்; தான் அறியுமூர் அதுவாகலின்.

௧0 - ௧௧. ஆபரணத்தின் உயர்ச்சியை அழித்தற்குப் பிறவியழகொடுவந் தீர்க்கு; செய்யாக் கோலம் - பிறவியழகு.

௧௪. நங்கை - நங்காய்.

---

[1] "அளைவிலை யுணவிற் கிளையுட னருத்தி" பெரும்பாண். ௧௬௫.

[2] "இல்பூவலூட்டி" கலி. ௧0௪; "முடக்காற் பந்தர்ப், புதுக்கலத்தன்ன செவ் வாய்ச் சிற்றில்" அகநா. ௬௪௪.

[3] "செறிவளையாய்ச்சியர்சிலர்" சிலப். ௧௭ : ௨0௬.

[4] கம்ப. கோலங்காண். ௬.

[5] "தன்னுடம்பு தார மடைக்கலந்தான் தன்னுயிர்க்கென், றன்னித்து வைத்த பொருளோ டிவைநான்கும், பொன்னினைப் போற்போற்றிக் காத்துய்க்க வுய்யாக்கா, லன்றே விழுமந் தரும்" ஆசார. ௬௬.

# ௧௯.—கொலைக்களக்காதை

கரு. மாதவத் தாட்டி வழித்துயர் நீக்கி
யேத மில்லா விடந்தலைப் படுத்தின்
ளோதக வுண்டோ [1] நும்மக ளார்க்கினிச்
சாவக நோன்பிக ளடிக ளாதலி

[2] னாத்தூ ணங்கையொடு நாள்வழிப் படூஉ
உ0. மடிசி லாக்குதற் கமைந்தநற் கலங்க
ணெடியா தளிமி னீரெனக் கூற
விடைக்குல மடந்தைய ரியல்பிற் குன்றா
மடைக்கலந் தன்னொடு மாண்புடை மரபிற்
[3] கோளிப் பாகற் கொழுங்கனித் திரள்காய்
உரு. வாள்வரிக் கொடுங்காய் மாதுளம் பசுங்காய்
மாவின் கனியொடு வாழைத் தீங்கனி
சாலி யரிசி தம்பாற் பயனொடு
கோல்வளை மாதே கொள்ளெனக் கொடுப்ப
மெல்விரல் சிவப்பப் பல்வேறு பசுங்காய்

---

கரு. மாதவத்தாட்டியென்றது கவுந்தியை.

கஅ. அடிகளென்றது கோவலனை.

கக. நாத்தூணங்கை - மாதரிமகள் ஐயை.

க௯ - ௨௦. நாள்வழிப் படூஉமடிசில் - காலத்திலே ஆக்கும் அடிசில்.

க௮ - ௨௧. சாவகநோன்பிகளாதலின் இரவுண்ணாரென்பது.

௨௩. மடைக் கலம் - ஆக்குங்கலம்.

௨௨ - ௩. இயல்பிற் குன்றாக் கலமென்றார், புதுக்கலத்தை; மடைமேல் ஏற்றுவாருமுளர்.

௨௪. கோளிப் பாகல் - பூவாதேகாய்க்கும் பலா; வெளிப்படை; கனிக் காய் - முதாரிக்காய்; கனிக்கு ஆனகாய்.

௨௫. (பா) வாள்வரிக் கொடுங்காய் - வெள்வரிக்காய். மாதுளங்காய் - கொம்மட்டிமாதுளங்காய்; புளித்தகறி ஆக்குதற்குக் கொம்மட்டிமாதுளங்காய் சிறக்கும்.

௨௭. (பா) தன்பாற்பயன் - தனக்குள்ள பாலாகிய பயன்.

---

[1] "நினக்கிவன் மகனாத் தோன்றிய தூஉம்" (மணி. ௨௧: ௨௩.) எனக்கணவனை மகனென்னு மொழியால் வழங்கியிருத்தல் காண்க.

[2] நாத்தூண் - கணவனுடன்பிறந்தவள்; "தாரணியை யலங்கரிப்பா டவ்வியவ ளாத்தூணு, தாரணி" சேது. தேவிபுர. ௯.

[3] "கோளி புன்னும் பழமீக் கூறும்பலா" பெரும்பாண். ௪௦௮ - ௯.

௩0. கொடுவாய்க் குயத்து விடுவாய் செய்யத்
திருமுகம் வியர்த்தது செங்கண் சேந்தன
கரிபுற வட்டில் கண்டனள் பெயர
வையெரி மூட்டிய வையை தன்னொடு
கையறி மடைமையிற் காதலற் காக்கித்
௩௫. தாலப் புல்லின் வால்வெண் டோட்டுக்
கைவன் மகடூஉக் கவின்பெறப் புனைந்த
செய்வினைத் தவிசிற் செல்வ னிருந்தபின்
கடிமல ரங்கையிற் காதல னடிநீர்
சுடுமண் மண்டையிற் றொழுதனண்
மாற்றி
௪0. மண்ணக மடந்தையை மயக்கொழிப்
பனள்போற்
றண்ணீர் தெளித்துத் தன்கையாற்
றடவிக்
* குமரி வாழையின் குருத்தகம் விரித்தீங்
கமுத முண்க வடிக ளீங்கென
வரசர் பின்னோர்க் கருமறை மருங்கி

---

௩0. குயம் - அரிவாள். விடுவாய்செய்தல் -
அரிதல்.

௩௨. பெயர - புகைகண்டறியாதபடியாலே திரும்ப.

௩௩. வை - வைக்கோல்.

(௩௨) அட்டிலைக்கண்டு பெயரும்படி (௩௩) வைக்கோலால் எரிமூட்டிய

வென்க; தீமூட்டுவது வைக்கோலாதலால்.... ....

௩௪. கையறி மடைமையின் - தன்கைவல்ல அளவாலே.

(௩0) விடுவாய்செய்ய (௩௧) முகம் வியர்த்து;

(௩௨) கரிந்த இடத்தை

யுடைய அட்டிலைக்கண்டு பெயர்ந்தவளவிலே

(௩௧) கண்சேந்தன; இவ்வாறாகவும்

(௩௪) கையறிமடைமையிற் காதலற்கு ஆக்கி.

௩௫. தாலப்புல் - பனையாகிய [1]புறக்காழ்மரம். ௩௭.

தவிசு - தடுக்கு.

(௩௮) அங்கையின் (௩௯) மாற்றி.

௪0. மயக்கொழிந்தல் - இவர்க்கு

தீர்த்தல்; அளர்தல்தீர்க்கையுமாம்.

நிகழ்வனவறிந்து மயங்கின மயக்கம்

சஉ. குமரிவாழை - ஈனாத வாழை.

சச - ரு. அருமறை மருங்கின் உரியவெல்லாம் - பலியிடுதன்முதலியன; வாய்பூசல் முதலாயினவுமாம். தன்னூரிற் செய்வனவெல்லாம் செய்யப்பெறு மையின், 'ஒருமுறை கழித்து' என்றார்.

---

[1] "புறக்கா ழனவே புல்லென மொழிப" தொல். மரபு. சூ. அகூ.

(பி - ம்.) * 'குமரி வாழைக் குருத்தகம் விரித்தாங், கமிழ்த முண்மி னடிகளீரென'

# கரு.—கொலைக்களக் காதை.

சகக

சரு. னுரிய வெல்லா மொருமுறை கழித்தாங்
காயர் பாடியி னசோதைபெற் றெடுத்த
பூவைப் புதுமலர் வண்ணன் கொல்லோ
நல்லமு துண்ணு நம்பி யீங்குப்
பல்வளைத் தோளியும் பண்டுநங் குலத்துத்

௫௦. [2] தொழுவினை யாற்றினுட் டேமணி வண்ணனை
விழுமந் தீர்த்த விளக்குக் கொல்லென
வையையுந் தவ்வையும் விம்மித மெய்திக்
கண்கொளா நமக்கிவர் காட்சி யீங்கென
வுண்டினி திருந்த வுயர்பே ராளற்
௫௫. கம்மென் றிரையலோ டடைக்கா யீத்த
மையீ ரோதியை வருகெனப் பொருந்திக்
[3] கல்லத ரத்தங் கடக்க யாவதும்
வல்லுந கொல்லோ மடந்தைமெல்
லடியென
வெம்முனை யருஞ்சுரம் போந்ததற் கிரங்கி
௬௦. யெம்முது குரவ ரென்னுற் றனர்கொன்
மாயங் கொல்லோ வல்வினை கொல்லோ
யானுளங் கலங்கி யாவது மறியேன்
[3] வறுமொழி யாளரொடு வம்பப்
பரத்தரொடு
குறுமொழிக் கோட்டி நெடுநகை புக்குப்

---

௫௨. தவ்வை - தமக்கை; தாயுமாம்; முறையன்று.
விம்மிதம் - வியப்பு.

(௪௫) ஒருமுறைநகழித்து (௫௪) உண்டினிதிருந்தவெனக்கூட்டுக.

௫௫. திரையல் - வெற்றிலைச்சுருள்.

௫௭ - ௬0. கல்லத ரத்தம்........என்னுற்றனரென்றது, வல்லவோ அடியெனவிரங்கி என்னுற்றனரோவென்றானென்க.

௬௨. நின்னை இவ்வாறு தனியாக்குதற்குக் காரணமாம் என்பொருட்டொலைவால்வந்த பான்மையினை இன்னதென்று ஒன்றுமறிகிலேன்.

௬௩. வறுமொழி - பயனில் சொல். (பா) வம்பமாந்தர் - ஒன்றிற்படாத மாந்தர்.

௬௪. குறுமொழிக்கோட்டி-சிறுசொல்லையுடையார். நெடுநகை-மிக்கநகை.

---

[1] "தொழுனைத் துறைவனோ டாடியபின்னை"; "வஞ்சஞ் செய்தான் றொழுனைப் புனலு, ணெஞ்சங் கவர்ந்தான்" (சிலப். ௧௭); "விழுமிழை நல்லார் வெருள்பினைபோ னோக்கம், கெழுமிய நாணை மறைக்குந் - தொழுனையுண், மாலையுண் மாலை மயக்குறுந் தாவஃதாற், சால்பினைச் சால்பறுக்கு மாறு" பழ. ௧௨.
[2] "கல்பிறங்கத்தம்" (குறுந். ௬௬; அகநா. ௭௧); 'கல்லதர்ச் சிறுநெறி" (அகநா. ௭௨); "கல்லத ரத்தங் கடவா நின்றழி" மணி. ௧௧: ௩௧.
[3] "வம்பப் பரத்தை வறுமொழி யாளனொடு" சிலப். ௧0: ௨௨௧.



௫௫. பொச்சாப் புண்டு பொருளுரை யாளர்
நச்சுக்கொன் றேற்கு நன்னெறி
யுண்டோ
விருமுது குரவ ரேவலும்
பிழைத்தேன்

சிறுமுதுக் குறைவிக்குச் சிறுமையுஞ்
செய்தேன்

வழுவெனும் பாரேன் மாநகர்
மருங்கீண்

௭௦. டெழுகென வெழுந்தா யென்செய்
தனையென

[1] வறவோர்க் களித்தலு மந்தண ரோம்பலுந்
* துறவோர்க் கெதிர்தலுந் தொல்லோர் சிறப்பின்
* விருந்தெதிர் கோடலு மிழந்த
வென்னைநும்

பெருமக டன்னொடும் பெரும்பெயர்த் †
தலைத்தாண்

௭௫. மன்பெருஞ் சிறப்பின் மாநிதிக்
கிழவன்

முந்தை நில்லா முனிவிகந் தனனா

---

௬௫. பொச்சாப்புண்டு - மறவியிற்பொருந்தி.

௬௬. நச்சப்படுபொருளை நச்சென்றார்.

௬௫ - ௬. பொருளுரையாளர் நச்சுக்கொன்றேற்கு
- மெய்யுரைக்குஞ்

சான்றோரால் நச்சப்படுந்தொழிலைக் கெடுத்தேனுக்கு; ஆவது ஆசாரம்.

கூஅ. சிறுமுதுக் குறைவிக்கு - சிறிய வயதிலே பெரிய அறிவினையுடைய உனக்கு. சிறுமை - நோய்.

கூகூ. மாநகர்மருங்கு - நம்மாநகர் மருங்கினின்றும்.

ஈண்டு - இவ்விடத்து;

என்றது மதுரையை.

எ௦. என்செய்தனையென்றது செய்தவருமை என்னென்று வியந்தது.

கூகூ - எ௦. வழியிடை நின்க்குவரும் தீங்கு ஒன்றும் கருதாது எழுக

வென்றுயான்சொல்ல,..........................................................

எக. 'அறவோர்க்களித்தல்' என்பதுமுதற் கண்ணகிவார்த்தை.

எக. அறவோர் - துறவாது விரதங்காத்தோர்.

எஉ. துறவோர்க்கு - துறந்தோரை. எங. பெருமகள் - கோவலன்மாதா.

எங - ௫. பெரிய புகழையும் தலையான உற்சாகத்தையுமுடைய மாநிதிக் கிழவன் - கோவலன்பிதா; பெரிய பொருளைத் தன்னிடத்தேயுடைய மாநிதிக் கிழவனென்றுமாம்.

எகூ - கூ. கரந்தொழுகினவாறே அவர்களிருவரும் இக்குணத்தைக்கண்டு அற்புளஞ்சிறந்து.

---

[1] எக - கூ : குறள். அ - ஆம் அதிகாரம், பரிமேலழகருரையின் அவதாரிகையில் இவ்வடிகள் மேற்கோளாக வந்துள்ளன.

[2] 'விருந்து' என்பது உயர்திணைப்பாலையுமுணர்த்துவதற்கு இவ்வடிமேற்கோள்; தொல். கிளவி. சூ. ௫௭ - ந.

(பி - ம்.) * 'அறவோர்க்கிதலும்' † 'தலைத்தாள் வன்பெருஞ்'

# கசா.—கொலைக்களக்காதை

வற்புளஞ் சிறந்தாங் * கருண்மொழி

யளை இ

யெற்பா ராட்ட யானகத் தொளித்த

நோயுந் துன்பமு நொடிவது போலுமென்

௪0. † வாயன் முறுவற்கவ ருள்ளகம் வருந்தப்

போற்றா வொழுக்கம் ‡ புரிந்தீர் யாவது

மாற்றா வுள்ள வாழ்க்கையே னாதலி

னேற்றெழுந் தனன்யா னென்றவள் கூறக்

குடிமுதற் சுற்றமுங் குற்றிளை யோரு

௪௫. மடியோர் பாங்கு மாயமு நீங்கி

நாணமு மடனு நல்லோ ரேத்தும்

பேணிய கற்பும் பெருந்துணை யாக

வென்னொடு போந்தீங் கென்றுயர் களைந்த

பொன்னே கொடியே புனைபூங் கோதாய்

௫0. நாணின் பாவாய் நீணில விளக்கே

கற்பின் கொழுந்தே பொற்பின் செல்வி

சீறடிச் சிலம்பி னொன்றுகொண்

டியான்போய்

எக. நோய் - உடம்பின்மெலிவு. துன்பம் - மனத்தளர்ச்சி.

அக - உ. (பா) நீர் போற்றாவொழுக்கத்தை மேவினீராயிருக்கவும் மாற்றா வுள்ள வாழ்க்கையையுடையேனாதலாலே.

அரு. ஏற்று - உடன்பட்டு.

எசு - அ௲. நீர் என்முன் புசிஸ்லாமையாலுள்ள வெறுப்பைக் கரந்தொழுகி னேனாக, அதனை அறிந்து அவர்களுடைய உள்ளஞ்சிறந்து ஆங்கு அருண்மொழி யினாலே ஏற்பாராட்ட யான் நெஞ்சத்தடக்கிய நும்பிரிவையும் அதனால்வந்த ஆற்றாமையையுஞ் சொல்லுவதுபோலும் என் மெய்யெல்லாமுறவல்காரணமாக அவர்வருந்தும்படி போற்றாவொழுக்கத்தை மேவினீர்; மாற்றாத உள்ளத்தேனாகை யாலே உடன்பட்டுப் போந்தேன்.

அச. குற்றிளையோர் - குற்றேவன் மகளிர்; எடுத்துக்கை நீட்டுவாருமாம்.

அரு. அடியோர்பாங்கு - அடியோர் பகுதி; சேவிக்கும் பெயர். ஆயம் - தோழிமார்; சேவிக்குந்தோழிமாருமாம்.

அசு. நல்லோரேத்து - நல்லோராலே ஏத்தப்படுந்தன்மை.

அச - எ. சுற்றமுதலான நான்குக்கும் நான்கும் துணையாக.

கூ0. நாணினையுடைய பாவாய்; சரீரியைச்சிறக உருபுதொக்கது.

---

[1] "வறிதகத் தெழுந்த வாயன் முறுவலன்" அகநா. ௫.

(பி - ம்.) * 'அருமொழி' † 'வாயின் முறுவற்கு' ‡ 'புரிந்தாராவது'



மாறி வருவன் மயங்கா ளொழிகெனக்
கருங்கய னெடுங்கட் காதலி தன்னை

யென்றுளென்க.

கூ0 - கூஎ. என்றிவை

சொல்லி.....எனப்போனான்

(இ-ள்.) என்று இன்னனசொல்லி அழுகின்றவள் தன்கணவனுடைய திருத்தஞ்சமார்பம் தன்மார்போடுபொருந்தும்படி தழுவிக்கொண்டாளாக; எழுந்திருந்துநின்றவன், நிறைந்தமதிபோலும் ஒளிபொருந்தியமுகம் கன்றியதே யென்று வாக்காற்சொல்லிக் கையாலே அவள் கண்ணீரை மாற்றினான்; மாற்றியபின்பு அவ்வாயிழையாள் ஏங்கியழுது நிலத்தின்கண்ணேவீழ்ந்து தன்கணவனுடைய தொழுந்தகைமையுடைய திருந்திய அடியிணை இரண்டுகையாலும் பூண்டுகொண்டாளாக; இப்பொல்லாதவுடம்பைக் கைவிட்டுச் சுவர்க்கம்புகுதற்கு எழுந்திருந்தவன் நீ இருக்கவென்றுசொல்லிப் பல அமரர்குழாத்துள்ளானனென்க.

பழுது நீதென்ப உடம்புக்குப்பெயர்; [2] "திருந்திய நின்மகன் தீது நீங்கினான்" என்றார்பிறரும். இனி முன்பே பழுதொழிந்தெழுந்திருந்தவன் அமரர் குழாத்துள்ளான் தழீஇக்கொள்ள எழுந்திருந்துநின்றவன் மாற்றப் பின் திருந்தடியைத் துணைவளைக்கையாற்பற்ற, உண்கண், இருந்தைக்கவெனப்போனானெனக் கூட்டலுமொன்று. எழுந்திருந்தான் குழாத்துள்ளான் நின்றானென்னும்பெயர்கள் அடுக்கிவந்து போனானென்னும் பயனிலைகொண்டுமுடிந்தன.

* கூஅ.- எக. மாயங்கொல்.....திறங்கேட்பல் யானென்றாள்

(இ-ள்.) இங்ஙனம் எழுந்திருந்துநின்றது மாயமோதான்? அஃதன்றுயிற் பின்னை யாதுதான்? என்மனத்தை மருட்டியதொருதெய்வமோதான்? ஒன்றையுந்தெளிகின்றிலேன்; ஆதலால் எங்கும் போயாராய்ந்துகூடுவேன்; அங்ஙனங்கூடுதல் எளிதாயினும் எனது மிக்கசினந் தணிந்தாலன்றிக் கூடேன்;

---

[1] "கோல்கோடியவனிழல்" கலி. க0. [2] (பா) சீவகசிந்தாமணி, கஉஎ.

இச்சினந்தணிதற்கு அக்கொடியவேந்தனை யான் சென்றுகண்டு என்கணவனைக்கொன்ற இத்தீத்திறம் யாதென்றுகேட்பேனென்று தன்னெஞ்சொடு கூறினாளென்க.

தெய்வங்கொலென்றாள்; இருதுணியாகிய உடல்கூடி ஒருயிர்பெற்றுநின்றமைபற்றி. பொருளுரையன்றென்றாள்; தன்பின்போதாமைபற்றி. கேட்பல்யானென்றாள்; நாணழிபூசல்செயத்துணிந்து.

எஉ - ரு. என்றாளெழுந்தாள்.........கோயில்வாயின்முன்.

(இ - ள்.) இங்ஙனஞ்சொன்னவள் ஆண்டுப்போதற்கெழுந்தாள்; எழுந்தவள் தன்னூரிற்கண்டதீக்கனவை நின்றுநினைந்தாள்; நினைந்தவள் கண்ணீர் சோர்தலால் தான்செல்லும்வழிகாண்டற்காக அங்கொடிய கயல்போலுங் கண்

கள்சொரியும் புனலைத்துடைத்து அரசனுடைய
வளவிய கோயில்வாயிலிடத்தே
சென்றுளென்க.

என்றுளென் னுமெழுவாய்க்குச்
சென்றுளென்பதனைப் பயனிலையாக்குக.

இஃது அயன்மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா.

கக—ஊர்சூழ்வரி முற்றிற்று.



## இருபதாவது

## [1] வழக்குரைகாதை.



ஆங்குக்
குடையொடு கோல்வீழ நின்று நடுங்கும்
* * கடைமணி யின்குரல் காண்பென்கா
ணெல்லா

திசையிரு நான்கு மதிர்ந்திடு மன்றிக்
கு கதிரை யிருள்விழுங்கக் காண்பென்கா
ணெல்லா

விடுங்கொடி வில்லிர வெம்பகல் வீழுங்
கடுங்கதிர் மீனிவை காண்பென்கா †

ணெல்லா

கருப்பம

செங்கோலும் வெண்குடையுஞ்
செறிநிலத்து மறிந்து ‡ வீழ்தரு
௫0 நங்கோன்றன் கொற்றவாயின்
மணிநடுங்க நடுங்குமுள்ள
மிரவுவில்லிடும் பகன்மீன்விழு
மிருநான்கு திசையுமதிர்ந்திடும்
வருவதோர் துன்பமுண்டு
மன்னவற்கியா § முரைத்துமென

பெருந்தேவிசெய்தி கூறுகின்றார்:—

௩. காண்பென் - கனவிலேகாண்பன். எல்லாவென்று தான்கருத்தாற்கண்ட கனவின் நிலையுரைக்கும்.

பாண்டியன்றேவி

௫. கதிரைவிழுங்குகின்ற இருளைக்காண்பேன்.

௬. கொடிவில் - ஒழுங்குபட்டவில்.

௭. கடுங்கதிர்மீன்-ஒளியின் மிகுதிகூறினர்; கடுங்கதிர் - மிக்க அனலுமாம்.

௯. செங்கோலும் குடையுமென்று அவற்றையே பின்னுங்கூறினள்......

௧௧. இரவு வில்லிடும்; பகல் மீன்விழும்; இவற்றைக் காண்பேன்.

௧௧-௨. அதிர்ந்திடுமாதலால், வருவதோர் துன்பமுண்டென்க. யாமென் றாள், [3] தம்பிராட்டியாதலால்; தன்பெருமிதந்தோன்ற.

---

[1] இக்காதைமுதலிய பதினொன்றற்கும் அடியார்க்குநல்லாருரை அகப்படவில்லை.

[2] சிலப்பதிகாரம், ௨௦: ௫௧.

[3] அரசரைத்தம்பிரானென்றும் அரசர்தேவியரைத்தம்பிராட்டியென்றும் வழங்குதும் வழக்கம் மலைநாட்டில் இப்பொழுதும் உள்ளது.

(பி - ம்.) * 'கடைகணி' † 'எல்லாரசெங்கோலும்' ‡ 'வீழுதங்' § 'உரைத்த மென்றுடி'

## ௨௦.—வழக்குரைகாதை.

சு அக

வாடியேந்தினர் கலனேந்தின

ரவிர்ந் துவிளங்கு மணியிழையினர்
கோடியேந்தினர் பட்டேந்தினர்
கொழுந் * திரையலின் செப்பேந்தினர்
கறு வண்ணமேந்தினர் சுண்ணமேந்தினர்

மான்மதத்தின் சாந்தேந்தினர்
கண்ணியேந்தினர் பிணையலேந்தினர்
கவரியேந்தினர் † தூபமேந்தினர்

கூனுங்குறளு மூமுங்கூடிய
குறுந்தொழி § லிளைஞர்
செறிந்துசூழ்தர
நரைவிரை இய நறுங்கூந்தல
ருரைவிரை இய பலர்வாழ்த்திட
¶ வீண்டுநீர் வையங்காக்கும்
பாண்டியன்பெருந் தேவிவாழ்கென
உ0 வாயமுங் காவலுஞ்சென்

றடியீடு பரசியேத்தக்

கோப்பெருந் தேவிசென் றுதன்
தீக்கனுத் திறமுரைப்ப
[1] வரிமா னேந்திய வமளிமிசை யிருந்தனன்
[2] றிருவீழ் மார்பிற் றென்னவர் கோவே ; இப்பால்
[3] வாயி லோயே வாயி லோயே

---

கரு. ஆடி - கண்ணடி.

(கரு) அணியிழையின ராகிய (கஎ) குறுந்தொழிலிளைஞர் (கசு) ஏந்தின ராய்ச் (கஎ) செறிந்து சூழ்தர.

கக. பெருந்தேவி, அண்மைவிளி.

(கக) பெருந்தேவி, வாழ்கெனப் (கஅ) பலர்வாழ்த்த (உ0) ஏத்தச் (உக) சென் று உரைப்பவென்க.

உரு. தேவியதுண்மையின், திரு விரும்பப்பட்டமார்பு ; திருக்கழிகிறமார் பென் றுமாம்.

---

[1] உஉ - ரு. சிலப்பதிகாரம், உ0 : எஅ - கூ.

[2] " திருவீழ்மார்பிற்றென்னவன் " அகநா. கக.

[3] மு. புறநா. உ0கூ; விளியேற்கும்பொழுது ஆனீறு......................ஏகாரம் பெற்றுவந்ததற்கு இவ்வடிமேற்கோள்; தொல். விளி. சூ. கஉ - ந; நன் - மயிலை. சூ. கoகூ; நன் - வி. சூ. கoஎ.

(பி - ம்.) * 'திரையலஞ்செப்பேந்தினர்கன்னி , † 'அன்னமேந்தினர்' ‡ 'கூனுங்குறளும்' § 'இளையர்செறிந்து சூழ்வர' ¶ 'கண்டு நீருலகம்'

கக.



உரு [1] யறிவறை போகிய * பொறியறு

திறைமுறை பிழைத்தோன் வாயி லோயே
யிணையரிச் சிலம்பொன் றேந்திய கையள்

கணவனை யிழந்தாள் கடையகத் தாளென்
றறிவிப் பாயே † யறிவிப் பாயே, யென
௩௦. வாயிலோன்; வாழியெங் கொற்கை வேந்தே வாழி

தென்னம் பொருப்பிற் றலைவ வாழி
செழிய வாழி தென்னவ வாழி
பழியொடு படராப் பஞ்சவ வாழி
யடர்த்தெழு குருதி யடங்காப் பசுந்துணிப்
௩௫. பிடர்த்தலைப் பீட மேறிய மடக்கொடி
வெற்றிவேற் றடக்கைக் கொற்றவை யல்ல

ளறுவர்க் கிளைய நங்கை யிறைவனை

யாடல்கண் டருளிய வணங்கு சூருடைக்

கானக முகந்த காளி தாருகன்
௪௦. பேருரங் கிழித்த பெண்ணு மல்லள்
செற்றனள் போலுஞ் செயிர்த்தனள் போலும்

பொற்றொழிற் சிலம்பொன் றேந்திய கையள்

உடு. அறிவுகெழற்றுப்போகிய. பொறியறு - புண்ணியமற்ற.

உசு. இறைமுறை - இராசநீதி.

௩0 - ௩௩. வாழ்த்தப்பலவாயின ; வணங்குந்தோறும் சொல்லுதலின்; [1] "நீணில மன்ன போற்றி" என்றாற்போல.

௩௪ - ரு. பசுந்துணிப் பிடர்த்தலை - மயிடன்றலை ; மயிடம்-கடா. பிடர்த்தலையாகிய பீடம் ; அதனைப் பீடமாக ஏறிய மடக்கொடியாகிய (௩௬) கொற்றவையென்க.

௩௭. அறுவர்க்கிளையநங்கை - சத்தமாதாக்களில் ஏழாவதினையாள்; அவள் பிடாரி.

௩௭ - அ. இறைவனை ஆடல்கண்டருளிய அணங்கு - பத்திரகாளி. (௩௭) நங்கை (௩அ) அணங்கு (௩௯) காளி, பெயர்.

௪0. அவர்களென்னலாம் ; அவர்களில் அல்லள்.

௪௧. செறுநகை - முகக்கோட்டம். செயிர்க்கை - மனக்கோபம். அன்றி, செற்றனள்போலும் - மாற்சரியமுடையாள்போலும் ; செயிர்த்தனள்போலும் - மிக்க கோபமுடையாள்போலுமென்றுமாம்.

---

[1] "அறைபோகு நெஞ்சுடையார்க்கு" கலி. ௩௭. [2] சீவக. உ௩௪.

(பி - ம்.) * 'பொறியறை' † 'அறிவிப்பாயேவாயிலோன்'

# உ0.—வழக்குரைகாதை

௪அ௩

கணவனை யிழந்தாள் கடையகத் தாளே

கணவனை யிழந்தாள் * கடையகத் தாளே,

யென ,

சரு. வருக மற்றவட் டருக வீங்கென

வாயில் வந்து கோயில் காட்டக்
[1] கோயின் மன்னனைக் குறுகினள் சென்றுழி
[2] நீர்வார் † கண்ணை யெம்முன் வந்தோ
யாரை யோநீ மடக்கொடி யோவெனத்
சுo தேரா மன்னு செப்புவ துடையே
னெள்ளறு சிறப்பி னிமையவர் வியப்பப்
[3] புள்ளுறு புன்கண் ‡ டீர்த்தோ னன்றியும்

---

சங - ச. கணவனையிழந்தாளொருத்தியென்க.

(உஎ) இணையாகிய அரிச்சிலம்பில் ஒன்றையேந்திய கையளாய்க் (சச) கடையகத்தாளென்றுசொல்ல.

சரு. மற்றவட்டருக – அவளைப்புகுதவிடுக; அழைப்பாயாகவென்றுமாம்.

சஅ. நீர்வார்கண்ணை – நீர்வார்ந்த கண்ணையுடையையாய்.

சகூ. யாரை : ஐ, இடைச்சொல்.

---

[1] குறுகுதல் - அணுகுதலென்னும் பொருளில் வருமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். முதற்சூத்திர விருத்தி.

[2] 'நீர்வார் கண்ணை நீயிவ ணொழிய' குறுந். உஉ.

[3] புள்-புறு; அஃதுற்றபுன்கணைத்தீர்த்தோன் சிபி; (சிலப். உ௰: ருக; ௸ உகூ: அம்மானைவரி); 'புள்ளுறு புன்கண் டீர்த்த வெள்வேற், சினங்கெழு தானைச் செம்பியன் மருக', 'புறவி னல்லல் சொலியக் கறையடி, யானை வான்மருப் பெறிந்த வெண்கடைக், கோனிறை துலாஅம் புக்கோன் மருக', 'கொடுஞ்சிறைக், கூருகிர்ப் பருந்தி னேறுகுறித் தொரீஇத், தன்னகம் புக்க குறுநடைப் புறவின், றபுதி யஞ்சிச் சீரை புக்க வரையா வீகை யுரவோன் மருக", 'நீயே, புறவி னல்ல லன்றியும் பிறவும், பலவும் விடுத்தோன் மருகனை' (புறநா. ஙஎ, ஙகூ, சங, சசு); 'உடல்கலக்கற வரிந்துதசையிட்டு மொருவ, னொருதுலைப்புறவொ டொக்கநிறைபுக்கபுகழும்' (கலிங்க. இராச. கங); 'புக்கான், மறு வின்மையென்று சரணடைந்த வஞ்சப், புறு நிறைபுக்க புகழோன்' (இராசராசசோழ னுலா, ரு - சு); 'கொலையே றுடம்படையக் கொய்தாது மெய்தாத், துலையேறி வீற்றிருந்த சோழன்' (குலோத்துங்கசோழனுலா, கஎ); 'உலகறியக், காக்குஞ் சிறுபுறவுக் காகக் களிகூர்ந்து, தாக்குந் துலைபுக்க தாயோனும்' (விக்கிரமசோழனுலா, க0-கக); 'புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகை', 'இவர்குலத்தோன் மேற்பறவை, மன்னுயிர்க்குத் தன்னுயிரை மாறாக வழங்கினனால்', 'புக்கடைந்த புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க, மைக்கடங்கார் மதயானை வான்வேந்தன்' (கம்ப. திருவவதார. சுரு; ௸ குலமுறை. எ; ௸ கும்பகருணன்வதை. கருரு); 'என்பும் உரியராதல், 'தன்னகம் புக்க குறுநடைப் புறவின் றபுதியஞ்சிச் சீரைபுக்கோன் முதலாயினோர்கட் காண்க' (குறள், எஉ - பரிமேல்.)

(பி - ம்.) * 'கடையகத்தானேவருகமுற்' † 'கண்ணினை' ‡ 'விடுத்தோனன்றியும்'



[1] வாயிற் கடைமணி நடுநா நடுங்க
வாவின் [2] * கடைமணி யுகுநீர்
நெஞ்சுசுடத் தான்ற

ருஅ. னரும்பெறற் புதல்வனை யாழியின் மடித்தோன்

பெரும்பெயர்ப் † புகாரென் பதியே யவ்வூ
ரேசாச் சிறப்பி னிசைவிளங்கு பெருங்குடி
மாசாத்து வாணிகன் ‡ மகனை யாகி
வாழ்தல் வேண்டி யூழ்வினை துரப்பச்

சுo. சூழ்கழன் § மன்ன நின்னகர்ப் புகுந்திங்
கென்காற் சிலம்புபகர்தல் வேண்டி நின்பாற்

* கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி
கண்ணகி யென்பதென் ¶ பெயரேயெனப், பெண்ணணங்கே

கள்வனைக் கோறல் கடுங்கோ லன்று
சுரு. வெள்வேற் கொற்றங் || காணென வொள்ளிழை
நற்றிறம் படராக் கொற்கை வேந்தே

ருங. நடுங்க - அசைய.

ருச. கடைமணி - கண்மணிக்கடை.

ருசு. புகார் என்க்குப்பதி.

ருஅ. மகனை: ஐ, இடைச்சொல்.

ருஅ - கூ. செல்வத்துக்கு அவன்மகனுயிருக்கச்செய்தே செல்வம்வேண்டி. வாழ்தல் - ஜீவித்தல்.

கூரு. வெள்வேற்கொற்றம் - இராசநீதி

கூ௩ - ரு. பெண்ணணங்கே, கள்வனைக்கோறல் வெள்வேற்கொற்றம்.

கூகூ. நற்திறம்படரா - நல்லகூற்றிற்செல்லாத.

---

[1] ருக - ௫. 'கறவைமுறை செய்தோன்', 'கறவை முறைசெய்த காவலன்' (சிலப். உக: ருஅ; கூ௰ உக: அம்மானைவரி); 'சால மறைத்தோம்பிச் சான்றவர் கைகரப்பக், காலை கழிந்ததன் பின்றையு - மேலைக், கறவைக் கன் றூர்ந்தானைத் தந்தையு மூர்ந் தான், முறைமைக்கு மூப்பிளமை யில்' (பழமொழி, கூ௩); 'ஓட்டி. - அறவாழிமைந்தன் மே லூர்ந்தோன்' (இராசராச. ௩) ; 'மருளும் பசுவொன்றின் மம்மர்நோய் தீர, வுரு ளூந் திருத்தேருரவோன்' (குலோத்துங்க. உ); 'மையல்கூர், சிந்தனை யாவிற்கு முற் றத் திருத்தேரின், மைந்தனை யூர்ந்த மனுவோனும்' (விக்கிரம. ௬-௪) ; 'முட்டாமற் செலுத்தியவாறு: மகனைமுறைசெய்தான் கண்ணும், தன்கை குறைத்தான் கண்ணும் காண்க' (குறள், ருசஎ - பரிமேல்.) ; 'புகழுருவ நிழுத்தலைந்து பொறியுருவஞ் சரணடைந்த புறவுக் கீந்து, மகவிரதத் தருவிபிஞேர் சுரபிதுயர் தணித்திவோன் மகிழ்வுற் றார்ந்துஞ், சகமுழுது மொருதனிக்கோல் செலுத்துமனு குலவேந்தர் தமிழ்ச்சோ ணுட்டில்' (அரிசமயதீபம், அ: க.)

[2] 'கடைமணியுகுநீர்' மணி. ௩: உஉ. [3] மு. சிலப்பதிகாரம், பதி. ௩க.

(பி - ம்.) * 'கடையுகுநீர்' † 'புகாரெம்பதியே', 'புகார்நகரப்பதி' ‡ 'மகனை' 'மன்னினகர்ப்புகுந்தென்காற்' ¶ 'பெயரேபெண்' || 'கேளென'

## உ௦.—வழக்குரைகாதை.

சஅரு

* யென்காற் பொற்சிலம்பு மணியுடை யரியே,

யெனத்

தேமொழி யுரைத்தது செவ்வை நன்மொழி
யாமுடைச் சிலம்பு முத்துடை யரியே
எ0. † தருகெனத் தந்து தான்முன் வைப்பக்
கண்ணகி யணிமணிக் காற்சிலம் புடைப்ப
மன்னவன் வாய்முதற் றெறித்தது ‡
மணியே, மணிகண்டு

தாழ்ந்த குடையன் றளர்ந்தசெங் கோலன்
[1] பொன்செய் கொல்லன் றன்சொற் கேட்ட
எரு. யானோ வரசன் யானே கள்வன்
மன்பதை காக்குந் தென்புலங் காவ
லென்முதற் பிழைத்தது கெடுகவென் னாயுளென
மன்னவன் மயங்கிவீழ்ந் தனனே தென்னவன்
கோப்பெருந் தேவி குலைந்தன ணடுங்கிக்
அ0. கணவனை § யிழந்தோர்க்குக் காட்டுவ தில்லென்
றிணையடி
தொழுதுவீழ்ந் தனளே மடமொழி.

---

கூஎ. என்காற் பொற்சிலம்பின் அரி

மாணிக்கம்; பொற்சிலம்புடைய அரி

யென்க.

சுஅ. செவ்வைநன்மொழி - செவ்வியவார்த்தை.

எO. கொடுவருகவென அழைத்து; அவன் கள்ளரும்படியே செய்வானாக வருகவென அழைத்தென்றுமாம்; தான், அசை. தருகெனவாங்கித் தன் முன்வைப்ப - முத்துடையரியும் மணியுடையரியும் அறிவதாகவாங்கித் தன் முன்னேவைப்பவென்றுமாம்.

எக. மணிக்கால் - மணியை இடத்திலேயுடைய; சிலம்பு - தட்டான்வாங்கிக் கள்ளப்படி செய்வார் கையிற்கொடுத்த பொற்சிலம்பு.

எஉ. வாய்முதற் றெறித்ததுமணியே - சிலம்பு தானேவிண்டு மணிவாய்முதற்றெறித்ததென்க.

எஎ. என்முதல் - என்னைத்தொடங்கி.

அO. கணவனை இழந்தோர்க்குக் காட்டுவ தில்லென்றது - தந்தை தாய் முதலாயினோரை இழந்தார்க்கு அம்முறைசொல்லிப் பிறரைக் காட்டலாம், இஃது அவ்வாறு வரக் காணுஞ்சொல்லாகாமையின், காட்டுவதில்லென்றாள்.

---

1 "பொன்செய்கொல்லன்", "பொன்வினைக்கொல்லன்" சிலப். பதி. உஉ; சுஉ கக. கசO.

(பி - ம்.) * 'என்காற்சிலம்புமணியுடையரியேதமொழியுரைத்தனை' † 'தருகவீங்கெனத்தத்துதம்முன்வைத்த மணிக்காற்சிலம்புபுடைப்ப' ‡ 'மணியேபதுகண்டு' §. 'இழந்தாற்குக்காட்டுவதில்லெனவினை'



வெண்பா.

க. [1] அல்லவை செய்தார்க் கறங்கூற்ற

மாமென்னும்

பல்லவையோர் சொல்லும் *

பழுதன்றே—பொல்லா

வடுவினையே செய்த வயவேந்தன் றேவி

கடுவினையேன் செய்வதூஉங் காண்.

உ. காவி யுகுநீருங் கையிற் றனிச்சிலம்பு

† மாவி குடிபோன

வ்வடிவும்—பாவியேன்

காடெல்லாஞ் சூழ்ந்த கருங்குழலும் ‡

கண்டஞ்சிக்

கூடலான் கூடாயி னான்.

ங. மெய்யிற் பொடியும்

விரித்த கருங்குழலுங்

கையிற் றனிச்சிலம்புங்

கண்ணீரும்—வையைக்கோன்

கண்டளவே தோற்றானக் காரிகைதன் சொற்செவியி
லுண்டளவே தோற்றா னுயிர்.

---

க. கடுவினையேன் - பாவத்தைப் பண்ணினேன். செய்வதூஉம் காணென்க.

இதில், இராசாத்துஞ்சினபின்பு கண்ணகி தன்கைச்சிலம்பைத் தேவிமுன் னேயெறிந்தாள்.

## ௨0.—வழக்குரைகாதை முற்றிற்று.

---

[1] நான்மணிக்கடிகை, ௮௪; மூதுரை, ௨௭; குவ்வுருபு பகை தொடர்பொருளில் வந்ததற்கு இவ்வடிமேற்கோள்; நன். சூ. ௨௬௭-மயிலை.

(பி - ம்.) * 'பழுதன்றுநல்லாய்' † 'ஆவியுகக்காட்டுமெவ்' ‡ 'கண்டத்தக்'

## இருபத்தொன்றாவது

# வஞ்சினமாலை.

[கற்புடைமங்கையர் அறுவர்.]

கோவேந்தன் றேவி கொடுவினை யாட்டியே
னியாவுந் தெரியா வியல்பினே னாயினு
[1] * முற்பகற் செய்தான் பிறன்கேடு தன்கேடு
† பிற்பகற் காண்குறூஉம் பெற்றியகா ணற்பகலே

ஓ. [4] வன்னி மரமு மடைப்பளியுஞ் சான்றாக
முன்னிறுத்திக் காட்டிய மொய்குழலாள்பொன்னிக்
கரையின் மணற்பாவை நின்கணவ னாமென்
றுரைசெய்த மாதரொடும் போகா டிரைவந்
தழியாது சூழ்போக வாங்குந்தி நின்ற

---

க. கோவேந்தன்றேவி, விளி. கொடுவினையாட்டியேன், பெருமாம்.

உ. யாவுந் தெரியா இயல்பினே னாயினும் - ஒன்றுமறியாத தன்மையே னாயினும்.

ங. காண்குறூஉம் பெற்றிய - காணலுறுந்தன்மைய. நற்பகலென்றது, பிரகாசமான பகலென்பதனை.

ச. சூழ்போக.....சூழ்போதலால் உந்திக்கணின்ற; உந்திநின்ற - ஆற்றின் நடுவு குறையாம்படிநின்ற வென்றுமாம்.

௧௦. வரியா ரகலல்குன் மாத ருரைசான்ற
[1] மன்னன் கரிகால் வளவன்மகள்
வஞ்சிக்கோன்
றன்னைப் புனல்கொள்ளத் தான்புனலின்
பின்சென்று
கன்னவிற் றோளாயோ வென்னக்
கடல்வந்து
முன்னிறுத்திக் காட்ட வவனைத்
தழீஇக்கொண்டு
௧௫. பொன்னங் கொடிபோலப் போதந்தாள்

---

[1] "பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா, பிற்பகற் றாமே வரும்" (குறள், ௩௧௯); "முற்பகற் செய்யிற் பிற்பகல் விளையும்" (கொன்றைவேந்தன்) "முற்பகல் செய்வினை பிற்பக லறுநரின்" பெருங். க: கூ. உகூ.

[2] ஒருகற்புடைமங்கைக்கு வன்னிமரமுதலியன சான்றுபகர்ந்தமை, திருப்புறம் பயத்தும், திருமருகலிலும் இன்றும் கன்னபரம்பரையில் வழங்குகின்றது; அந்நிகழ்ச்சியைப்புலப்படுத்தும் சின்னங்களும் அவ்விடங்களில் உள்ளன; திருப்புறம் பயத்துள்ள சிவலிங்கப்பெருமானுக்கு ஸ்ரீ சாட்சிநாதரென்பது திருநாமம்.

(பி - ம்.) * 'முன்பகல்' † 'பின்பகல்......பெற்றிய காணன்பகலே'

---

[1] கo-கு. கரிகால் வளவன்மகள் - ஆதிமந்தியாரென்பார்; இப்பெயர் மந்தியெனவும் வழங்கும்; ஔவையார்க்குக், காலத்தால் இவர் முற்பட்டவர்; நல்லிசைப்புலமைவாய்ந்தோர். வஞ்சிக்கோன் - ஆட்டனத்தியென்பான்; இப்பெயர் அத்தியெனவும் வழங்கும். ஆதிமந்தியார், நீர்விழவொன்றில் கழாரென்னும் ஊரைச்சார்ந்த காவிரித்துறையில் கணவனாகிய அத்தியுடன் நீராடுகையில், அவனைக் காவிரி வெள்ளம் கவர்ந்துகொள்ள, இவர் அவனைக்காணாது பலஇடத்தும் தேடித்தேடிச்சென்று கடற்கரையில், அரற்றிக்கொண்டு நிற்கையில், இவரது கற்பின் பெருமையால் கடல் அவனைக் கரைக்கு அணித்தான இடத்திற் கொணர்ந்துசேர்த்து நிறுத்திக்காட்ட, இவருடைய அயரத்தை அறிந்தவளும், அங்கே நீராடிக்கொண்டிருந்தவளுமாகிய மருதியென்பவள் கண்டு அவனை அழைத்துவந்து இவர்பாற் சேர்த்துப் புகழ்பெற்றனளென்பது பண்டைவரலாறு:—இதனை, "மள்ளர் குழீஇய விழவி னானு, மகளிர் தழீஇய துணங்கையானும், யாண்டுங் காணேன் மாண்டக் கோனை, யானுமோ ராடுகள மகளே யென்கைக், கோடீ ரிலங்கு வளை நெகிழ்த்த, பீடுகெழு குருசிலு மாடுகள மகனே" (குறுந். கக) என்னும் இவர் பாடலானும், "காதலற் கெடுத்த சிறுமையொடு நோய்கூர்ந், தாதி மந்தி போலப் பேதுற், றலந்தனெ னுழல்வென் கொல்லோ", "கச்சினன் கழலினன் றேந்தார் மார்பினன், வகையமைப் பொலிந்த வனப்பமை தெரியற், சுரியலம்பொருநனைக் கண்டிரோவென, வாதி மந்தி பேதுற்றினையச், சிறைபறைந் துரைஇச் செங்குணக் கொழுகு, மந்தண் காவிரி போலக், கொண்டுகை வலித்தல் சூழ்ந்திசின் யானே", "கழாஅர்ப் பெருந்துறை விழவி னாடு, மீட்டெழிற் பொலிந்த வேந்துகுவவு மொய்ம்பி, னாட்ட னத்தி நலனயந் துரைஇத், தாழிருங் கதுப்பிற் காவிரி வவ்வலின், மாதிரந் துழைஇமதி மருண்டலமந்த, வாதி மந்தி காதலற் காட்டிப், படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின், மருதி யன்ன மாண்புகழ் பெறீஇயர்", "அணிகிளர் சாந்தி னம்பட் டிமைப்பக், கொடுங்குழை மகளிரி னொடுங்கிய விருக்கை, யறியா மையி னழிந்த நெஞ்சி, னேற்றிய லெழினடைப் பொலிந்த முன்பிற், றோட்டிருஞ் சுரியன் மணந்த பித்தை, யாட்ட னத்தியைக் காணீ ரோவென, நாட்டி னாட்டி னூரி னூரிற், கடல்கொண் டன்றெனப் புனலொளித் தன்றெனக், கலுழ்ந்த கண்ணள் காதலற் கெடுத்த, வாதி மந்திபோல", "ஒலிகதிர்க் கழனிக் கழாஅர் முன்றுறைக், கலிகொள் சுற்றமொடு கரிகால் காணத், தண்பதங் கொண்டு தவிர்ந்த வின்னிசை, யொண்பொறிப் புனைகழல் சேவடிப் புரளக், கருங்கச் சியாத்த காண்பி னவ்வயிற், றிரும்பொலம் பாண்டின் மணியொடு தெளிர்ப்பப், புனையத் தாடு மத்தியணி நயந்து, காவிரி கொண்டொளித் தாங்கு", "மத்தி, பனிவார் கண்ணள் பலபுலந் துறையக், கடுந்திற லத்தி யாடணி நசைஇ, நெடுநீர்க் காவிரி கொண்டொளித்

தாங்கு" (அகநா. ௪௯, ௭௬, ௨௨௨, ௨௩௬, ௩௭௬, ௩௩௬); "மன்னர்குழீஇய........ ளம்கனே - இஃது காதலற்கெடுத்த ஆதிமந்தியார்பாட்டு" என்பர்; தொல். அகத். சூ. ௩௪—ந.

## ௨௧.—வஞ்சின மாலை.

௪ அக

[1] மணன்மலி பூங்கானல் * வருகலன்க ணோக்கிக்
கணவன்வரக் கல்லுருவ நீத்தா † ளிணையாய
மாற்றாள் குழவிவிழத் தன்குழவி யுங்கிணற்று
வீழ்த்தேற்றுக்
கொண்டெடுத்த வேற்கண்ணாள் ‡ வேற்றொருவ
௫ னீணோக்கங் கண்டு நிறைமதி வாண் §
முகத்தைத்
தானோர் குரக்குமுக மாகென்று போன
கொழுநன் வரவே குரக்குமுக நீத்த
பழுமணி யல்குற்பூம் பாவை விழுமிய
[2] பெண்ணறி வென்பது பேதைமைத்தே யென்றுரைத்த
௰ நுண்ணறிவி னோர்நோக்க ‖ நோக்காதே யெண்ணிலேன்
வண்ட லயர்விடத் தியானோர் ¶ மகட்பெற்று

லொண்டொடி நீயோர் ** மகற்பெறிற் கொண்ட
கொழுந னவளுக்கென் †† றியானுரைத்த மாற்றங்
கெழுமி யவளுரைப்பக் கேட்ட விழுமத்தாற்
௩௦. சிந்தைநோய் கூருந் திருவிலேற் கென்றெடுத்துத்
தந்தைக்குத் தாயுரைப்பக் கேட்டாளாய் ‡‡ முந்தியோர்

௨௦. நீணேக்கம் - விடாமற்பார்த்தல்.
௨௯. பழுமணி - பழுத்தமணி; சிவந்தமணி; மாணிக்கம்.
௨௯. கெழுமியவளென்றது, பிள்ளைதாயாகிய தன்றோழியை.
௨௯ - ௩௦. இளங்காலத்து விளையாட்டிற் சொன்னவார்த்தையை அவள் மெய்யாகக்கொண்டு பேசக்கேட்ட விழுமத்தாலே நோய்கூரும்; இன்னும், யானுரைத்தமாற்றத்தைப் பொருந்தக்கேட்டவள் உரைப்பக்கேட்ட ..... திருவிலேற் கெனினுமாம்; சிந்தைநோய் கூரும், முற்று. என்றெடுத்து - பிரகாசிக்க.....
௩௧. முந்தி - தந்தைக்கும் தாய்க்கும் முற்பட்டு; கொடுப்பவும் அடுப்பவு மின்றித் தானேமுற்பட்டென்றுமாம்.

[1] ௧௯-௭. " மணன்மலி......கல்லுருவந்தாள் " என்பதனுல் "குலமடமாதரொடு கலமிசைச்சேறலாகாமையறிக" என்பது, நாற்கவி. சூ. ௮௫ ; இ-வி. சூ. ௬௫௯-உரை.
[2] " நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறி வென்பது பெரும் பே தைமைத்தே" இறை. சூ. ௨௯ ; நன். சூ. ௨௬௪ - மயிலே ; ௷ சூ-௨௬௫-விருத்தி; இ-வி. சூ. ௧௬௭. மேற்.

"நுண்ணறி வுடைய ராகி நூலொடு பழகி னாலும்
பெண்ணறி வென்ப தெல்லாம் பேதைமைத் தாத லாலுன்
கண்ணறி வுடைமைக் கேற்ற காரிய முரைத்தாய் மான
மெண்ணறி வுடையோர்க் கெல்லா மிழுக்குடைத் தன்றே வீதால்."
(திருவிளை. ௭௫ : ௩௪.)

(பி - ம்.) * 'வருகவ்னுக்கி' † 'இணையான' ‡ 'வேற்றெருநீணேக்கம்' § 'முகத்தானேர்' ‖ 'நோக்காதவெண்ணிலென' ¶ 'மகப்பெற்றல்' ** 'மகப்பெறித்' †† 'யாயுரைத்த' ‡‡ 'முந்தையோர்'.

# சிலப்பதிகாரம்

கோடிக் கலிங்க முடுத்துக் குழல்கட்டி
நீடித் தலையை வணங்கித் தலைசுமந்த
வாடகப்பூம் பாவை யவள் * போல்வார்
நீடிய

௱௫. [1] மட்டார் குழலார் பிறந்த பதிப்பிறந்தேன்
பட்டாங் கியானுமோர் பத்தினியே யாமாகி
லொட்டே னரசோ டொழிப்பேன் மதுரையுமென்
பட்டிமையுங் காண்குறுவாய் நீயென்று விட்டகலா
[2] நான்மாடக் கூடன் மகளிரு
மைந்தரும்

௨௦. வானக் கடவுளரு மாதவருங் .†
கேட்டீமின்

---

௧௧. நீடித் தலையை வணங்கி - விடாமே நெடிதாகத் தலையைவணங்கி; நீடித்தலைசுமந்தவென்க்கூட்டி, விடாமற்றலையாற்சுமந்தவென்றலுமாம்.

௧௫. பட்டாங்காகில் - உண்மையாகில்.

௩எ. ஒட்டேன் - இசையேன்; ஒட்டேனென்பதற்கு இனிதிருக்கவென வருவிக்க. அரசனோடு மதுரையையுமழிப்பேன். ௩அ. பட்டிமை - படிறு.

௪0. வானக்கடவுளர் - தேவமுனிவர்கள்; [3] "சுடரொடு திரிதரு முனிவரும்" என்றாராதலால். இன்னும், வானக்கடவுளர் வெளிப்படையுமாம். மாதவர் - இங்குள்ளோர்.

---

[1] ௫ - ௯௫. இவ்வடிகளிற் கூறப்பெற்றுள்ள கற்புடைப்பெண்டிர் அறுவருடைய வரலாற்றைப் பட்டினத்துப்பிள்ளையார் புராணத்துப் பூம்புகார்ச்சருக்கத்துள்ளபாடல்களும் ஒருவாறு தெரிவிக்கின்றன; அச்செய்யுட்கள் வருமாறு:—

௧. "கரிகாலன் பெருவளவன் மகள்கேள்வன் கடல்புக்கான்
திருவேயோ வெனவழைத்துத் திரைக்கரத்தாற் றரக்கொண்டான்
வரைகேள்வன் கலநோக்கி வருமளவுங் கல்லரனுன்
புரைதீரப் பிறந்தபதி பூம்புகார்ப் பட்டினமே.

௨. வன்னிமடைப் பளியோடு சான்றாக வரவழைத்தான்
பன்னியகா விரிமணல்வாய்ப் பாவையையுன் கேள்வனெனும்
கன்னியர்க ளொடும்போகா டிரைகரையா வகைகாத்தாள்
பொன்னனையார் பிறந்தபதி பூம்புகார்ப் பட்டினமே.

௩. கூவலிற்போய் மாற்றாள் குழவிவிழத் தன்குழவி
யாவலின்வீழ்த் தேற்றெடுத்தா ளய்னோக்கம் வேறென்று -
மேவினாள் குரக்குமுகம் வீவிடையோன் வரவிடுத்தாள்
பூவின்மேற் பிறந்தபதி பூம்புகார்ப் பட்டினமே.

௪. முற்றாத முலையிருவர் முத்துவண்ட லயர்விடத்துப்
பெற்றாற்கு மாண்பெண் பிறர்மணஞ்செய் யாவண்ணஞ்
சொற்றார்க்கள் பிறந்தபெண் ணுயகனைத் தலைசுமந்தாள்
பொற்றூவி பிறந்தபதி பூம்புகார்ப் பட்டினமே"

[2] நான்மாடங்களாவன: திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநலூர்; கன்னி, கரியமால், காளி, ஆலவாயென்பனவுமாம்; (கலி. ௬௨-ந); "கன்னிதிரு மால்காளி யீசன் காக்குங் கடிமதில்சூழ் மாமதுரை" திருவால. பயன், ௫. [3] சிலப்பதிகாரம், ௬௨. (பி - ம்.) * 'போல்வாணிடிய' † 'கேட்டீர்மின்'

## உக.—வஞ்சினமாலை.

சாதுத்

யானமர் காதலன் றன்னைத் தவறிழைத்த
* கோநகர் சீறினேன் குற்றமிலேன்

யானென்

றிடமுலை கையாற் றிருகி மதுரை

¹ வலமுறை மும்முறை † வாரா வலம்வந்து
சரு. மட்டார் மறுகின் ‡ மணிமுலையை வட்டித்து
§ விட்டா ளெறிந்தாள் விளங்கிழையாள்

வட்டித்த

நீல || நிறத்துத் திரிசெக்கர் வார்சடைப்
பால்புரை வெள்ளெயிற்றுப் பார்ப்பனக் கோலத்து
மாலை ¶ யெரியங்கி வானவன் றன்றோன்றி
ருo. ** மாபத் தினிநின்னை மாணப் பிழைத்தநாட்

பாயெரி யிந்தப் பதியூட்டப் பண்டேயோ
ரேவ †† லுடையேனு லியார்பிழைப்பா
ரீங்கென்னப்
பார்ப்பா ரறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்
மூத்தோர் குழவி யெனுமிவரைக் கைவிட்டுத்

---

௫௩. கையாற் றிருகி - வலக்கையாற்றிருகி.

௫௫.

வட்டித்து - பிரதிக்ஷிணபண்ணி; சுழற்றியென்றுமாம்; வர்த்தனே - வட்டணையா.........யிற்று.

௫௬. விட்டாளெறிந்தாள் - விட்டெறிந்தாள்.

௫௭. திரிசடை - திரித்தசடை; திரித்தல் - முறுக்கல்.

௫௮. மாலே - ஒழுங்கு.

(௫௬) வட்டித்ததனுல்வந்த (௫௮) வானவன்;

இன்னும், வட்டித்த -
எழுதினுலொத்தவென்றுமாம்.

௫௰. மாண - திண்ணிதாக.

௫௨. உடையேனல் - உடையேனாதலால். யார் பிழைப்பார் - யார்தப்புவார்.

---

[1] மணிமேகலை; ௯: ௫.

[2] ௫௩ - ௫. 'பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார், மூத்தார் சிறையார் பகப் பெண்டிர்'(ஆசார. ௯௫); திணைவிராய்எண்ணி உயர்திணையான் முடிந்ததற்கு இப்பகுதி மேற்கோள்; தொல். கிளவி. சூ. ௫௧ - ந; நன். சூ. ௩௭௭-மயிலை; இ-வி. சூ. ௨௯௮.

(பி - ம்.) * 'கோன்வற்குற்றமிலெனியானென்று' † 'வாராவலம்வத்து' ‡ 'வளைமுலை' § 'விட்டெறிந்தாளந்து' || 'திறத்துநிமிர்செக்கர்' ¶ 'எரியாகி' ** 'மாபத்தினியுன்னை' †† 'உடையேன்மற்றியார்'



௫௫. தீத்திறத்தார் பக்கமே சேர்கென்று * காய்த்திய
பொற்றொடி யேவப் புகை † யழன்று
மண்டிற்றே நற்றேரான் கூடல் நகர்.

வெண்பா.

[1] பொற்பு வழுதியுந்தன் பூவையரு மாளிகையும்
விற்பொலியுஞ் சேனையுமா

வேழமுங்—கற்புண்ணத்

தீத்தரு வெங்கூடற் றெய்வக் கடவுளரு
மாத்துவத் தான்மறைந்தார் மற்று.

---

---

௫௫. காய்த்திய - சுடவேண்டி;

கோவித்தவென் றுமாம்.

௫௬.

ஏவ........................................................................

௨௧.—வஞ்சினமாலை முற்றிற்று.

---

[1] இவ்வெண்பா சில ஏட்டுப்பிரதிகளில் இல்லை.
(பி - ம்.) * 'காய்த்தியைப்' † 'அழற்பொங்கிற்றே'

# இருபத்திரண்டாவது
# அழற்படுகாதை.



ஏவற் றெய்வத் தெரிமுகந் * திறந்தது
காவற் றெய்வங் கடைமுக மடைத்தன
வரைசர் பெருமா னடுபோர்ச் செழியன்
[1] வளைகோ விழுக்கத் துயிராணி கொடுத்தாங்
5. கிருநில மடந்தைக்குச் செங்கோல் † காட்டப்
புரைதீர் கற்பிற் றேவி தன்னுட
[2] னரைசு கட்டிலிற் றுஞ்சிய ‡ தறியா
தார்சான் பெருங்கணி யறக்களத் தந்தணர்
காவிதி § மந்திரக் கணக்கர் தம்மொடு

கO. கோயின் மாக்களுங் குறுந்தொடி மகளிரு
|| மோவியச் சுற்றத் துரையவிந் திருப்பக்
காழோர் வாதுவர் கடுந்தே ரூருநர்
வாய்வாண் மறவர் மயங்கினர் மலிந்து
கோமகன் கோயிற் கொற்ற வாயிற்

---

க. ஏவற்றெய்வம் - அங்கி ; அக்கினியுடைய எரியின்கூறு பிரகாசித்தது ; அங்கி அடக்கம் நீங்கி வெளிப்பட்டதென்றுமாம்.

உ. காவற்றெய்வம் - நகரிகாவற்றெய்வமாகிய நான்கு வருணப்பூதங்கள். கடைமுகமடைத்தன - கோட்டைவாயிலை நோக்குவதொழிந்தன; நகரிகாவற்றெய்வங்கள் கோட்டைவாயில்களைக் காவாவாயினவென்றுமாம்.

ச. வளைகோல் - வளைந்தகோல். இழுக்கத்து - இழுக்கத்தையுற்ற அவ்வளவிலே. உயிராகியவாணி - ஆதாரம். ஆங்கு - அவ்விடத்து.

எ. அரசுகட்டில் - சிங்காதனம். துஞ்சியதறியாது - செழியன் துஞ்சியதை அறியாமல்.

அ. ஆசான் - புரோகிதன். பெருங்கணி - கணிதவிவர்த்தகன். அறக்களத்தந்தணர் - தன்மாசனத்துக் கருத்தாக்கள்.

கூ. காவிதி - வரியிலார். மந்திரக்கணக்கர் - மந்திரவோலையெழுதுவார்.

கக. ஓவியச்சுற்றத்து - சித்திரத்திரள்போல.

கஉ. காழோர் - பரிக்காரர். வாதுவர் - வாசிவாரியர்.

---

[1] சிலப். உஙி: கூஅ - கூ.

[2] "அரசுகட்டிலிற் றுஞ்சிய பாண்டியன் நெடுஞ்செழியன்" சிலப். மதுரைக் காண்ட இறுதிக்கட்டுரை.

(பி - ம்.) * 'திறந்தன' † 'காட்டிப்' ‡ 'அறியாராசான்' § 'மந்திரிக்' || 'ஓவியர்'

௧௫. நீமுகங் கண்டு தாம்விடை கொள்ள
[நித்திலப் பைம்பூ ணிலாத்திக ழவிரொளித்
தண்கதிர் மதியத் தன்ன மேனிய
ஞெண்கதிர் நித்திலம் பூணொடு புனைந்து
வெண்ணிறத் தாமரை யறுகை நந்தியென்
௨௦. றின்னவை முடித்த நன்னிறச் சென்னிய
[1] னுரையென விரிந்த நுண்பூங் கலிங்கம்
புலரா துடுத்த வுடையினன் மலரா
வட்டிகை விளம்பொரி வன்னிகைச் சந்தனங்
கொட்டமோ டரைத்துக் கொண்ட
மார்பினன்
௨௫. றேனும் பாலுங் கட்டியும் பெட்பச்
சேர்வன பெறூஉந் தீம்புகை மடையினன்
தீர்த்தக் கரையுந் தேவர் கோட்டமு
மோத்தின் சாலையு மொருங்குட னின்று
பின்பகற் பொழுதிற் பேணின னார்வோ
௩௦. னன்பகல் வரவடி யூன்றிய காலினன்
2

விரிகுடை தண்டே குண்டிகை காட்டம்
பிரியாத் தருப்பை பிடித்த கையின
ஞவிலு [3] மார்பிலு நவின்ற நூலினன்]

முத்தீ வாழ்க்கை முறைமையின் வழாஅ
௩௫. வேத முதல்வன் வேள்விக் கருவியோ
டாதிப் பூதத் ததிபதிக் கடவுளும்

கரு. விடைகொள்ள - அரசனை உட்கொண்டுநீங்க; அன்றி, மிடைகொள்ள - செருப்பவித்தற்கு வந்து மிடையவென்றுமாம்.

(கசு) "நித்திலப்பைம்பூண்" முதலாகப் (௩௬) "பூதத் ததிபதிக் கடவுள்" ஈறாகப் பிராமணபூதத்தைக்கூறிற்று; அப்பூதத்துக்கு நிறம் வெள்ளை.

௩௫. வேதமுதல்வன் - பிரமன். கருவி - சமிதைமுதலாயின.

௩௪ - ௬. பிரமன் வேள்விக்குச்சொன்ன உறுப்புக்களோடு முத்தீவாழ்க்கை முறைமையின்வழுவாத ஆதிப்பூதக்கடவுளும்.

(௩௫) கருவியோடு (௩௪) முறைமையின் வழுவாவெனக்கூட்டுக.

(கசு) நித்திலக்கோவை நிலாவொளிபோலத் திகழ்கின்ற (௩௬) ஆதிப்பூதம்; (௩௪) முத்தீவாழ்க்கை வழுவாத (௩௬) ஆதிப்பூதம்,

[1] "திம்பா துரைபோற் றிகழ்வெண்பட் டுடுத்து" (சீவக. ௩௦௪௬); "நுரைபுரை கலிங்கம்" பெரும். உ, இ: அசு.

[2] "தண்டொடு பிடித்த தாழ்கமண் டலத்துப், படிவ வுண்டிப் பார்ப்பன மகனே" (குறுந். கசுசு); "எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழ, லுறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலும்" (கலி. ௯) [3] மார்பின் நவின்றநூல் - பூணூல்.

## ௨௨.—அழற்படுகாதை.

௪௯௫

[வென்றி வெங்கதிர் புரையு மேனியன்
குன்று * மணிபுனை பூணினன் பூணொடு
முடிமுதற் கலன்கள் பூண்டனன் முடியொடு
௨௰. சண்பகங் கருவிளை செங்கூ. தாளந்
தண்கமழ் பூநீர்ச் சாதியோ டிணையவை
கட்டுங் கண்ணியுந் தொடுத்த மாலையு
மொட்டிய திரணையோ டொசிந்த பூவின
னங்குலி கையெறிந் தஞ்சுமகன் விரித்த
௨௫. குங்கும வருணங் கொண்ட மார்பினன்
பொங்கொளி யரத்தப் பூம்பட் டுடையினன்

முகிழ்த்தகைச்
சாலி யயினி பொற்கலத் தேந்தி
யே லு நற்சுவை யியல்புளிக் கொணர்ந்து
ரு0. வெம்மையிற் கொள்ளு மடையினன் செம்மையிற்]
பவளச் செஞ்சுடர் திகழொளி மேனிய
ணுழ்கடன் ஞால மாள்வோன் றன்னின்
முரைசொடு வெண்குடை கவரி நெடுங்கொடி
யுரைசா லங்குசம் வடிவேல் † வடிகயி
ருரு. றெனவிவை பிடித்த கையின ணுகி
யெண்ணருஞ் சிறப்பின் மன்னரை யோட்டி
மண்ணகங் கொண்டு செங்கோ லோச்சிக்
கொடுங்தொழில் கடிந்து கொற்றங் கொண்டு
‡ நடும்புகழ் வளர்த்து நானிலம் புரக்கு
சு0. முரைசால் சிறப்பி [1] னெடியோ னன்ன
வரைச பூதத் தருந்திறற் கடவுளுஞ்

---

(ருக) "பவளச்செஞ்சுடர்" முதலாக (சுக) 'அருந்திறற்கடவுள்' ஈருக அரசபூதத்தைத்கூறிற்று. அப்பூதத்துக்குநிறம் பவளம்.

ருஉ. ஆள்வோன் - அருச்சுனன். ருச. வடிக்கை - புரவியைவசமாக்குகை.

ருங - ரு. முரசுமுதலானவேழும் இராசாக்களுக்கும் இப்பூதத்திற்கு [முரியன.

ருசு. மன்னர் - துரியோதனுதிகள்.

(ருஉ) இவனிடத்துச் சாரதியாய்நின்று (ருங) முரசுமுதலாகிய (ருரு) பிடித்தகையினணுகி (ருசு) மன்னரையோட்டி (ருஎ) ஓச்சிக் (ருஅ) கடிந்து கொற்றங்கொண்டு (ருக) புரக்கும் (சு0) உரையமைந்த சிறப்பையுடைய நெடியோனையொத்த கடவுட்பூதமென்க. இவற்ருல்உலகளந்தோனையொத்த பூதமென்க.

[இன்னும்; [1] பாண்டியனுடைய கையினிலக்கணம் பூதத்துக்கும் பிடித்தனைய இருவர்க்கும் ஒத்தபண்பென்றுமாம்.]

ருக - சுக. பவள..............அருந்திறற்கடவுளும் - பவளவொளி திகழ் தருமேனியையுடைய அரசபூதமாகியகடவுளும்.

---

[1] புறநா. கூ-௪0 ஆம் அடி; மதுரை. கூக.

(பி - ம்.) * 'மணியொடு புனைந்த பூணினன்' † 'வடிக்கயிறு' ‡ 'நெடும்புகழ்'

# சிலப்பதிகாரம்

* செங்கிறப் பசும்பொன் புரையு-†
மேனியன்
மன்னிய சிறப்பின் மறவேன் மன்னவ
[1] ரரைசுமுடி யொழிய வமைத்த
பூணினன்
கூரு. வாணிக மரபி னீணில மோம்பி
நாஞ்சிலுந் துலாமு மேந்திய கையின
[ னுரைசால் பொன்னிறங் கொண்ட
வுடையினன்
வெட்சி தாழை கட்கம ழாம்பல்
சேட னெய்தல் பூளை மருதங்
எ0. கூட் முடித்த சென்னிய னீடொளிப்
பொன்னென விரிந்த நன்னிறச் சாந்தந்
தன்னொடு புனைந்த மின்னிற மார்பினன்
கொள்ளும் பயறுந் துவரையு முழுந்து
நள்ளியம் பலவு நயந்துட னளைஇக்
எரு. கொள்ளெனக் கொள்ளு மடையினன்

புடைதரு

நெல்லுடைக் களனே புள்ளுடைக்

கழனி

வாணிகப் பீடிகை நீணிழற் காஞ்சிப்
பாணிகைக் கொண்டு முற்பகற் பொழுதி
னுண்மகிழ்ந் துண்ணு வோனே யவனே

௮0. நாஞ்சிலம் படையும் வாய்ந்துறை

துலாமுற்

சூழொளித் தாலு மியாழு மேந்தி*
விளங்குபத மிகுந்து விருந்துபதந் தந்து

மலையவுங் கடலவு மரும்பலங் கொணர்ந்து
விலைய வாக வேண்டுநர்க் களித்தாங்]
௮௫. குழவுதொழி லுதவும் ‡ பழுதில் வாழ்க்கைக்
கிழவ னென்போன் கிளரொளிச் § சென்னியி
னிளம்பிறை சூடிய விறையவன் வடிவினோர்
விளங்கொளிப் பூத வியன்பெருங் கடவுளும்

---

(௬௨) "செங்கிறப் பசும்பொன்" முதலாக (௮௮) "வியன்பெருங் கடவுள்" ஈறாக வணிகபூதத்தைக் கூறிற்று. அப்பூதத்துக்குநிறம் பொன்.

* ௬௪. பூணினன் - பூணினனாய்.

௬௫. மரபின் - மரபால். ௬௬ துலாம் - துலாக்கோல்.

(௬௨) பொன்புரைய மேனிக் (௮௮) கடவுள்.

(௬௬) நாஞ்சிலும் துலாக்கோலுமேந்தியகையினனாய் (௮௫) வாழ்க்கைக்கு (௮௬) உரியோனென்று சொல்லப்படுவோனாகிய (௮௮) பூதக்கடவுளுமென்க.

---

[1] பெருங்கதை, ௨. ௨: கஙிக.

(பி-ம்.) * 'செந்நீர்ப்' † 'மேனி' ‡ 'பழுதில்லாடக்கிழவன்' § 'சென்னியன்'

[கருவிளை புரையு மேனிய னரியொடு
கூ0. வெள்ளி புனைந்த பூணினன் றெள்ளொளிக்
காழகஞ் செறிந்த வுடையினன் காழகிற்
சாந்துபுலர்ந் தகன்ற மார்பின னேந்திய
[1] கோட்டினுங் கொடியினு நீரினு நிலத்தினும்
காட்டிய பூவிற் கலந்த பித்தையன்
கூரு. கம்மியர் செய்வினைக் கலப்பை யேந்திச்
செம்மையின் வரூஉஞ் சிறப்புப் பொருந்தி]
[2] மண்ணுறு திருமணி புரையு மேனிய
னொண்ணிறக் காழகஞ் சேர்ந்த வுடையினை
னூடற் கமைந்த வவற்றொடு பொருந்திப்
கூ00. பாடற் கமைந்த பலதுறை போகிக்
கலிகெழு கூடற் பலிபெறு பூதத்
தலைவ னென்போன் றானுந் தோன்றிக்
கோமுறை பிழைத்த நாளி லிந்நகர்
தீமுறை யுண்பதோர் திறனுண் * டென்ப

க0ரு. தாமுறை யாக வறிந்தன மாதலின்
யாமுறை போவ தியல்பன் றேவெனக்
கொங்கை குறித்த கொற்ற நங்கைமு
ஹற்பாற் பூதமும் பாற்பாற் பெயரக்
[3] கூல மறுகுங் கொடித்தேர் வீதியும்

கக0. * † பால்வேறு தெரிந்த நால்வேறு தெருவு
[முரக்குரங் குயர்த்த வொண்சிலை யுரவோன்]

---

(கஎ) "மண்ணுறுதிருமணி" முதலாகப் (க0க - உ) "பலிபெறுபூதத்தலை வன்" ஈறாக வேளாண்பூதத்லைக்கூறிற்று அதற்குநிறம் நீலம்.

கஎ. திருமணி - நீலமணி. கக. ஆட்டற்கமைந்தவை - வாச்சியம்.

க00. துறைபோகல் - முடியவறிதல்.

(க00) முடியப்போகிப் (க0க) பலிபெறுபூதமென்க.

ஈகு - க0உ. இந்நால்வருந்தோன்றி.

க0ச. தீமுறையுண்பது - நெருப்பு நியாயமாகவுண்பது.

க0ரு- ஆமுறையாக - ஆவதொரு நியாயமாக; இன்னும், ஆமுறையாக வறிந்தனம் - மேல் வரக்கடவதொருவிதியென்று முன்னேயறிந்தேம்.

கக0. நால்வேறுதெரு - நால்வகை வருணத்தார்தெரு.

---

[1] நால்வகைப்பூக்கள், [2] மு. புறநா. இகூ.

[3] சிலப். கச: உகக. [4] சிலப். கச: உகஉ.

(பி - ம்.) * 'என்பதியாமுறையாகவறிந்தன மன்றேநாற்பாற்' † 'பால்வகை தெரிந்த நால்வேறு தெருவுங் காவெரி யுண்டநாட்'

சுகூ

[1] காவெரி யூட்டிய நாள்போற் * கலங்க
வறவோர் மருங்கி னழற்கொடி விடாது
மறவோர் சேரி மயங்கெரி மண்டக்
கக௫. கறவையுங் கன்றுங் கனலெரி சேரா
[2] வறவை யாய ரகன்றெரு வடைந்தன
மறவெங் களிறு மடப்பிடி நிரைகளும்
விரைபரிக் குதிரையும் புறமதிற்
பெயர்ந்தன

சாந்தந் தோய்ந்த வேந்திள வனமுலை
க௨0. மைத்தடங் கண்ணார் மைந்தர் தம்முடன்
செப்புவா யவிழ்ந்த தேம்பொதி நறுவிரை
நறுமல ரவிழ்ந்த நாறிரு † முச்சித்
துறுமலர்ப் பிணையல் சொரிந்த பூந்துகள்
குங்கும மெழுதிய கொங்கை முன்றிற்
க௨௫. சைங்கா ழாரம் பரிந்தன பரந்த
தூமென் சேக்கைத் ‡ துனிப்பதம் பாராக்
[3] காமக் கள்ளாட் டடங்கினர் மயங்கத்
திதலை யல்குற் றேங்கமழ் குழலியர்
[4] குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வரொடு

ககஉ. கா - காண்டாவனம்.

ககங. அறவோரிடத்து அழற்கொடி விடாதாய்.

ககச. அறவை - அறத்தையுடைய.

கஞ - கூ. கனலெரி சேராவாய் ஆயர் தெருவிலடைந்தன.

கஉக. செப்பு வாய்திறந்து சொரிந்தவிரை - சாந்து புழுகுநெய் முதலாயின.

கஉக - ங. [1] செப்பிலேவாயவிழ்ந்த பிணையலெனக்கூட்டி; நறுவிரையையுடைய பிணையல், மூச்சிப்பிணையலென்றுமாம். நறுமலரவிழ்தல், மூச்சிக்கட்டை.

கஉசு. துனியின்செவ்வி பார்க்கவேண்டாத; துனியளவு விட்டிராதவென்றுமாம்; இவர் பிள்ளைபெறுதவர்.

கஉடு - கூ. பரிந்தனபரந்த சேக்கை - கையற்றுப்பரந்த சேக்கை

கஉஎ. அடங்கினர் மயங்க - ஒழிந்த சோர.

---

[1] சிறுபாண். உகூஅ. [2] 'அறவையாயர்' சிலப். கஙி: கஉ0 - உக.

[3] 'தருக்கியகாமக்கள்ளாட்டு' மணி. உடு: கூக. [4] மு. மணி. எ: கஎ.

[5] செப்பு - மலருமரும்புகள் வைத்திருக்கும் பூஞ்செப்பு; நற். ககஎ: குறுந். க; மணி. ச: கூகு; குளா. மந்திர. கூ; பெருங். க: கக, எகூ.

(பி - ம்.) * 'கலங்கி' † 'மூச்சிட்டுதமலர்' ‡ 'துனிபடுதங்காமக்கடவுள்கள்.

# உஉ—. அழற்படுகாதை.

சங்கு சி

கநூ0. * பஞ்சியா ரமளியிற் றுஞ்சு துயி லெடுப்பி
வானரைக் கூந்தன் மகளிரொடு † போத
[1] வருவிருந் தோம்பி மனையற முட்டாப்
பெருமனைக் கிழத்தியர் பெருமகிழ் வெய்தி
யிலங்குபூண் மார்பிற் கணவனை யிழந்து
கநூரு. சிலம்பின் வென்ற சேயிழை நங்கை
கொங்கைப் பூசல் கொடிதோ ‡ வன்றெனப்
பொங்கெரி வானவற் றொழுதன ரேத்தின
[2] ரெண்ணென் கிரட்டி யிருங்கலை பயின்ற
பண்ணியன் மடந்தையர் பயங்கெழு வீதித்

கசு0.

தண்ணுமை முழுவந் தாழ்தரு தீங்குழல்
[3] பண்ணுக்கிளை பயிரும் § பண்ணியாழ்ப் பாணியொடு
நாடக மடந்தைய ராடரங் கிழந்தாங்

கெந்நாட் டாள்கொல் யார்மகள் கொல்லோ
விந்நாட் டிவ்வூ ரிறைவனை யிழந்து
கசரு. தேரா மன்னனைச் சிலம்பின் வென்றிவ்
வூர்தீ யூட்டிய வொருமக || ளென்ன
வந்தி விழவு மாரண வோதையுஞ்
செந்தீ ¶ வேட்டலுந் தெய்வம் பரவலு
மனைவிளக் குறுத்தலு மாலை யயர்தலும்
கரு௦. வழங்குகுரன் முரசமு மடிந்த மாநகர்க்
காதலற் கெடுத்த நோயொ டுளங்கனன்
[4] றாதலைக் குருகி னுயிர்த்தன ளுயிர்த்து
மறுகிடை மறுகுங் கவலையிற் ** கவலு

கங்க. கொடிதன்று - நியாயம்.

கங்க. பண்ணியன்மடந்தையர் - இசையறிவார்.
கசஉ. நாடகமடந்தையர் - தளியிலார்.
(கங்க) வீதியிடத்து (கசஉ) அரங்கிழந்து.

கசஎ. அந்திவிழவு - சீபலி.
கசஅ. தெய்வம்பரவல் - தெய்வபூசனை.
கருக. மறுகிடைமறுகும் - மறுகிலேசுழன்றுதிரியும். கவலை - குறுந்தெரு. கவலும்...........போம்.

[1] குறள். அக. [2] "என்னொண்கலையோர்" (சிலப். கச: கசஎ): "யாழ்முதலாகவறுபத்தொருநான், கேரினமகளிர்க்கியற்கை" பெருங். க: கஙி: அச - ரு.
[3] மணி. எ: சக. [4] "உட்றாலைக்குருகினுயிர்த்தகத்தடங்காது" மணி. உ: சஉ.
(பி - ம்.) * 'பாலாரமளித்', 'பல்லாரமளித்' † 'மயங்க' ‡ 'இன்றென'
§ 'பண்யாழ்ப்பாணரொடு' || 'எனவுமந்தி' ¶ 'வேட்கையின்' ** 'கவலையும்'

[1] மியங்கலு மியங்கு மயங்கலு மயங்கு
கடுடு. [2] மாரனு நற்ற வீரபத் தினிமுன்
கொந்தழல் வெம்மைக் கூரெரி *
பொருஅள்
வந்துதோன் றினண் மதுரா பதியென்.

வெண்பா.

[3] மாமகளு நாமகளு மாமயிடற்
செற்றுகந்த
கோமகளுந் தாம்படைத்த
கொற்றத்தா—ளு மு-
முதிரா
முலைகுறைத்தாண் முன்னரே வந்தாண்
[4] மதுரா பதியென்னு † மாது.

---

(கஅக) விலைமடந்தையாரது

வீதியில் (கசஉ) மடந்தையர் (கசo) தன்னு
மைமுழவு குழல் (கசக) யாழ்ப்பாணி இவற்றுடனே

(கசஉ) ஆடும் அரங்கினை

யிழந்து (கசகூ) இவ்வொருமகள் (கசஙூ)

எந்நாட்டாள்கொல்? யார்மகள் கொல்

(கசகூ) என்ன (கடுo) நகரியிலே (கடுச) இயங்குதலையுஞ் செய்யும்; மயங்குதலையுஞ்செய்யும்; இவ்வகை (கடுரு) ஆரஞருற்ற வீரபத்தினிமுன் (கடுசு) ஊர்

எரியுண்டதற்குப் பொருளாய் (கடுஎ) வந்து

தோன்றினுள், மதுராபதியென்

னும் தேவதையென்க.

"மாமகளும்":—தாம்படைத்த

கொற்றத்தாள் - இவர்கள்படைத்த கொற்ற

மெல்லாமுடையாள்; "நாவினுங் * * * வாளினும்"

என்ற மூவகைவென்

றியும்; மாமகள் - சீதேவி. நாமமுலை -

அச்சத்தைச்செய்யுமுலை.

உஉ.—அழற்படுகாதை முற்றிற்று.



[1] "சுழலஞ்சுழலு, மோடலுமோடும்" மணி. ௩: ௧௧௧-௨.

[2] மு. சிலப். பதி. ௪௨.

[3] இச்செய்யுளிலுள்ள முறைப்படியே 'திருவின் செல்வி யொருதனிக் கொழுந, புலமை சான்ற கலைமகள் கணவ, வீரிய மடந்தை பேரிசைக் கிழவ' என ஞானாமிருதம், ௪௬-ஆம் செய்யுளிலும் அமைந்திருத்தல் காண்க.

[4] "மதுராபதியென்னுமாபெருந்தெய்வம்" மணி. ௨௬: ௧௧.

(பி-ம்.) * 'போன்றுள்வந்து' †'மான்'

# இருபத்து மூன்றாவது

## கட்டுரை காதை.

சடையும் பிறையுந் தாழ்ந்த * சென்னிக்
குவளை யுண்கட் டவளவாண் முகத்தி
கடையெயி றரும்பிய பவளச் † செவ் வாய்த்தி
யிடைநிலா விரிந்த நித்தில ‡ நகைத்தி
௫. யிடமருங் கிருண்ட நீல மாயினும்
வலமருங்கு பொன்னிறம் புரையு மேனிய
ளிடக்கை பொலம்பூந் தாமரை யேந்தினும்
வலக்கை யஞ்சுடர்க் § கொடுவாள் பிடித்தோள்
வலக்கால் புனைகழல் கட்டினு மிடக்காற்
௧௦. றனிச்சிலம் பரற்றுந் தகைமையள் பனித்துறைக்
கொற்கைக் கொண்கன் குமரித் துறைவன்

பொற்கோட்டு வரம்பன் பொதியிற் பொருப்பன்
குலமுதற் கிழத்தி யாதலி னலமங்

தொருமுலே குறைத்த திருமா பத்தினி
கரு. யலமரு திருமுகத் தாயிழை நங்கைதன்
|| முன்னிலே யீயாள் பின்னிலேத் தோன்றிக்
கேட்டிசின் வாழி நங்கையென் குறையென

வாட்டிய திருமுகம் வலவயிற் கோட்டி
¶ யாரைநீ யென்பின் வருவோ யென்னுடை
உ0. யாரஞ ரெவ்வ மறிதி யோவென

---

க. சடையும் பிறையும் - சடையிடத்தேபிறையும்.

ரு. கடையெயிறு - பன்றிக்கொம்புபோலப் புறப்பட்ட எயிறு.

அ. கொடுவாள் - மழு.

கரு. குலமுதலாதலின் - அடியேதொடங்கி இரட்சித்தற்குரியளாதலின்.

கசு. முன்னிலேயீயாள் - முன்னில்லாள்; அவளுக்கு முன்னிற்றலேச் செய்யாள்.

---

(பி - ம்) * 'செந்திறக்' † 'செவ்வா, யிடைதிலா!' ‡ 'நகைச்சியிடை' § 'நெடு வாள் பிடித்தன, விடக்காற் றனிச்சிலம்பு பரற்றினும் வலக்காற் புனைகழல் கட்டுந் தகைமையன்' || 'பின்னிலேஇயாண முன்னிலேத்தோன்றி' ¶ 'யாரிவ ளென்முன் முந்நாளிவளெ னாரஞ ரெவ்வ மறியா தாளென'

வாரணு ரெவ்வ மறிந்தே * னணியிழா அய்
மாபெருங் கூடன் மதுரா பதியென்பேன்
கட்டுரை யாட்டியேன் † யானின்
கணவற்குப்
பட்ட கவற்சியேன் பைந்தொடி கேட்டி
உரு. பெருந்தகைப் பெண்ணொன்று கேளாயென்
னெஞ்சம்
வருந்திப் புலம்புறு நோய்
தோழிநீ ‡ யீதொன்று கேட்டியெங்
கோமகற்
கூழ்வினை வந்தக் கடை
மாதரா யீதொன்று கேளுன் கணவற்குத்
௩௦. தீதுற வந்த வினை ; காதின்
[1] மறைநா வோசை யல்ல தியாவது
மணிநா வோசை கேட்டது மிலனே

யடிதொழு திறைஞ்சா மன்ன ரல்லது
[2] குடிபழி தூற்றுங் கோலனு மல்ல

௩௫. னின் னுங் கேட்டி நன்னுதன் மடந்தையர்
மடங்கெழு நோக்கின் § மதமுகந் திறப்புண்
[3] டிடங்கழி நெஞ்சத் திளமை யானை
[4] கல்விப் || பாகன் கையகப் படாஅது
தொல்கா ¶ வுள்ளத் தோடு மாயினு
௪0. மொழுக்கொடு புணர்ந்தவிவ் விழுக்குடிப் பிறந்தோர்க்

---

௨௩. கட்டுரையாட்டியேன் - ஒருவார்த்தைசொல்லுதலுடையேன்.

௨௩-௪. நின்கணவற்குப்பட்ட கவற்சியுடையேன்; ஆயினும் நீ கேளென்க.
௨௭-அ. ஊழ்வினை வந்தபடி கேளாய்; வந்தக்கடை, ககரவொற்றுவிகாரம். (௩0) வினை (௨௧) கேளென்க.

௩௧. மறைநா - அந்தணர்நா; ஓசை - ஓதினோர்வாயில் வரும் நியமமான வார்த்தை.

௩௩. மன்னர் பழிதூற்றுவதல்லது.

௩௬. மடங்கெழு நோக்கின் - மகளிருடைய பார்வையாலே............... சிலேடையாக்குக.

---

[1] "ஓதலந்தணர்வேதம்பாட" (மதுரை. ௬௫௬); "நான்மறைக் கேள்வி நவில்குர லெடுப்ப, வேம வின்றுயி லெழுத லல்லதை, வாழிய வஞ்சியுங் கோழியும் போலக், கோழியி னெழாதெம் பேரூர் துயிலே" பரி. ப. ௧௭௨. [2] புறநா. ௭௨.

[3] "இடங்கழிகாமமொ டடங்கான்" மணி. ௧0: ௨௨; ௧௮: ௧௧௬.

[4] "கல்விப்பாகரிற் காப்புவலையோட்டி" மணி. ௧௮: ௧௬௫.

(பி - ம்.) * 'அணியிழாய், மாபெருங்கூட்டன் மதுராபதியெனுங் கட்டுரையாட்டியேன்' † 'யானுன்' ‡ 'இக்தொன்று கேளாயெங்' § 'மதிமுகம்' || 'பாகர்கையகப்படாது' ¶ 'உள்ளமொட்டோடுமாயினும்', 'உள்ளமோடுமாயினும்'.

ருௌரு

கிழக்கந் தாரா திதுவுங் கேட்டி
[1] யுதவா வாழ்க்கைக் * கீரந்தை மனைவி
புதவக் கதவம் † புடைத்தன ளொருநா
ளரைச வேலி யல்ல தியாவதும்

சஞ. புரைதீர் வேலி யில்லென மொழிந்து
மன்றத் திருத்திச் சென்றீ ரவ்வழி
யின்றவ் வேலி காவா தோவெனச்
[2] செவிச்சூட் டாணியிற் புகையழல் ‡

பொத்தி

நெஞ்சஞ் சுடுதலி னஞ்சி நடுக்குற்று
ருo. [3] வச்சிரத் தடக்கை யமரர் கோமா
னுச்சிப் பொன்முடி யொளிவளை

யுடைத்தகை

§ குறைத்த செங்கோற் குறையாக் கொற்றத்
திறைக்குடிப் பிறந்தோர்க் கிழுக்க மின்மை
யின்னும் || கேட்டி நன்வா யாகுதல்

ருரு. * பெருஞ்சோறு பயந்த திருந்துவேற் றடக்கை

சஉ. உதவாவாழ்க்கை - பிறர்க்கு உதவமாட்டாத மிடிவாழ்க்கை.

சங. புதவக்கதவம் - கதவில்லாவீடு; குழை..........................

சசு. மன்றம்[3] அரணில்லாதவீடு. அவ்வழி - நீர் போகின்ற அக்காலத்து.

சஅ. செவிச்சூட்டாணி - செவியைச்சுடுவதாகிய ஆணி; சுடுதலுள்ள இறைச்சி சூட்டிறைச்சியானாற்போல.

ருக - உ. கைகுறைத்தசெங்கோல் - கைகுறைத்ததற்குக் காரணமாகிய செங்கோலையும்.

ருச. நன்வாயாகுதல் - நன்றாகிய மெய்யாதல்.

ருரு. பெருஞ்சோறுபயந்த - பாண்டவர்கள்படைக்கும் துரியோதனன் படைக்கும் சேரன் சோறிட்டதனை.

---

[1] சஉ-ருக. பாண்டியன் கைகுறைத்த செய்தியை இப்புத்தகம் உஉ-ஆம் பக்கத்தின் அடிக்குறிப்பாலுணர்க; "கையரிந்தான் மாறன் கதவிடித்த குற்றத்தா, லெய்யுஞ் சிலைக்கை யிரங்கேசா", "கொற்கையான் மாறன் குலசேகரவழுதி, பொற்கையா, னக்கதை போதாதோ" என்றார் பிறரும்; திருவால. ௪௭: க - பார்க்க.

[2] 'சுடுநாராசஞ் செவிசெறித்தாங்கு' பெருங். க. ௪௭: உகஅ. [3] சிலப். கக: உசு,

[4] இது 'பெருஞ்சோறு பயந்த' என்றது சேரமான் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதன் பாரதயுத்தத்தில் எல்லோர்க்கும் உணவளித்த செய்தியை; "ஓரைவ ரீரைம் பதின்ம ருடன்றெழுந்த, போரிற் பெருஞ் சோறு போற்றது தானளித்த, சேரன்" (சிலப். உக: ஊசல்வரி); "உதியஞ் சேரல், பெருஞ் சோறு கொடுத்த ஞான்றை" (அகநா. உகங); "அலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ, நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை, யீரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப், பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்" (புறநா. உ.) [5] 'அம்பலந்தாழ்பூட்டுவோர்' பழ. கசு - ககூ.

(பி - ம்) * 'ரேத்தன்மனைவி'. † 'புடைத்தனெறைவு' ‡ 'பொங்கிநெஞ்சகம்' § 'குறைத்துச்' || 'கேட்டியோர்தன்'



திருநிலை பெற்ற [1] பெருநா ளிருக்கை
யறனறி செங்கோன் மறநெறி நெடுவாட்

புறவுநிறை புக்கோன் கறவைமுறை
செய்தோன்

பூம்புனற் பழனப் * புகார்நகர் வேந்தன்
௬௦ றுங்கா விளையு † ணன்ற டதனுள்
வலவைப் பார்ப்பான் பராசர
னென்போன்

குலவுவேற் சேரன் கொடைத்திறங் கேட்டு
வண்டமிழ் [1] மறையோற்கு ‡ வானுறை கொடுத்த
திண்டிறல் நெடுவேற் § சேரலற்
காண்கெனக்

௬௫. காடு நாடு மூரும் போகி
நீடுநிலை மலயம் பிற்படச் சென்றாங்
[3] கொன்றுபுரி கொள்கை யிருபிறப்
பாளர்

[4] முத்தீச் செல்வத்து நான்மறை முற்றி
யைம்பெரு வேள்வியுஞ் செய்தொழி
லோம்பு

௭0. மறுதொழி லந்தணர் பெறு || முறை
வருக்க

---

௫௬. பெருநாளிருக்கை - பெரிய நாளோலக்கத்து இருக்கை.

௫௭. மறநெறி நெடுவாள் - மறத்திலே

யொழுகினை வாள்.

௬௬. நீடுநிலைமலயம் - போகிய நிலையையுடையமலயம்.

௬௭. ஒன்று - முத்தீ. இருபிறப்பு - உபநயனத்துக்குமுன்னும்பின்னும்.

௬௮. முத்தீ - ஆகவனீயம், காருகபத்தியம், தக்கிணாக்கினி.

௭௦. அறுதொழிலாளர் பெறுமுறை - ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றலென்னை இக்குணங்களையுடையார் பெறுமுறையை. வகுக்க - அவனுக்குக்கூறுபடுத்த.

---

[1] பெருநாளிருக்கை :— சேரனுடைய காலையோலக்கம்; 'தண்கடனாடனொண் பூங் கோதை, பெருநாளிருக்கை' (மதுரை. ௫௨௪ - ௫) என, அந்நாளோலக்கம் பாராட்டப் பெற்றிருத்தல் காண்க.

[2] மறையோனென்றது பாலைக்கௌதமனாரை; இவருக்குச் சுவர்க்கங்கொடுத்த சேரன் இமயவரம்பன்றம்பி பல்யானைச் செல்கெழுகுட்டுவனென்பவன்; இதனைப்பதிற்றுப்பத்தின் மூன்றும்பத்திறுதியிலுள்ளதாகிய அடியில்வரும் வாக்கியத்தாலுணர்க; 'பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப் பாலைக்கௌதமனார் பாடினார் பத்துப்பாட்டு; ........பாடிப்பெற்றபரிசில்; நீர் வேண்டியது கொண்மினென யானும் என்பார்ப்பனியும் சுவர்க்கம்புகல்வேண்டுமெனப் பார்ப்பாரிற்பெரியோரைக்கேட்டு ஒன்பது பெருவேள்வி வேட்பித்துப் பத்தாம்பெருவேள்வியிற் பார்ப்பானையும் பார்ப்பனியையும் காணாராயினார்' சிலப். ௨௮: ௧௩௭ - ௮; 'அறக்கமெய்தியதொய்யாநல்லிசை, முதியர்ப் பேணியவுதியஞ்சேரல்' அகநா. ௨௩௩. இச்சரிதை, பழமொழி ௧௧௬-ஆம் பாட்டிலும், தொல். புறத்திணை. ௫. ௨௫ - ௯. உரையிலும் வந்துள்ளது.

[3] புறநா. ௩௬௭. [4] முருகு. ௧௮௧-௨.

(பி - ம்.) * 'புகாஅ வேந்தன்' † 'நன்னுட்டத்துள்பலவைப்பாசான்' ‡ 'வானங்கொடுத்த' § 'சேரற்காண்கென' || 'முறையெய்தி'

காவலங் கொண்டு நண்ணு ரோட்டிப்
[1] பார்ப்பன வாகை சூடி யேற்புற
நன்கலங் கொண்டு தன்பதிப் பெயர்வோன்
செங்கோற் * றென்னன் றிருந்துதொழின்
மறையவர்
எகூ. தங்கா லென்ப தூரே யவ்வூர்ப்
பாசிலை பொதுளிய போதிமன் றத்துத்
தண்டே குண்டிகை † வெண்குடை காட்டம்
பண்டச் சிறுபொதி பாதக் காப்பொடு
களைந்தன னிருப்போன் காவல் வெண்குடை
அ0. விளைந்துமுதிர் கொற்றத்து விறலோன் வாழி
[2] கடற்கடம் பெறிந்த காவலன் வாழி
விடர்ச்சிலை ‡ பொறித்த வேந்தன் வாழி
பூந்தண் பொருநைப் பொறையன் வாழி
மாந்தரஞ் சேரன் மன்னவன் வாழ்கெனக்
அரு. குழலுங் குடுமியு மழலைச் செவ்வாய்த்
தளர்நடை யாயத்துத் தமர்முத னீங்கி
விளையாடு சிறாஅ ரெல்லாஞ் சூழ்தரக்

எக. நா வலங்கொண்டு - தருக்கஞ்சொல்லி

நாவெற்றியையுடையோனாய்;

நா வலம் - நாவெற்றியென்க.

(எ0.) பெறுமுறைவகுத்த (எரு) நன்கலங்கொண்டென்க.

(எக) நாவலங்கொண்டு ஓட்டிச் (எஉ) சூடிக் (எரு) கொண்டு பெயர்வோன்; பெயர்வோன் பெயர்தர.

தன்பதிப்

எச. திருந்துதொழின் மறையவர் - பஞ்சக்கிராமிகள்.

எடு. தங்கால் - திருத்தங்காலூர்.

எசு. அரசுகிற்குமன்று. எஎ. காட்டம் - சமித்து.

(எ௯) குடையையும் (அ0) கொற்றத்தையுமுடைய விறலோன்.

அச. வாழ்கென - வாழ்கவென்று சொல்ல.

அஎ. சிறூர்சூழ்தர - தன்னைச்சிறூரெல்லாம் சூழ்தர.

---

[1] பார்ப்பனவாகையினியல்டை, "கேள்வியாற்சிறப்பெய்தியானை, வேள்வியான்விறன் மிகுத்தன்று," "ஓதங் கரைதவழ்நீர் வேலி யுலகினுள், வேதங் கரைகண்டான் வீற்றிருக்கு - மேதஞ், சுடுசுடர் தானாகிச் சொல்லவே வீழ்ந்த, விடுசுடர் வேள்வி யகத்து" என்பவற்றாலறிக; பு-வெ. வாகை. ௯.

[2] அக - உ. சிலப்பதிகாரம், உஅ; ககஇ - சு.

(பி - ம்.) * 'தென்னவன்றிருத்தொழில்' † 'ஒண்குடை' ‡ 'பொறித்தவிறலோன் வாழி'

சுச

நிOசு சிலப்பதிகாரம்

* குண்டப் பார்ப்பீ ரென்னோ டோதியென்

பண்டச் சிறுபொதி கொண்டு†போ
மின்னெனச்

௯0. சீர்த்தகு சிறப்பின் வார்த்திகன் புதல்வ
னுலமர் செல்வன்

‡ பெயர்கொண்டு வளர்ந்தோன்
பானுறு செவ்வாய்ப் படியோர் முன்னர்த்

தளர்நா வாயினு மறைவிளி வழாஅ
துளமலி யுவகையோ டொப்ப வோதத்

௯௫. § தக்கிணன் றன்னை மிக்கோன் வியந்து

முத்தப் பூணு லத்தகு புனைகலங்
கடகந் தோட்டொடு கையுறை யீத்துத்
தன்பதிப் பெயர்ந்தன னாக நன்கலன்
புனைபவும் பூண்பவும் பொருஅ ராகி

௧00. வார்த்திகன் றன்னைக் காத்தன ரோம்பிக்
கோத்தொழி லிளையவர் கோமுறை ||

யன் றிப்

படுபொருள்

வெளவிய பார்ப்பா னிவனென

விடுசிறைக் ¶ கோட்டத் திட்டன ராக

வார்த்திகன் மனைவி கார்த்திகை யென்போ

கoரு. ளலந்தன ளேங்கி யழுதன ணிலத்திற்

புலந்தனள் புரண்டனள் பொங்கின ளதுகண்டு

மையறு சிறப்பி னையை கோயிற்

---

அஅ. குண்டப்பார்ப்பீர் - பிழுக்கை மாணிகாள்; சிறுமாணிகாள், சிறு பிள்ளைகாளென்னினுமாம்.

கக. ஆலமர் செல்வன்பெயர் - தக்கிணாமூர்த்தி.

கஉ. பானுறுசெவ்வாயையுடைய பிரமசாரிகள்; படிமம் - படியென் றாயிற்று. படியோர் - தன்னை இளமையாலொப்பாருமாம்; படி - வேடமுமாம்.

கக. புனைவனவும் பூண்பனவுமாக வேறுபடுதலிற் புனைபவும் பூண்பவு மென்றார்.

கoக. கோமுறையன்றி - இராசநீதியன்றி.

கoஉ. படுபொருள் - புதையல்; களவுப்பொருளென்றுமாம்.

கoஎ. ஐயைகோயில் - மதுரையிற்றர்க்கைகோயில்.

---

(பி - ம்.) * 'குண்டைட்பார்ப்பீர்' † 'போமினென' ‡ 'பேர்' § 'தெக்கணன் றன்னை மிக்கென,' 'தக்கன்' ‖ 'அன்றியும்' ¶ 'கோட்டமிட்டனர்'

## உங.—கட்டுரை காதை.

ந0எ

* செய்வினைக் கதவந் திறவா தாகலிற்
றிறவா தடைத்த திண்ணிலைக் கதவ
ககம. மறவேன் மன்னவன் கேட்டனன் மயங்கிக்
கொடுங்†கோ லுண்டுகொல் கொற்றவைக் குற்ற
விடும்பை யாவது மறிந்தீ மின்னென
வேவ விளையவர் காவலற் றொழுது
வார்த்திகற் கொணர்ந்த ‡ வாய்மொழி யுரைப்ப
ககரு. நீர்த்தன் றிதுவென நெடுமொழி கூறி
யறியா மாக்களின் முறைநிலை திரிந்தவென்
னிறைமுறை பிழைத்தது பொறுத்தனுங் கடனெனத்
தடம்புனற் கழனித் தங்கா றன்னுடன்
மடங்கா விளையுள் வயலூர் நல்கிக்
கஉ0. கார்த்திகை கணவன் வார்த்திகன் முன்ன
ரிருநில மடந்தைக்குத் திருமார்பு நல்கியவ

டணியா வேட்கையுஞ் சிறிதுதணித் தனனே
நிலைகெழு கூட னீள்னெடு மறுகின்
மலைபுரை மாட மெங்கணுங் கேட்பக்
கஉரு. [1] கலையமர் செல்வி கதவந் திறந்தது

§ சிறைப்படு கோட்டஞ் சீமின் யாவதுங்
|| கறைப்படு மாக்கள் கறைவீடு செய்ம்மி
¶ னிடுபொரு ளாயினும் படுபொரு ளாயினு

ககரு. நெடுமொழிகூறி - புகழ்ந்துசொல்லி.

ககசா. வயலூர் - ஊரின்பெயர்.

ககஅ - கூ. இவன் பிறந்த தங்காலுடன் வயலூரென்பதோரூரும் விட்டு.

கஉக. திருமார்புநல்குகை - தண்டனிடுகை. அவனென்றது, நிலமடந்தையை. அவளைப்பணிந்தென்பார், இருநிலமடந்தைக்குத் திருமார்பு நல்கி யென்றார்.

கஉஉ. மார்பினைப்பெருமையால் தணியாதவேட்கை.

கஉஎ. கறை - கடமை.

கஉஅ. இடுபொருள் - பிறர்வரவிட்ட பொருள். படுபொருள் - புதையல்; அன்றித் தன்தேட்டத்தால் மிக்கபொருளுமாம்; [2] "படுபயன் வெஃகி" என்றாற்போல.

[1] 'கலைகாமுறுவி' பெருங். க. ருஉ: உச. [2] திருக்குறள், கஎஉ.

(பி - ம்.) * 'செய்வுழ' † 'கோல்கண்டுகொல்........உற்றதிடும்லபாவச மதிமி னின்றென' ‡ 'வாய்மொழியுரைப்பவதியாமக்களின்' § 'சிறைபட்டு' ¶ 'கறைபட்டு' P படு பொருளாயினு மிடுபொருள்'

முற்றவர்க் குறுதி பெற்றவர்க் காமென

கரு0. யானை யெருத்தத் தணிமுர சிரீஇக்
கோன்முறை யறைந்த கொற்ற வேந்தன்
றன்முறை பிழைத்த * தகுதியுங் கேணீ
[1] யாடித் திங்கட் பேரிருட் பக்கத்
[2] தழல்சேர் குட்டத் தட்டமி ஞான்று

கருரு. வெள்ளி வாரத் தொள்ளெரி யுண்ண
வுரைசான் மதுரையோ டரைசுகே

டுறுமெனு

முரையு † முண்டே நிரைதொடி யோயே
கடிபொழி லுடுத்த கலிங்கநன் னாட்டு
வடிவேற் றடக்கை வசுவுங் குமரனுந்

கசு0. தீம்புனற் பழனச் சிங்க புரத்தினுங்
காம்பெழு கானக் கபில புரத்தினு

‡ மரைசாள் செல்வத்து நிரைதார் வேந்தர்
வீயாத் திருவின் விழுக்குடிப் பிறந்த
தாய வேந்தர் தம்முட் பகையுற

கசரு. விருமுக் காவதத் திடைநிலத் தியாங்கணுஞ்
செருவெல் வென்றியிற் செல்வோ ரின்மையி
னரும்பொருள் வேட்கையிற் பெருங்கலன் சுமந்து
கரந்துறை மாக்களிற் காதலி § தன்னொடு

கஉகூ. உற்றவர்க்கு - எடுத்தார்க்குரித்து. பெற்றவர்க்கு - கொண்டவர்களுக்கு; அவ்விருவர்க்கும் உறுதி ஆமென்க.

ஆதலால், தமக்காகா; உற்றவர்க்குப் பெற்றவர்க்காமென்றறைவித்தான்.

கஙக. கோன்முறையறைந்த - இராசநீதியாகச்சொன்ன.

கஙங. பேரிருட்பக்கம் - கிருட்டினபக்கம்.

கஙச. அழல்சேர்குட்டம் - [கார்த்திகைபரணி.]

கஙஎ. உரை - சோதிடவார்த்தை; உரையுமுண்டென்றது, எதிரது தழீஇய எச்சவும்மை.

கஙகூ - சச. வசுவும் குமரனுமாகிய வேந்தரிருவர் தம்மில் தாயவேந்தர்.

தசரு. இருவரது மலைவு வெல்வென்றி யிகழுகை காரணமாகச் செல்வோரின்மையால்.

(கசஅ.) கரந்துறைமாக்களைப்போல (கசஎ) ஆபரணங்களைச்சுமந்து போந்து; போந்தென்றதொருசொல் வருவிக்க.

---

[1] தன். சூ. களகு - மயிலை, மேற். [2] "அழற்குட்டத்து" புறநா. உஉகூ.

(பி - ம்.) * 'தகுதிகேட்டிதீ' † 'உண்டுதிரை' ‡ 'உரைசால் செல்வத்து திரைதார்வேந்தன்வீயாச்சிறப்பின்' § 'தன்னுடன்பிங்கா'

## உங.—கட்டுரைகாதை.

நிலை

சிங்கா வண்புகழ்ச் சிங்க புரத்தினும்
கரு0. * ரங்கா டிப்பட் டருங்கலன் பகருஞ்
சங்கம னென்னும் வாணிகன் றன்னை

முந்தைப் பிறப்பிற் பைந்தொடி கணவன்
† வெந்திறல் வேந்தற்குக் கோத்தொழில் செய்வோன்
பரத னென்னும் பெயரனக் கோவலன்
கரு௫. விரத நீங்கிய வெறுப்பின னாதலி
னொற்ற னிவனெனப் பற்றினன் கொண்டு
வெற்றிவேன் மன்னற்குக் காட்டிக்
‡ கொல்வுழிக்
கொலைக்களப் பட்ட சங்கமன் மனைவி
நிலைக்களங் காணா ணீலி யென்போ
கசுo. ளரசர் முறையோ பரதர் முறையோ

ஊரீர் முறையோ சேரியீர் முறையோ வென
மன்றினு மறுகினுஞ் சென்றனள் பூசலிட்
டெழுநா ளிரட்டி யெல்லை சென்றபின்
றொழுநா ளிதுவெனத் தோன்ற வாழ்த்தி
கசு௫. மலைத்தலை § யேறியோர் மால்விசும் பேணியிற்
|| கொலைத்தலை மகனைக் கூடுபு நின்றோ

ளெம்முறு துயரஞ் செய்தோ ரியாவதுந்
தம்முறு துயரமிற் ¶ றாகுக வென்றே

கசக - ருo. சிங்கபுரத்தின் ஓரங்காடியிடத்தானுகியிருந்து.

கருஉ. பைந்தொடி, முன்னிலை.

கருச. புரதனென்றது, கோவலன்து முற்பெயர்.

கருரு. விரதநீங்கிய - கொல்லாவிரதத்தால் நீங்கிய. வெறுப்பினனுதலின்-வெறுக்கப்படுபவனுதலால்.

கசுரு. விசும்பேணியில் - விசும்பெல்லையில்; [1]"நளியிரு முந்நீ ரே ணி யாக" [என்றார்.

கசுசு. தலைமகனைக் கூடுவதாகநின்றவள்.

கசுஎ. செய்தோரென்னுமெழுவாய், படுவார்களாகவென்னும் வியங்கோள் வருவித்தலோடு முடிந்தது. யாவதும்- எப்படியானும்.

கசுஅ. தம்முறு துயரமிற்றுருக - தாங்களும் இப்படிப் படுவார்களாக. நான்பட்டதே படுகவென்றது, பழியிட்ட படியைக்கொண்டு.

(கசுரு) ஏறி (கசுக) விழுவோளென்க.

---

[1] புறநானூறு, ௩௫.

(பி - ம்.) * 'அங்காடிப்படவிருந்துகலன்' † 'வெந்தொழில்' ‡ 'கொல்வுழிநிச' § 'எறிமால்' || 'குலத்தலை' ¶ 'அருகவென'



விழுவோ ளிட்ட வழுவில் [1] சாபம்

கஎo. பட்டனி ராதலிற் கட்டுரை கேணீ

யும்மை வினைவந் துருத்த காலைச்

செம்மையி லோர்க்குச் செய்தவ முதவாது

[2] * வாரொலி கூந்தனின் மணமகன் றன்னை

யீரேழ் நாளகத் தெல்லை நீங்கி
௧௭௫. வானோர் தங்கள் வடிவி னல்லதை
யீனோர் † வடிவிற் காண்ட லில்லென
மதுரைமா தெய்வ மாபத் தினிக்கு
விதிமுறை சொல்லி யழல்வீடு கொண்டபின்
கருத்துறு கணவற் கண்டபி னல்லது
௧௮௰. திருத்தலு ‡ மில்லே னிற்றலு மிலனெனக்
கொற்றவை வாயிற் பொற்றொடி தகர்த்துக்

---

௧௭௧ - ௨. உம்மைவினை......யுதவாது - முமையிற்செவ்விய மனமில்லாதோர்க்கு அக்காலத்துச் செய்தவினை வந்து பலிக்குங்காலத்து முன்புசெய்த நல்வினை யாதும் உதவாது ; இத்தீவினைவந்து கெடுப்பதற்கு முன்னேவந்துத வுதல் பின்புதவுதல் செய்யுமித்தனை ; அந்நல்வினையும் உதவாமற்போகாது; பாவமானதும் தனியே அனுபவிக்கவேண்டும்.

௧௭௬-௮. ஈனோர்-ஈங்குள்ளோர். இல்லென்று மதுரைமாதெய்வம்சொல்ல.

௧௮௧. பொற்றொடி - பொலிவினையுடைய சங்குவளை ; துர்க்கைகோயில் வாயிலிலே தன்கைவளையைத் தகர்த்து.

---

[1] ௯௮ - ௬௯. இச்சாபவரலாற்றை இப்படியே மணிமேகலையில் வஞ்சி மாநகர்புக்க காதையிலும் மணிமேகலைக்குக் கண்ணகிகூறியதாகக் கூறினர்; அது வருமாறு:-'வேட்கை துரப்பக் கோட்டம் புகுந்து,வணங்கி நின்று குணம்பல வேத்தி, யற்புக்கட னில்லாது நற்றவம் படராது, கற்புக்கடன் பூண்டு நுங்கடன் முடித்த, தருளல் வேண்டுமென் றழுதுமுன் னிற்ப, வொருபெரும் பத்தினிக் கடவுளாங் குரைப்போ, னெம்மிறைக் குற்ற விடுக்கண் பொறாது, வெம்மையின் மதுரை வெவ்வழற் படு தாண், மதுரா பதியென்னு மாபெருந் தெய்வ, மிதுநீர் முன்செய் வினையின் பயனாற், காசில் பூம்பொழிற் கலிங்கநன் னாட்டுத், தாய மன்னவர் வசுவுங் குமரனுஞ், சிங்க புரமுஞ் செழுநீர்க் கபிலையு, மங்கா னின்றே ரடற்செரு வுறுநாண், மூவிரு காவத முன்னுந ரின்றி, யாவரும் வழங்கா விடத்திற் பொருள்வேட்டுப், பல்கலங் கொண்டு, பலரறி யாமல், லெல்வளை யாளோ டரிபுர மெய்திப், பண்டக் கலம்பகர் சங்கமன் றன்னைக், கண்டனர் கூறத் தையலின் கணவன், பார்த்திபன் றொழில்செயும் பரதனென் னுந்,தீத்தொழி லாளன் றெற்றெனப் பற்றி,யொற்ற னிவனென வுரைத்துமன் னற்குக்,

குற்றமி லோனைக் கொலைபுரிந் திட்டன, னங்கவன் மனைவி யழுதன ளரற்றி, யேங்கி மெய்பெயர்ப்போ ளிருவரை யேறி, யிட்ட சாபங் கட்டிய தாகு, மும்மை வினைவந் தருத்த லொழியா தெனு, மெய்ம்மைக் கிளவி விளம்பிய பின்னுஞ், சீற்றங் கொண்டு செழுநகர் சிதைத்தோன்" (இ-கச)

* ளஎக - கூ. மு: சிலப்பதிகாரம், பதிகம், இo - இக.

(பி - ம்.) * 'வாருறுகூந்தன்மணமகன்' † 'வடிவினிற்' ‡ 'இலவேபிறத்தலும்'

## உங.—கட்டுரை காதை.

ருகக

கீழ்த்திசை வாயிற் கணவனொடு புகுந்தேன்
மேற்றிசை வாயில் வறியேன் * பெயர்கென
விரவும் பகலு மயங்கினள் கையற்

கஅரு. றுரவுநீர் வையை யொருகரைக் கொண்டாங்
† கவல வென்னு ளவலித் திழிதலின்
‡ மிசைய வென்னுண் மிசைவைத் தேறலிற்
கடல்வயிறு கிழித்து மலைநெஞ்சு §

பிளந்தாங்

கவுணரைக் கடந்த சுடரிலை நெடுவே

௧௯௦. னெடுவேள் குன்ற மடிவைத் தேறிப்
பூத்த வேங்கைப் பொங்கர்க் கீழோர்
தீத்தொழி லாட்டியேன் யானென் றேங்கி
யெழுநா ளிரட்டி யெல்லை சென்றபின்
றெழுநா ளிதுவெனத் ‖ தோன்ற வாழ்த்திப்
௧௯௫. பீடுகெழு நங்கை பெரும்பெய ரேத்தி
வாடா மாமலர் மாரி பெய்தாங்
கமரர்க் கரசன் றமர்வந் ¶ தேத்தக்

---

௧௮௩. தமியேனாய்ப் பெயராநின்றேனெனச் சொல்லி.

௧௮௪. இரவும்பகலுமயங்கினள் - இரவும் பகலும் அறியாது மயங்கி.

௧௮௬. பதறியிழிதலாற் குழியென்று பார்க்கிலள்.

௧௯௦. நெடுவேள்குன்று - திருச்செங்கோடு. அடிவைத்தேறியென்றார், அதற்குமுன்பு வருத்தத்தாற் கால் நிலத்துப்பாவாமையால்.

௧௯௧. வேங்கையின்கீழே நின்றென்க.

௧௯௨. குறத்தியர்கேட்கத் தீத்தொழிலாட்டியேன் யானென்றுசொல்லி; ஏங்கியென்றது - சொல்லியென்றபடி.

௧௯௩. எழுநாளிரட்டி - வேங்கை நீழலினின்ற நாளளவு. எல்லையென்றது பகலை. அவணின்ற நாளளவு, அன்று பதினாலாநாளாயிற்று. பதினாலாநாள் பகற்பொழுது சென்றபினென்க; பதிகத்திலும் "ஈரேழ் நாளகத் தெல்லை" என்றார்.

௧௯௪-௭. அமரர்க்கரசன் தமர்வந்து, கண்ணகி தன்கணவனைத் தோன்ற

வாழ்த்தித் தொழுநாளிதுவெனக்கருதி இவள்பெயரைச்சொல்லி மலரைத்தூவி ஏத்தினர்; இவள்பெயர் மந்திரோத்தியாதலால்; இன்னும், கண்ணகி கோவலனைத் தோன்றவாழ்த்தி வானவூர்தியேறினளென்றுமாம்.

கக௬௪-க. பெரும்பெயரேத்திமலர்மாரிபெய்து தமர்வந்தேத்த வானவூர்தி யேறினளென்க.

---

[1] சிலப்பதிகாரம், பதிகம், ௬௧.

(பி - ம்.) * 'பெயர்வனென்று' † அவலென்னளவலத்திழிதவின்' ‡ 'மிசையர் மென்னுள்' § 'பிளந்தேயவுணரை' ‖ 'தொழுதுவாழ்த்தி' ¶ 'ஏத்தி'



கோநகர் பிழைத்த கோவலன் றன்னொடு
வான வூர்தி * யேறினண் மாதோ
௨௦௦. கானமர் புரிகுழற் கண்ணகி தானென்.

---

வெண்பா.

[1] தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்
தெய்வந் தொழுந்தகைமை † திண்ணிதாற்—‡ றெய்வமாய்
மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி
விண்ணகமா தர்க்கு விருந்து.



கட்டுரை.

* § முடிகெழு வேந்தர் மூவ ருள்ளும்
படைவிளங்கு தடக்கைப் பாண்டியர் குலத்தோ
ரறனு மறனு மாற்றலு மவர்தம்
* பழவிறன் மூதூர்ப் பண்புமேம் படுதலும்

ரு. விழவுமலி || சிறப்பும் விண்ணவர் வரவு
மொடியா வின்பத் தவருறை நாட்டுக்
குடியுங் கூழின் பெருக்கமு மவர்தம்
வையைப் பேரியாறு வளஞ்சுரந் தூட்டலும்
பொய்யா வானம் புதுப்பெயல் பொழிதலு

கo மாரபடி சாத்துவதி யென்றிரு விருத்தியு
நேரத் தோன்றும் வரியுங் குரவையு
** மென்றிவை யனைத்தும் பிறபொருள் வைப்போ
டொன்றித் தோன்றுந் †† தனிக்கோ ணிலைமையும்
வடவாரியர் ‡‡படைகடந்து

கரு தென்றமிழ்நாடொருங்குகாணப்
புரைதீர் கற்பிற் றேவி தன்னுட
னரைசு கட்டிலிற் §§ றுஞ்சிய பாண்டிய
னெடுஞ்செழியனோ டொரு பரிசா
நோக்கிக் கிடந்த

உo. மதுரைக் காண்ட முற்றிற்று.

---

இரண்டாவது மதுரைக்காண்டம் முற்றிற்று.

'தெய்வந்'—மண்ணகமாதர் - உலகத்துக் கற்புடைமகளிர். விண்ணக மாதர்க்கு விருந்தாளுள்; ஆதலால் தெய்வந்தொழுகை திண்ணிதென்க.

---

[1] குறள், ௫௫. [2] புறநானூறு, ௩௫. [3] "பழவிறன்மூதூர்" மணி. ௭: ௬௩.
(பி - ம்.) * 'ஏறினள்கானமர்' † 'திண்ணமாற்' ‡ 'தெய்வமா, மண்' § 'முடியுடை' || 'சிறப்பின் வானவர் வரவும் வையைப்பேரியாற்று' ** 'என்றிவ வனைத்தும்' †† 'தன்கோள்' ‡‡ 'படைதந்து' §§ 'துஞ்சிய நெடுஞ் செழியனொ டாருபரிச'.

# மூன்றாவது
# வஞ்சிக்காண்டம்.

## ௨௪.—
## [1] குன்றக்குரவை.

### [2] உரைப்பாட்டுமடை.

குருவியோப்பியுங் கிளிகடிந்துங் குன்றத்துச்சென்று *வைகி யருவியாடியுஞ் சுனைகுடைந்து † மலவுற்று வருவேமுன்
மலைவேங்கை நறுநிழலின் வள்ளிபோல்வீர் மனநடுங்க

முலையிழந்து ‡ வந்துநின்றீர் யாவிரோவென

முனியாதே

ரு. மணமதுரையோ டரசுகேடுற வல்வினைவந்

துருத்தகாலைக்

கணவனையங் கிழந்துபோந்த கடுவினையேன் யானென்று
ளென்றலு மிறைஞ்சியஞ்சி யிணைவளைக்கை யெதிர்கூப்பி
நின்ற § வெல்லையுள் வானவரு நெடுமாரி மலர்பொழிந்து
குன்றவருங் கண்டு‖நிற்பக் கொழுநனொடு கொண்டுபோயின
௧௦. ரிவள்போலு ¶ நங்குலக்கோ ரிருந்தெய்வ மில்லையாதலிற்

---

க. குன்றத்துச்சென்று தங்கிக்குரவியோப்பியுமென்க.

௩. வள்ளி - வல்லி; தங்கள் வள்ளியென்கின்ற பெண்ணுமாம்; என்றது, குமரவேள் தேவியை.

௪. நின்றீர், யாவிர் இவை உயர்த்துக் கூறினர். முனியாதே - அவர்கள் கேட்டதற்கு வெறாதே.

ரு. மணமதுரை [3] கலியாணமதுரை.

௯. போயினர், முற்று.

முன் தேவருடன் போனபடியை விரியக்கூறினது இது.

---

[1] குன்றக்குரவை: நற். உஎகு; அகநா. உகஉ; முருகு. ௧௯௬-எ; மதுரை. ௬௧௫; மலைபடு. ௩௨௦-௨௨; திருச்சிற். ௧௨௭.

[2]. உரைப்பாட்டுமடை - உரையாகிய பாட்டை இடையேயுடையது: சிலப்.

ப. சசக.

5. மணமதுரை - நறுமணத்தையுடைய மதுரையுமாம்; (சிலப். கங: கக்கி - கக பார்க்க); "நன்றவிழ் பன்மலர் நாற நறைபவிப்பத், தென்ற லசைவருஉஞ் செம்மற்றே யம்மதின், குன்றத்தாற் கூடல் வரவு" (பரி. அ.) மணமதுரையோடரசுகேறே; "ஒட் டேனரசோ டொழிப்பேன் மதுரையும்' சிலப். உக. கஎ.

(பி - ம்.) * 'வைகியுமருவி' † 'அலவுற்றும் வருவேம்' ‡ 'வந்தநின்ற நீரியாவிரோ' § 'எவ்விலயில்' || 'நிற்கவே கொழுநனொடுங்கொண்டு' ¶ 'நங்குலத்துக்கோரிரு'





* சிறுகுடியீரே சிறுகுடியீரே
தெய்வங்கொள்ளுமின் சிறுகுடியீரே
நிறங்கிள ரருவிப் பறம்பின் றூழ்வரை
நறுஞ்சினை வேங்கை நன்னிழற் கீழோர்
௧௫. தெய்வங் கொள்ளுமின் சிறுகுடி யீரே
தொண்டகந் தொடுமின் சிறுபறை தொடுமின்
[1] கோடுவாய் வைம்மின் கொடுமணி யியக்குமின்
[2] குறிஞ்சி பாடுமி னறும்புகை யெடுமின்
[3] பூப்பலி செய்ம்மின் காப்புக்கடை † நிறுமின்
௨௦. [4] பரவலும் பரவுமின் ‡ விரவுமலர் தூவுமி

ஒருமுலை யிழந்த நங்கைக்குப்
பெருமலை துஞ்சாது வளஞ்சுரக் கெனவே

கொளுச்சொல்

ஆங்கொன்று காணா யணியிழா யீங்கிதுகா
[5] ணஞ்சனப் பூழி யரிதாரத் தின்னிடியற்
சிந்துரச் சுண்ணஞ் செறியத்தூய்த் தேங்கமழ்ந்
திந்திர வில்லி னெழில்கொண் டிழுமென்று

---

௧௫. பறம்பின்றாழ்வரை-நெடுவேள்குன்றமாகிய பறம்பின் றாழ்வரையில்.
௧௪-௫. வேங்கைக்கீழ் ஒரு தெய்வமாகப் பண்ணிக்கொள்ளுமின்.
௧௬. தொடுத்தல் - வாசித்தல்.
௧௭. கோடு - கடமாக்கொம்பு. கொடுமணி - ஓசைகடிதான மணி.
௧௮. காப்பு-சுற்றுமதில் கடை-வாயில். சுற்றுமதிலிட்டுவாசலும்செய்ம்மின்
(௨௨.) வளந்துஞ்சாது சுரக்கவென்று (௨௧) நங்கைக்குச்...(௧௮) செய்ம்மினென்று முன்னே கூட்டுக.

கொளுச்சொலென்றது, மேற்சொல்லுகின்ற மூன்று பாட்டின் சொற்களைப் போதக்........இப்பாட்டின் கருத்தென்றுமாம்

"ஆங்கொன்று"—ஆங்கொன்று காணாயென்றது, அராகின்று. இட்டுச் சென்று, ஈங்கிதுவென்றாள். இதுவென்றாள், கண்ணகி அங்கேவந்தளவிலே மழைபெய்தலால் விழுகிற அருவியை. அவ்வருவி தூங்கக்கண்டு தங்களையணுக வந்தபடியே. ... ... ... செறிய - செறியாநிற்க. ஆடுதுமே: ஏகாரம்,

---

[1] "கோடுவாய் வைத்துக் கொடுமணி யியக்கி" முருகு. ௨௪௬.
[2] "நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி" முருகு. ௨௩௮.
[3] பூப்பலி: "மலர்ப்பலி தூஉய்", "பூப்பலிசெய்துகாப்புக்கடைநிறுத்தி" (சிலப். ௨௮: ௬, ௨௩௩); "பூப்பலிவிட்டகடவுளை" கலி. ௯௩.
[4] "பரவியுந் தொழுதும் விரவுமலர் தூயும்" குறிஞ்சி. ௬.
[5] "அஞ்சனத்திரளு மணியரி தாரமும்" சிலப். ௨௫ : ௪௦.
(பி-ம்) * 'சிறுகுடீரே' † 'திறத்துமின்' ‡ 'விரைமலர்'.

வந்தீங் கிழியு மலையருவி யாடுதுமே
யாடுதுமே தோழி யாடுதுமே தோழி
[1] யஞ்சலோம் பென்று நலனுண்டு
*நல்கா தான்
மஞ்சுசூழ் சோலை மலையருவி யாடுதுமே

எற்றொன்றுங் காணேம் புலத்த லவர்மலைக்
கற்றீண்டி வந்த புதுப்புனல்
கற்றீண்டி வந்த புதுப்புனன் மற்றையா
ருற்றாடி னோந்தோழி நெஞ்சன்றே

என்னொன்றுங் காணேம் புலத்த லவர்மலைப்
பொன்னாடி வந்த புதுப்புனல்
பொன்னாடி வந்த புதுப்புனன் மற்றையார்
முன்னாடி னோந்தோழி நெஞ்சன்றே

யாதொன்றுங் காணேம் புலத்த லவர்மலைப்
போதாடி வந்த புதுப்புனல்
போதாடி வந்த புதுப்புனன் மற்றையார்
மீதாடி னென்றோழி நெஞ்சன்றே

பாட்டுமடை

உரையினி மாதரா யுண்கண் சிவப்பப்
புரைதீர் புனல்குடைந் † தாடினோ மாயி

* னுரவுநீர் மாகொன்ற ‡ வேலேந்தி யேத்திக்
குரவை தொடுத்தொன்று § பாடுகம்வா தோழி

---

தேற்றம். அவன் கொடுமை கிடக்கச்செய்தேயும் அவனுடைய மலையருவியை ஆடவேண்டிற்றேயென்றாள். அஞ்சலோம்பு – அஞ்சுதலைப் பரிகரி.

"எற்றென்றும்"—.........................அவர் செய்த கொடுமையால் நாம் அவர்மலையின்வந்த புதுப்புனலோடு புலத்தற்குச்சிறிதும் காரணமில்லை. மற்றையாரென்றது, அருவி யாடுவோருள் தன்னையொழிய முன் அந்நீரிற் குளித்த மகளிரை. தனக்கு முற்படவாடினவரோடு நெஞ்சுதான் வேறுபட்டுப் புலத்தற்குக் காரணம் என்னென்றாள். அன்றேயென்றது, இசைநிறைக்கிளவி.

"என்னென்றும்"—எவனென்றும், விகாரம்.

'எற்றென்றும்' என்பதுமுதலாக மூன்றும் சிறைப்புறம்; தோழிக்குத் தலைமகள் சொல்லியது; முன்னிலைப்புறமொழியுமாம்.

"உரையினி"—உரையினி – இனிச்சொல்.

---

[1] "பெண்டிர் நலம்வௌவித் தண்சாரற் றாதுண்ணும், வண்டிற் றுறப்பான் மலை" கலி. ௪௦.

* "உரவுநீர் மாகொன்ற, வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார் கொல்" கலி. ௨௭.

(பி – ம்.) *'நல்காதார்' †'ஆடினம்' ‡'வேலேத்தி' § 'பாடுதும்யாம், பாட்டு, மடை சீர்கெழு'

சீர்கெழு [1] செந்திலுஞ் செங்கோடும் வெண்குன்று
[2] மேரகமு நீங்கா விறைவன்கை வேலன்றே
[3] பாரிரும் பௌவத்தி னுள்புக்குப் பண்டொருநாட்
சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே

அணிமுகங்க ளோரா று மீரா று கையு
* மிணையின்றித் தா னுடையா னேந்திய வேலன்றே.
பிணிமுகமேற் கொண்டவுணர் பீடழியும் வண்ண
மணிவிசும்பிற் கோனேத்த மா றட்ட வெள்வேலே

† [4] சரவணப்பூம் பள்ளியறைத் தாய்மா ரறுவர்
திருமுலைப்பா லுண்டான் றிருக்கைவே லன்றே
‡ வருதிகிரி கோலவுணன் மார்பம் பிளந்து
[5] குருகு பெயர்க்குன் றங் கொன் ற நெடுவேலே

---

"சீர்கெழு"—செந்தில் - திருச்சேந்தில். செங்கோடு - திருச்செங்கோடு. வெண்குன்றம் - சுவாமிமலை. ஏரகம் - ......சூர் மா - சூரனுகியமா. சுடரிலைய; அ, இடைச்சொல்; சுடரிலை வேல், இறைவன் வேலெனக.

"அணிமுகங்கள்"—இவ்வடிவு பிறர்க்கு இல்லாமையாற் பிறரொப்பில்லாதான். * பிணிமுகம் - மயில்.

"சரவண"—சரவணப்பூம்பள்ளியறை-சரவணப் பொய்கையில் தாமரையாகிய பள்ளியறை. அறுவர்-கார்த்திகையார். திகிரிகோலவுணன் - மலையைச் சூழவரும் அவுணன். பிளந்து - பிளக்க. குருகுபெயர்க்குன்றம் - கிரவுஞ்ச பருப்பதம். [பாரயது.

"சீர்கெழுசெந்தில்" முதலிய மூன்றும் வரைவுமுடிவதாகத் தெய்வம்

[1] "அலைவாய்ச் சேறலு நிலைஇய பண்பு" (முருகு. கஉரு); முருகன் நீம்புன லலை வாய்",("டையுண்மாலே"தொல். களவு. சூ. உக-ந. மேற்.)"திருமிகு விளக்கி னலைவாய்ச் செருமிகு சேய்" (அகநா. உசுசு); "வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தி, னெடுவே ணிலைஇய காமர் வியன்றுறை" (புறநா. ருரு); "நஞ்செந்தின்மேய வள்ளிமணளற்குத் தாதைகண்டாய்" (தே. மறைக்காடு)

[2] ஏரகம்: "ஏரகத் துறைதலு முரியன்" (முருகு. கஅக) என்றவிடத்து ஏரகம் - மலைநாட்டகத்ததொருதிருப்பதியென்றார், நச்சினார்க்கினியர்; பத்து. ப. சஉ - பார்க்க.

[3] "பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச், சூர்முத றடிந்த சுடரிலை நெடுவேல்" (முருகு. சுடு - சு); "பாயிரும் பனிக்கடல் பார்துகன் பட்டுபுக்கு" (பரி. ரு);"பார்முதிர் பனிக்கடல்" பாகவத. க: கருத்தமன். ருo.

[4] சரவணப்பூம்பள்ளி: "நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை,......அறு வர் பயந்த வாறமர் செல்வ" (முருகு. உருக - ரு); "கடவு ளொருமீன் சாலினி யொழிய, வறுவர் மற்றையோரும்......திலந்தோங் கிமயத்து நீலப் பைஞ்சுனைப், பயந்தோ ரென்ப பசுமத்துப் பாயல்" பரி. ரு.

[5] "குருகுபெயர்க் குன்றங் கொன்றன் மடவன்" (சிலப். உச); "குருகொடு பெ யர்பெற்ற மால்வரை யுடைத்து, மலையாற்றுப் படுத்த மூவிரு கயந்தலை" (பரி. ரு); "குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து" (முருகு. உசுசு); "குருகுபெயர்க் குன்றங் கொன்றோன்" (மணி. ரு: கக); "குருகுபெயர்க் குன்றத் துடல்பக வெறிந்த, நெடு வேற் கடவுட்கு" கல். "பொருப்புவளன்"

[6] 'பிணிமுக மஞ்ஞை செருமுகத் தேந்திய, மூவிரு திருமுகத் தொருவே லவற்கு" (கல். எ.)பிணிமுகம்-முருகக்கடவுள் ஊரும் யானையுமாம்; "சேயுயர் பிணிமுக மூர்ந்து" (பரி. ரு); "பிணிமுக வூர்தி யொண்செய் யோனும்" (புறநா. ருசு); "ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி" (முருகு. உசஎ);

(பி -ம்.) * 'இணையன்றி' † 'சரவணப் பள்ளியிசைத்தாய்மார்' ‡ 'வருதிகிரிபோ லவுணன் மார்பம்' 'திகிரியோனவுணன்'

## உச.—குன்றக்குரவை.

ருகள

பாட்டுமடை

இறைவளை நல்லா யிதுநகையா கின்றே
கறிவளர் தண்சிலம்பன் செய்தநோய் தீர்க்க

வறியாண்மற் றன்னை யலர்கடம்ப னென்றே
வெறியாட ளுன்விரும்பி வேலன்வரு கென்றாள் *

ஆய்வளை நல்லா யிதுநகை யாகின்றே
மாமலை வெற்பனோய் தீர்க்கவரும் [1] வேலன்
வருமாயின் வேலன் மடவ னவனிற்
குருகு பெயர்க்குன்றங் கொன்றான் மடவன்

செறிவளைக்கை நல்லா யிதுநகையா கின்றே
வெறிகமழ் வெற்பனோய் தீர்க்க வரும்வேலன்
வேலன் மடவ னவனினுந் தான்மடவ
[2] னலமர் செல்வன் புதல்வன் வருமாயின்

நேரிழை நல்லாய் நகையா மலை [3] நாடன்
மார்பு † தருவெங்நோய் தீர்க்க வரும்வேலன்
தீர்க்க வரும்வேலன் றன்னினுந் தான்மடவன்
[4] கார்க்கடப்பந் தாரெங் கடவுள் வருமாயின்

## பாட்டுமடை

வேலனார் வந்து வெறியாடும் வெங்களத்து
நீலப் பறவைமே னேரிழை தன்னோடு
மாலமர் செல்வன் புதல்வன் வரும்வந்தான்
[5] மால்வரை வெற்பன் மணவணி வேண்டுதுமே

'இறைவனை நல்லாய்' முதல், 'என்றியாம்பாட' இறுதி அறத்தொடுநிலை.

''செறிவனை''—வெறப்பனோய் - வெறபனுல்வந்த நோய்.

''வேலனூர்''—நீலப்பறவை - மயில்.

---

[1] ''வேலன் வேண்ட வெறிமனை வந்தோய், கடவு ளாயினு மாக, மடவைமன்ற வாழிய முருகே'' நற். ருச.

[2] ''ஆலமர் செல்வன் புதல்வன்வரும்'' (சிலப். உச); ''ஆலமர் செல்வ னணிசால் பெருவிறல்'', ''ஆலமர் செல்வ னணிசான் மகன்'' (கலி. அக, அரு); ''ஆல்கெழு கடவுட் புதல்வ'' (முருகு. உருக) ; ஆலமர் செல்வன் மகன்'' மணி. ரு : கசஅ.

[3] ''நாடன் மார்புதர வந்த படர்மலி யருநோய்'' நற். ருச.

[4] கார்க்கடப்பந்தார் - கார்காலத்திற்குரிய கடம்பின்மாலை : ''கார்கோண் முகந்த ......இருள்படப் பொதுளிய பராரை மராஅத், துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்'' முருகு. எ - கக) ''கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி......முருகே'' (நற். ருச); ''கார் நறுங் கடம்பின்......தெரியற், சூர்நவை முருகன்'' (புறநா. உரு); ''காரலர் கடம்பன்'' மணி. ச. சக.

[5] ''மாமலை வெறீபன் மணவணி வேண்டுதமே'' சிலப். உச; ''பாடுகெம்வா'' (பி - ம்.); * 'பாட்டுமடையாய்வனை' † 'தருநோய்தீர்'



கயிலைநன் மலையிறை மகனைநின் மதிநுதல்
மயிலியன் மடவரன் மலையர்தம் மகளார்

* செயலேய மலர்புரை திருவடி தொழுதே

மயன்மண மொழி † யரு ளவர்மண

மெனவே

மலேமகண் மகளின் மதிநுதன் மடவரல்

குலேமலே யுறைதரு குறவர்தம் மகளார்

நிலேயுயர் கடவுணின் னிணையடி தொழுதேம்

[1] பலரறி மணமவர் படுகுவ ரெனவே

குறமக ளவளெம குலமக ளவளொடு

மறுமுக வொருவநின் னடியிணை தொழுதேந்

[2] ‡ துறைமிசை நினதிரு திருவடி தொடுநர்

பெறுகநன் மணம்விடு பிழைமண மெனவே

பாட்டுமடை

[3] என்றியாம் பாட மறைநின்று கேட்டருளி

மன்றலங் கண்ணி மலேநாடன் போவான்முன்

சென்றே னவன்றன் றிருவடி கைதொழுது

நின்றே னுரைத்தது கேள்வாழி தோழி

"கயிலை"—மகனை: ஐ, இடைச்சொல். அயன்மணம் - பிராசாபத்தியம். ஒழி - இதனை விலக்குவாய்.

"மலைமகள்"—பலரறிமணமென்றார், இதற்குமுன்பு களவாதலால். படுகுவர் - உடன்படுகுவாராக. அவரென்றது தலைவனை.

"குறமகள்"—துறை - நீர்த்துறை; [4] "யாறுங்குளனும்" என்றாராதலின். நின் திருவடிதொடுநரென்றது, சூளுற்ற தலைவனை.

"என்றியாம்"—மறைநின்று - மறையச் சிறைப்புறமாகநின்று. சென்றேன் - சென்றுநின்றேன்; நின்றேன் - நின்றநான்.

---

[1] "நேரிறை முன்கைபற்றி நுமர்தர, நாடறி நன்மண மயர்கம்" (குறிஞ்சி. உஉக-உ); "பல்லாரறியப் பறையறைந்து நாட்கேட்டுக், கல்யாணஞ் செய்து" நாலடி. அகூ.

[2] "ஆலமுங்கடம்பு நல்யாற்று நடுவுங், கால்வழக் கறுநிலைக்குன்றமும் பிறவு, மவ்வவைமேய வேறுவேறு பெயரோ, யெவ்வயி னோயு நீயே" (பரி - ச); "துறையு மாலமுந் தொல்வலி மராமு, முறையுளி பராஅய்" (கலி - கoக.)

[3] "குன்றக்குரவையுள், 'சீர்கெழுசெந்தில்' என்னுந்தாழிசை முதற் பல அடுக்கி வந்து பின்னர், 'என்றியாம், பாட......கேட்டு' என்று அடக்கியற் பொருள்பெற்று முடிந்தவாறு காண்க." தொல். செய். சூ. கசஅ - ந.

[4] திருமுருகாற்றுப்படை, உஉச.

(பி - ம்.) * 'செயலைமென்' † 'அருள்பலர்மணம்' ‡ 'துறையுறையிசை நின்திருவடிதொழுமவர்பெறுக'

## உச.—குன்றக்குரவை.

கடம்பு சூடி யுடம்பிடி யேந்தி
மடந்தை பொருட்டால் * வருவ திவ்வூ
ரறுமுக மில்லை யணிமயி லில்லை
குறமக ளில்லை செறிதோ ளில்லை
கடம்பூண் டெய்வ மாக நேரார்
மடவர் மன்றவிச் சிறுகுடி யோரே

பாட்டுமடை.

என்றீங்
கலர்பாடு பெற்றமை யானுரைப்பக் கேட்டுப்
புலர்வாடு நெஞ்சம் † புறங்கொடுத்துப் போன
மலர்தலை வெற்பன் வரைவானும் போலு
முலையினான் மாமதுரை கோளிழைத்தாள் காதற்
றலைவனை வானோர் ‡ தமராருங் கூடிப்
பலர்தொழு பத்தினிக்குக் காட்டிக் கொடுத்த
நிலையொன்று பாடுதும் யாம்

[1] பாடுகம் வாவாழி தோழியாம் பாடுகம்
பாடுகம் வாவாழி தோழியாம் பாடுகங்
கோமுறை நீங்கக் கொடிமாடக் கூடலைத்
தீமுறை செய்தாளை யேத்தியாம் பாடுகந்
தீமுறை செய்தாளை யேத்தியாம் பாடுங்கால்
[2] மாமலை வெற்பன் மணவணி வேண்டுதுமே

"கடம்பு"—இப்படிச்சூடி ஏந்தி இவ்வூர் வருவது, தன்னை முருகனென்று கண்டார் கருதுதல்வேண்டி......இச்சிறுகுடியோர் தெய்வமாக உடன்பட்டார். ஆதலால், அறியார்; மடவர்-அறியார். அன்றி, இச்சிறுகுடியோராதலால்,...... சொல்லுமாறு: அறுமுகமில்லை; அணிமயிலில்லையென்று சொல்லுவார்களென்று வேறுகாட்டினாள்; தலைமகன் கடம்புசூடி உடம்பிடியேந்தித் தன்னைக் குமரனென்று பிறர்கருதவந்த காரணம், [3] "பண்டைத்தன் மணங்கமழ்தெய் வத்திளநலங் காட்டி" என்றாராதலால்.

"அலர்பாடு"—புலர்வாடுநெஞ்சம்-புலருநெஞ்சம். புறங்கொடுத்துப்போன-தன்பின்னே கிடக்கப்போன; ஒழியப்போனவென்றுமாம். தமராரும் கூடி-தமரெல்லாருங்கூடி. நிலை - தன்மை.

"பாடுகம்"—அத்தன்மையினை நாம் பாடுமிடத்து இதனை வேண்டிக் கொள்ளுவோமென்றார்.

---

[1] "பாடுகம் வாவாழி தோழி" கலி. ௪௧.
[2] "மால்வரை வெற்பன் மணவணி வேண்டுதுமே" சிலப். உ௪; "வேலனுர்வந்து"
[3] திருமுருகாற்றுப்படை, உ௯௬-௬0

(பி - ம்.) * 'வருவதிவ்வூர்க்கடம்பூண்......குடியோரே யறுமுகமில்லையணி...... லில்லை' † 'புறக்கொடுத்து' ‡ 'தமராகக்கூட்டிப்'

பாடுற்றுப்
பத்தினிப் பெண்டிர் பரவித் தொழுவாளோர்
பைத்தர வல்குனம் பைம்புனத் துள்ளாளே
பைத்தர வல்குல் கணவனை வானோர்க
ளுய்த்துக் * கொடுத்து முறையோ வொழியாரே
வானக வாழ்கை யமரர் தொழுதேத்தக்
† கான நறுவேங்கைக் கீழாளோர் காரிகையே
கான நறுவேங்கைக் கீழாள் கணவனொடும்
வானக வாழ்க்கை ‡ மறுதரவோ வில்லாளே

மறுதர வில்லாளை யேத்திநாம் பாடப்
[1] பெறுகதில் லம்ம § விவ்வூரு மோர்பெற்றி
பெற்றி யுடையதே பெற்றி யுடையதே
பொற்றொடி மாதர் கணவன் மணங்காணப்
பெற்றி யுடையதிவ் வூர்

என்றியாங்
கொண்டு நிலைபாடி யாடுங் குரவையைக்

கண்டுநங் காதலர் || கைவந் தாரானா
துண்டு மகிழ்ந்தானா வைகலும் வாழியர்
வில்லெழுதிய விமயத்தொடு
[2] கொல்லி யாண்ட [3] குடவர் கோவே.

## உச.—குன்றக்குரவை

முற்றிற்று.

---

பாடெற்று - பெருமையுற்று.

"பத்தினி"—வானோர் கொடுத்தபின்பும் அவளைப் புகழலொழியார்.

"மறுதரவு"— மறுதரவு-மீட்சி. இவ்வூரும் ஒருவிரதம்பெறுக. தணவன் மணம் - வரைவு.

"கொண்டுநிலை"—[4] கொண்டுநிலை-பொருளைக் கொண்டுநிற்குநிலை. கைவந்தார் - அவன் பிரசாதத்தாலே நம்வழியிலே புகுந்தார். உண்டு - வீரபானத்தையுண்டு. ஆனவைகளெல்லாம் வாழ்வானாக.

இவ்வுறுப்புக்களையுடைய கொச்சகப்பாத் தலைமகட்குத் தோழிவரைவு கூறியது.

---

[1] "பெறுகதில்லம்மயானே" குறுந். கஎ.

[2] "கொல்லிப் பொருந" (பதிற். எங); "முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி, செல்லா நல்லிசை நிறுத்த வல்வில், லோரிக் கொன்று சேரலற் கீத்த, செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி" (அகநா - உ0க), "ஓங்கு கொல்லியோ ரடுபொருந" (புறநா. உஉ) என்பவற்றால் கொல்லிமலை சேரபரம்பரையினர்க்குரித்தாதல்காண்க.

[3] "குடவர் கோவே கொடித்தேரண்ணல்" பதிற். ருகு.

[4] கொண்டுநிலை - ஒருவகைச் செய்யுளென்பர்; "குரவை தழீஇயா மாடுங் குரவையுட், கொண்டுநிலை பாடிக்காண்" (கலி. நக.) என்பதன் உரையைப்பார்க்க.

(பி - ம்.) * 'கொடுத்தவுரை' † 'கானனறு' ‡ 'மறுதரவோ' § 'இவ்வூர் பெற்றியுடையதே' ‖ 'கைவந்தா, ருண்டு'

# இருபத்தைந்தாவது

# காட்சிக்காதை.



[1] மாநீர் வேலிக் கடம்பெறிந் [2] திமயத்து
வானவர் மருள மலைவிற் பூட்டிய
வானவர் தோன்றல் வாய்வாட் கோதை
விளங்கில வந்தி வெள்ளி மாடத்
௫ [3] திளங்கோ வேண்மா ளுடனிருந் தருளித்

[4] துஞ்சா முழவி னருவி யொலிக்கும்

மஞ்சுசூழ் சோலை மலைகாண் குவமெனப்
* பைந்தொடி யாயமொடு பரந்தொருங் கீண்டி
[5] வஞ்சி முற்ற நீங்கிச் செல்வோன்
௰ வளமலர்ப் பூம்பொழில் வானவர் மகளிரொடு
விளையாட்டு விரும்பிய விறல்வேல் வானவன்
பொலம்பூங் காவும் புனல்யாற்றுப் பரப்பு

---

௧. மாநீர் வேலிக் கடம்பு - இருண்டநீரை வேலியாகவுடைய கடம்பு.
௨. இலவந்தி - நீராவி.

௫. இளங்கோவேண்மாள் - பெயர் ; 'நன்னன்வேண்மாள், உதியன் வேண்மாள்' என்பனபோல; வேண்மாளுடனிருந்து, இளங்கோவை அருளிப்பாடிட் டென்றுமாம்.

---

[1]. கடம்பெறிந்தமை: "வலம்படு முரசிற் சேர லாதன், முந்நீ ரோட்டிக் கடம் பறுத் திமையத்து, முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து", "சால்பெருந் தானைச் சேரலாதன், மால்கட லோட்டிக் கடம்பறுத் தியற்றிய, பண்ணமைமுரசு" (அகநா. ௧௨௭, ௩௪௭); "பலர் மொசித் தோம்பிய திரள்பூங் கடம்பின், கடியுடை முழுமுத

றமிய வேஎய், வென்றெறி...சேர லாத", "அரசுதலை பனிப்பக், கடம்புமுத றடிந்த கடுஞ்சின வேந்தே", "மாக்கட ணீக்கிக், கடம்பறுத் தியற்றிய, வலம்படு வியன்பணை... தொடித்தோளியவ", "இருமுந்நீர்த் துருத்தியுள், முரணியோர்த் தலைச்சென்று, கடம்புமுத றடிந்த கடுஞ்சின முன்பி, னெடுஞ்சேர லாதன்" (பதிற். கக, கஉ, கஎ, உo)

[2]. இமயத்து விற்பொறித்தவை: "விற்றலைக் கொண்ட வியன்பே ரிமயத்து" (சிலப். உரு: கக அ); 'இமயம் விற்பொறித்து" (பதிற். உ-ஆம் பத்துப்பதிகம்) "ஆரிய ரலறத் தாக்கிப் பேரிசைத், தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து, வெஞ் சின வேந்தரைப் பிணித்தோன் வஞ்சி" (அகநா. கூகசு.)

[3]. "வதுவை வேண்மாண் மங்கல மடந்தை" சிலப். உஅ: ருக.

[4]. "முழவின்னிசைமுரிமுழங்கருவி" சீவக. கககூ

[5]. "வளர்ந்தலைமயங்கிய வஞ்சி முற்றம்" சிலப். உரு: கச.

(பி - ம்) * 'பஞ்சடியாயமொடு'





## சி ல ப் ப தி கா ர ம்

மிலங்குநீர்த் துருத்தியு மிளமரக் காவு
மரங்கும் பள்ளியு மொருங்குடன் பரப்பி
கரு யொருநூற்று நாற்பதி யோசனை * விரிந்த
பெருமால் களிற்றுப் பெயர்வோன்
போன்று
கோங்கம் வேங்கை தூங்கிணர்க்

கொன்றை

நாகந் திலக நறுங்கா ழார

† முதிர்பூம் பரப்பி னொழுகுபுன

லொளித்து

௨0 மதுகர ஞிமிறொடு வண்டினம் ‡ பாட

[1] நெடியோன் மார்பி லாரம் § போன்று

பெருமலை விலங்கிய பேரியாற்

றடைகரை

யிடுமணலெக்க ரியைந்தொருங் கிருப்பக்

குன்றக்

குரவையொடு கொடிச்சியர் பாடலும்

௨௫ வென்றிச் செவ்வேள் வேலன் பாணியுந்

தினைக்குறு வள்ளையும் புனத்தெழு விளியு

நறவுக்கண் ணுடைத்த குறவ ||

ரோதையும்

[2] பறையிசை யருவிப் பயங்கெழு

மோதையும்

புலியொடு பொரூஉம் புகர்முக

வோதையுங்

௩0 [3] கலிகெழு மீமிசைச் சேணோ னோதையும்

(௬) செங்குட்டுவன் (எ) மலைகாண்குவமென்றுசொல்லி (கக) இந்திரன் (கசு) பெயர்வோன்போன்று.

கஉ - கூ. பூங்காமுதலாளவற்றை யானைமேலுளவாகநிருமித்து.
(கசு) களிற்றிலே (கஉ - ச) இவற்றைப் பரப்பி (கசு) பெயர்வோனெனக.
(கஅ) கோங்கமுதலியனவுதிர்ந்த (கக) பூம்பரப்பாற் புனல் ஒளித்து.
உஉ. மலையைவிலங்கியயாறு ; பேர்யாறு; இஃது ஓர்யாற்றின்பெயர்.
உ௬. எக்கர் - எக்கரிடத்து. இயைந்தொருங்கிருப்ப- மூவருங்கூடியிருப்ப.
உ௫. செவ்வேள் வேலன் - செவ்வேளுடைய வேலன் ; வேலன் - படி
௬௰. சேஞேன் - பரணின்மேலோன். [மத்தான்.

---

¹. "மாயோன்மார்பி னாரம் போல" தொல். செய். சூ. ௧௫, எஅ-பேர். மேற்.
². "பறையிசை யருவி முள்ளூர்ப் பொருந", "பறையிசை யருவி நன்னாட்டுப் பொருந". (புறநா. கஉகூ, உஉக); "பறைக்குர லருவி" பதிற். எ௦.
³. "கவிகெழுமாமிசைச்சேஞேன்" குறிஞ்சி. ச௦

(பி - ம்.) *"விலங்கு பருமாற் களிற்றிற் பெயர்வோன்' † 'முதுபூஞ்செம்மலி லொழுகுபுனல்' ‡ 'ஆர்ப்ப' § 'போலப்' ‖ 'ஓதையும் புவியொடு'

## உ௫.—காட்சிக்காதை.

௫உ௬

பயம்பில்வீழ் யானைப் பாக ரோதையு
மியங்குபடை யரவமோ டியாங்கணு

மொலிப்ப

வளர்துகடை யறியா வருங்கலஞ் சுமந்து
வளர்தலை மயங்கிய வஞ்சி * முற்றத்

௩௫. திறைமகன் செவ்வி யாங்கணும் பெறாது
திறைசுமந்து † நிற்குந் தெவ்வர் போல
யானைவெண் கோடு மகிலின் குப்பையு
மான்மயிர்க் கவரியு மதுவின் குடங்களுஞ்
சந்தனக் குறையுஞ் சிந்துரக் கட்டியு

௪0. [1] மஞ்சனத் திரளு மணியரி தாரமு
மேலவல்லியு மிருங்கறி வல்லியுங்
[2] ‡ கூவை நூறுங் கொழுங்கொடிக் கவலையுந்
§ தெங்கின் பழனுந் தேமாங் கனியும்
[3] பைங்கொடிப் படலையும் பலவின் பழங்களுங்

௪௫. காயமுங் கரும்பும் பூமலி கொடியுங்
|| கொழுந்தாட் கமுகின் செழுங்குலைத் தாறும்
பெருங்குலை வாழையி னிருங்கனித் தாறு
மாளியி னணங்கு மரியின் குருளையும்
வாள்வரிப் பறழு மதகரிக் களபமுங்

௩க. பயம்பு - யானையைப்படுக்குங்குழி. ௩௨. ஒலிப்ப - ஒலியாநிற்க.

௩௩. 'அளந்துகடை யறியா' என்பது முதல் திறையிடுவார்க்கு அடை.

௩அ. மான்மயிராகிய வெண்சாமரை. மதுவின்குடம் - தேன்குடம்.

சஉ. கூவை நூறு - கூவைக்கிழங்கினீறு.

சச. பைங்கொடிப்படலை - பச்சிலைமாலை.

சடு. காயம் - வெள்ளுள்ளி. பூமலிகொடி - பூங்கொடி.

சஅ. அணங்கு - குட்டி.

சகூ. வாள்வரி - புலி. கரிக்களபம் - யானைக்கன்று.

---

[1]. "அஞ்சனப் பூழி யரிதாரத் தின்னிடியல்" சிலப். உச. "ஆங்கொன்று";—

[2]. "நாறுடு குழீஇயின கூவை" (மலைபடு. ககள); "பாவை யிஞ்சியுங் கூவைச் சுண்ணமும்" பெருங். க. ருக: உகூ.

[3]. "பைங்கொடி—பச்சிலைக்கொடி; எல்லாவற்றிலும் பசுத்திருத்தலிற் பச்சிலை யென்று பெயர் பெற்றது; பச்சிலையென்றது சினைவினை முதன்மேலேற்றிப் பைங் கொடி யென்றார்" (முருகு. ககூ௦-த) என்பது ஈண்டு அறியற்பாலது.

(பி - ம்.) * 'மன்றத்து' † 'நிற்குமன்னர்' ‡ 'கூவைநீறும்', 'கூலிக்கிழங்குங்கொடி' 'தெங்கம்பழனும்' || 'கருந்தாட்கமுகின்'



௫௦. குரங்கின் குட்டியுங் [1] குடாவடி யுளியமும்

[2] வரையாடு வருடையு மடமான் மறியுங்
காசறைக் கருவு மாசறு நகுலமும்
பீலி மஞ்ஞையு நாவியின் பிள்ளையுங்
கானக் கோழியுந் * தேன்மொழிக்
கிள்ளையு

ருரு. [3] மலைமிசை மாக்க டலைமிசைக் கொண்டாங்
[4] கேழ்பிறப்
படியேம் வாழ்கநின் கொற்றங்
கான வேங்கைக் கீழோர் காரிகை
தான்முலை யிழந்து தனித்துய ரெய்தி
வானவர் போற்ற † மன்னொடுங் கூடி

கூ0. வானவர் போற்ற வானகம் பெற்றனை
ளெந்நாட் டாள்கொல் யார்மகள்
கொல்லோ
நின்னாட் டியாங்க ணினைப்பினு மறியேம்
பன்னூ றாயிரத் தாண்டுவா ழியரென

௫0. குடாவடியுளியம் - பிள்ளைக்கரடி; திசைச்சொல்; கரடிக்குட்டி.
௫௨. காசறைக்கரு - கத்தூரிக்குட்டி. ௫௩. மன் - கணவன்.

¹. குடாவடி—வளைந்த அடிகளையுடையது; மலைபடு. ௫0௧-ந.

². வரையாடுவருடை-மலையிற் பாய்ந்து விளையாடுகின்ற வருடைமான்; "சிலம்பு பாய்வருடையொடு", "குன்றின்மேல்வருடை பாய்ந்துழக்கவின்" (சீவக. ௬௨௩௮, ௬௮௩௩); வருடைக்குக் கால்கள் முதுகிலுமுள்ளனவென்றும் கால்கள் எட்டென்றும் வேறு நூல்களால் தெரிகின்றன; "பீமிசைக் கொண்ட கவர்பரிக் கொடுந்தாள், வரை வாழ் வருடை வன்றலை மாத்தகர்" (மலைபடு. ௫0௨-௩) என்பதனுரையின் அடிக்குறிப்பைப் பார்க்க; "எட்டுக் காலுடையன வருடை; ஆறுகாலுடையன கழிப்பாம்பு" நீல. தரும. செய். ௩௮-உரை.

³. ௫௫-௬0. சிலப்பதிகாரம், பதி. ௬-௮.

⁴. ௪௭-௫௩. "குழிப்படு வேழக் கூன்மருப் பிரட்டையும், வரைப்படு தேனுஞ் சினைப்படு கனியும், வீணைத் தண்டும் வேய்படு முத்தும், கானத் தகிலு மேனத் தெறியும், பொறிப்புலித் தோலு மறுப்பிய அரக்கும், மந்திப் பிணையொடு மற்றவை பிறவுந், தந்திறை தந்து முந்து சிறைப் பட்ட, வற்ற காலத்த முற்ற நோக்கி, படியுறை செய் தொழிற் குடிமுதல் பிழைத்த, விருநிலம் பெயரினு மெம்மாட் டிலவெனப், பெருமகன் றமரொடு தெளிவனர் தேற்றி" பெருங். ௧. ௫௮: ௮௩-௯௯; மலைபடுகடாம், ௫00-ஆம் அடி முதலியனவும் இத்தப் பகுதியை ஒத்துள்ளன.

(பி - ம்.) * 'தேமொழி' † 'தன்மகிழநனெடுகேடின வென்னுட்டாள்', 'கூடிப் போயினளெந்நாட்'

௨௫.—காட்சிக் காதை.

சுகு. [1] கண்களி மயக்கத்துக் காதலோ டிருந்த
[2] தண்டமி ழாசான் சாத்தனிஃ துரைக்கு

மொண்டொடி மாதர்க் குற்றதை யெல்லாந்
திண்டிறல் வேந்தே செப்பக் கேளாய்
[3] தீவினைச் சிலம்பு காரண மாக

எo. வாய்தொடி யரிவை கணவற் குற்றதும்
வலம்படு தானை மன்னன் முன்னர்ச்
சிலம்பொடு சென்ற சேயிழை வழக்குஞ்
செஞ்சிலம் பெறிந்து தேவி முன்னர்

வஞ்சினஞ் சாற்றிய மாபெரும் பத்தினி
எரு. யஞ்சி லோதி யறிகெனப் பெயர்ந்து
முதிரா முலைமுகத் தெழுந்த தீயின்
மதுரை மூதூர் மாநகர் சுட்டது
[4] மரிமா னேந்திய வமளிமிசை யிருந்த
திருவீழ் மார்பிற் றென்னர் கோமான்
அo. [5] றயங்கிணர்க் கோதை தன்றுயர் பொறாஅன்
மயங்கினன் கொல்லென மலரடி வருடித்
தலைத்தா ணெடுமொழி தன்செவி கேளாள்

---

சுகு. கண்களிமயக்கம் - கண்களித்தற்குக்காரணமான ஆச்சரியம்; மயக்

கம் - கண்டாரை மயக்கப்பண்ணுதல்.

சுசு - ரு. காண்டலின், விசாரமில்லேமென்று.

(சுக) வேடர்சொன்னவளவிலே (சுஎ) உற்றதையெல்லாம் (கக) ஒழிவின்று (சுசு) உரைக்குமென்க; உரைக்குமென்றது, முற்று.

சுக. தீவினைச்சிலம்பு - இவர் தீவினை பலித்தற்குக்காரணமான சிலம்பு.

(எ0) உற்றதும், (எக) வழக்கும், (எஎ) சுட்டதும் சொல்லியென் ஒரு சொல் வருவிக்க.

அ0 - அக. இணர்க்கோதை - கண்ணகி. பொருளுய்மயங்கினளே.

அஉ. தலைத்தாணெடுமொழி - கண்ணகிசொல்லிய வீரமொழி; மரித்த படியால், அவள்சொல்லியது முடியக்கேட்டிலள்.

---

[1]. "கண்களி கொள்ளுங் காட்சியை" சிலப். உசு: எக.

[2]. "அவலுழை யிருந்த தண்டமிழ்ச் சாத்தன்" சிலப். பதி. க0.

[3]. "சூழ்வினைச் சிலம்பு காரண மாக" சிலப். பதி. ருஅ.

[4]. "அரிமா னேந்திய வமளிமிசை யிருந்தனன், திருவீழ் மார்பிற் றென்னவர் கோவே" சிலப். உ0:உஉ-ரு.

[5]. "தயங்கிணர்க் கோதை" மணி: எ. க00.



கலக்கங் கொள்ளாள் * கடுந்துயர்
பெருஅண்

மன்னவன் [1] செல்வுழிச் செல்க யானெனத்

அரு. தன்னுயிர் கொண்டவ னுயிர்தே
டினள்போற்

[2] பெருங்கோப் பெண்டு மொருங்குடன் †

மாய்ந்தனள் . கொற்ற வேந்தன்
கொடுங்கோற் றன்மை
யிற்றெனக் காட்டி யிறைக்குரைப்
பனள்போற்
றன்னாட் டாங்கட் டனிமையிற் செல்லா
௬௦. ணின்னாட் டகவயி னடைந்தன ணங்கை ‡
யென்
றொழிவின் றுரைத்தீண் டூழி யூழி
[3] வழிவழிச் சிறக்கநின் வலம்படு
கொற்றமெனத்
தென்னர் கோமான் றீத்திறங் கேட்ட
மன்னர் கோமான் வருந்தின னுரைப்போ
௬௫. னெம்மோ ரன்ன § வேந்தற் குற்ற
செம்மையி ||
னிகந்தசொற் செவிப்புலம் படாமுன்
[4] னுயிர்பதிப் ¶ பெயர்த்தமை
யுறுக வீங்கென
[5] வல்வினை வளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோ லாக்கிய து

கலக்கங் கொள்ளாளென்றார், கடுகமரித்தாளென்றதுதோன்ற.

அஅ. இறை, முன்னிலைப்பெயர்.

௯௫. எம்மோரன்னவென்றது, உட்கோள்.

௯௫ - எ. பாண்டியனது உயிரை உடம்பினின்று நீக்கினமை இப்பொழுது கடுகச்சென்றுற வேண்டுமென.

௯௯. ஆக்கியது, முற்று.

---

[1]. மெய்யீற்று முன் உயிர்வருங்கால் உடம்படுமெய்யன்றெனப்படும் வகரம் தோன்றுமென்பதற்கு, 'செல்வுழிச் செல்க' என்பது மேற்கோள்; நன்-வி. சூ. ௧௬௯.

[2]. எஅ-அகூ. "காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி, யூதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா தின்னுயி ரீவர்......பத்தினிப் பெண்டிர்" (மணி. உ: ௪௨-அ) என்பது இவ் வடிகளுடன் ஒப்புநோக்கற்பாலது.

[3]. "வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றம்" மதுரை. ௧௯௪.

[4]. உயிர்பதிப் பெயர்த்தல் - உயிரை உடம்பினின்றும் நீக்குதல்; "உன்னு நோன்போ டுயிர்பதிப் பெயர்த்ததும்," (சிலப். உ௭: அ௧); "உன்னு நோன்போ டுயிர்பதிப் பெயர்ப்புழி" மணி. ௧௪: ௬௫.

[5]. ௬அ - ௬. "வல்வினை விழுக்கத் தயிராணி கொடுத்தாங், கிருநில மடந்தைக்குச் செங்கோல் காட்ட" சிலப். உஉ: ௪-௫.

(பி - ம்.) * 'கடுந்துயருறுன்மன்னன்' † 'அமர்ந்ததும்' ‡ 'எனவொழி' § 'வேந்தர்க்கிற்றெனச்' ‖ 'இழந்தகொல்செவி' ¶ 'பெயர்ந்தமை'

க00. மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்
பிழையுயி ரெய்திற் பெரும்பே ரச்சங்
குடிபுர வுண்டுங் கொடுங்கோ லஞ்சி
[1] மன்பதை காக்கு நன்குடிப் பிறத்த
றுன்ப மல்லது தொழுதக வில்லெனத்

க0ரு. துன்னிய துன்பங் * துணிந்துவந் துரைத்த
[2] நன்னூற் புலவற்கு நன்கன முரைத்தாங்
குயிருடன் சென்ற வொருமக டன்னினுஞ்
செயிருடன் வந்தவிச் சேயிழை தன்னினு
நன்னுதல் வியக்கு நலத்தோ ரியாரென

கக0. மன்னவ னுரைப்ப மாபெருந் தேவி
காதலன் றுன்பங் காணாது † கழிந்த
மாதரோ பெருந்திரு வுறுக ‡ வானகத்
தத்திற நிற்கநம் மகனா டடைந்தவிப்
பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டுமென

ககரு. மாலை வெண்குடை மன்னவன் விரும்பி

நூலறி புலவரை நோக்க வாங்கவ
ரொற்கா மரபிற் பொதியி லன்றியும்
[3] விற்றலைக் கொண்ட வியன்பே §
ரிமயத்துக்

---

[1] கOக. பிழையுயிரெய்தின் - உயிர்கள்
யாதானுமொன்றால் வருந்தின்.

கOடு. துன்னிய துன்பம் - கண்ணகிக்குத் துன்னிய துன்பத்தை.

கOச - டு. தொழுதகவில்லென வந்துரைத்த.

கOகூ. நன்னுதல், முன்னிலைப்பெயர். ககக. காதலன் - பாண்டியன்.

ககஉ - ச. மாதர் - அவன்தேவி; அவள் வானிலே திருவுறுக; அதுகூற வேண்டா; இவளைக்கொண்டாடவேண்டுமென்று தேவிசொல்ல.

ககசு. [4] நூலறிபுலவர் - அமைச்சர்.

ககஎ - உக. இமயக்கல்லுக்குக்கங்கை; பொதியிற்கல்லுக்குக் காவிரி.

---

[1] "ஒருமைந்தன் றன்குலத்துக் குள்ளானென் பதுமுணரான், றருமந்தன் வழிச் செல்கை கடனென்று தன்மைந்தன், மருமந்தன் றேராழி யுறவூர்ந்தான் மனுவேந்த, னருமந்த வரசாட்சி யரிதோமற் றெளிதோ தான்" பெரிய. திருவாரூர். சச.

[2]. நன்னூற்புலவன்—சாத்தனார்; மணிமேகலைநூலாசிரியர்.

[3]. "விற்றலைக் கொண்ட வியன்பே ரிமயத்தோர், கற்கொண்டு பெயருமெங் காவலன்" (சிலப். உடு:கஅகூ-ச); "கடவுட் பத்தினிக் கற்கோள் வேண்டி". பதிற். ௫-ஆம் பத்துப் பதிகம்.

[4]. "நூலவர்பாகமாக" ஞானா. மந்திர. எ.

(பி - ம்.) * 'துனைந்து' † 'காந்த' ‡ 'வானத்,' § 'இமயத்தங்'

கற்கால் கொள்ளினுங் கடவு * ளாகுங்
கஉ0. கங்கைப்பே ரியாற்றினுங் காவிரிப்
புனலினுந்
தங்கிய நீர்ப்படை தகவோ வுடைத்தெனப்
பொதியிற் குன்றத்துக் † கற்கால்
கொண்டு
முதுநீர்க் காவிரி முன்றுறைப் படுத்தன்
‡ மறத்தகை நெடுவா
ளெங்குடிப் பிறந்தோர்க்குச்
கஉ௫. சிறப்பொடு வரூஉஞ் §
செய்கையோ வன்று
புன்மயிர்ச் சடைமுடிப் [1] புலரா வுடுக்கை
முந்நூன் ‖ மார்பின் முத்தீச் செல்வத்
திருபிறப் பாளரொடு பெருமலை யரசன்

மடவதின் மாண்ட மாபெரும் பத்தினிக்

கரு0. ¶ கடவு ளெழுதவோர் கற்று ராளெனின்

வழிநின் று பயவா மாண்பில் வாழ்க்கை

[2] கழிந்தோ ரொழிந்தோர்க்குக் காட்டிய காஞ்சியு

முதுகுடிப் பிறந்த முதிராச் செல்வியை

மதிமுடிக் களித்த [3] மகட்பாற் காஞ்சியுந்

கருரு. தென்றிசை யென்றன் வஞ்சியொடு வடதிசை

[4] நின்றெதி ரூன்றிய நீள் [5] பெருங் காஞ்சியு

---

கஉஅ. இருபிறப்பாளர் - தேவவிருடிகள்.

கஉஅ - கூ0. பார்ப்பாருடனே மகட்டருதனுக்கி இருபிறப்பாளரோடு கல் தாரானுயினென்றான். கரு0. [6] எழுத - பண்ண.

கருக - உ. நிலைநின்று பயன்படாத வாழ்க்கையை மரித்தோர் இருந்தோர்க்குக் காட்டிய நிலையாமையும்.

கருச. மதிமுடி - தேவன். மகட்பாற் காஞ்சி - தான் இனியனுய்க்கொடுத்த காஞ்சியும். [தான்.

கருரு - சு. தென்றிசைக்கண்ணே மேற்செலவு. அவன் எதிரூன்றலையுயர்த்

---

1. "ஒன்பது கொண்ட மூன்றுப்புரி நுண்ஞாண், புலராக் காழகம் புலர வுடீஇ" முருகு. கஅக-ச.

2. "கழிந்தோ ரொழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்" (தொல். புறத்திணை. சூ. உச) என்பதையும் அதன் உரைகளையும் பார்க்க.

3. 'ஏந்திழையாட் டருகென்னும், வேந்தனொடு வேறுநின்றன்று' பு-வெ.ச:உச.

4. "எதிரூன்றல் காஞ்சி" : "வெட்சிநிரை கவர்தல்"—

5. "தாங்கு திறன்மறவர் தத்த மாற்றல், வீங்கு பெரும்படையின் வெளிப்படுத் தன்று" பு-வெ. ச:கு.

6. "கடவு ளெழுதவோர் கற்கே யாதலின்", "கடவு ளெழுதவோர் கற்கொண் டல்லது" (சிலப். உரு: கருகூ; உகூ: கச); "கந்துடை நெடுநிலைக் காரணங் காட்டிய, வந்தி லெழுதிய வற்புதம் பாவை" "கடவுளெழுதிய, வந்திற்பாவை"(மணி. எ: கஉச-ரு; கஇ: கக-ச.)

(பி - ம்.) * 'ஆகுமெனக்கல்லை' † 'கற்கொண்டுபெயர்ந்தமுது' ‡ 'மறத்தகு நெறி' § 'செப்பியோ' ‖ 'மார்பத்தழுந்தி' ¶ 'கடவுளாகவோர்'

# உரு.—காட்சிக்காதை.

ருஉ-சு

[1] நிலவுக்கதி ரனைந்த நீள்பெருஞ் சென்னி
யலர்மந் தாரமோ டாங்கயன் மலர்ந்த
வேங்கையொடு தொடுத்த விளங்குவிறன் மாலை
கசo. மேம்பட மலைதலுங் * காண்குவ லீங்கெனக்
[2] குடைநிலை வஞ்சியும் [3] கொற்ற வஞ்சியு
நெடு [4] மா ராய நிலைஇய வஞ்சியும்
வென்றோர் விளங்கிய வியன் [5] பெரு வஞ்சியும்
பின்றாச் சிறப்பிற் [6] பெருஞ்சோற்று † வஞ்சியுங்
கசரு. குன்றாச் சிறப்பிற் [7] கொற்ற வள்ளையும்
[8] வட்கர் போகிய வான்பனந் தோட்டுடன்

---

கஙஎ - சo. சென்னியிலே மந்தாரமாலையோடு வேங்கைப்பூ இடையிட்டுத் தொடுத்த மாலையைத் தான் சூடுகிற்கு மதுவுங் காண்பேன்; [அவையும் வெட்டுவனென்பதாம்.]

கசசு. வட்கர் போகிய - இடையில் மூரியில்லாத;

நேரார் போகைக்

குக் காரணமாகிய போந்தையென்றுமாம்.

[1]. "நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி." சிலப். ௨௬: ௬௪.

[2]. குடைநிலைவஞ்சி-குடைநாட்கோடல்; "பெய்தாமஞ் சுரும்பிமிரப் பெரும்புலவர் புகழ்பாடக், கொய்தார் மன்னவன் குடைநாட் கொண்டன்று" பு-வெ. ௩:௧.

[3]. கொற்றவஞ்சி-அரசனது வெற்றியின் மிகுதி; "வையகம் வணங்க வாளோச் சினனெனச், செய்கழல் வேந்தன் சீர்மிகுத் தன்று" பு-வெ. ௩ : ௭.

[4]. மாராயவஞ்சி-அரசனாற் சிறப்பெய்துநிலை; "மாராயம் பெற்ற நெடுமொழி யானும்" (தொல். புறத்திணை. சூ. ௮ - இளம். ந.) "மறவேந்தனிற் சிறப்பெய்திய, விறல்வேலோர் நிலையுரைத்தன்று" பு-வெ. ௩:௧௧.

[5]. பெருவஞ்சி - பகைவர்நாட்டைக்கொளுத்தல்; "முன்னடையார் வளநாட்டட்டப், பின்னருமுட்டன் றெரிகொளீஇயன்று" பு-வெ. ௩ : ௨௨.

[6]. பெருஞ்சோற்றுவஞ்சி - வீரர்களுக்குப் பெருஞ்சோறளித்தல்; "பிண்டமேய பெருஞ்சோற்று நிலையும்" (தொல். புறத்திணை. சூ. ௮ - இளம். ந); "திருந்தார் தெம்முனை தெறுகுவ ரிவரெனப், பெருஞ்சோ றுடவர் பெறுமுறை வகுத்தன்று" பு-வெ. ௩: ௨௩.

[7]. கொற்றவள்ளை - அரசன் பிரதாபத்தைக் கூறுவதுடன் பகைவர்நாடு அழிந்ததற்கு இரங்கல்; "குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளையும்" (தொல். புறத்திணை. சூ. ௮— இளம். ந); "மன்னவன் புகழ்கிளந், தொன்னார்நா டழிபிரங்கின்று" பு-வெ. ௩ : ௮.

[8]. (க) "வட்கர் போகிய வளரிளம் போந்தை" (புறநா. ௧௦௦.) (௨) ௧௪௬-௭. அரசர் தமக்குரிய அடையாளப் பூக்கள் முதலியவற்றுடன் புறத்திணைப் பூக்களையும் விரவித் தொடுப்பித்துத் தாம்சூட்டிக்கொள்ளுதலும், வீரர்க்குச் சூட்டுதலும் மரபு; இதனை, "பொலந்தோட்டுப் பைந்தும்பை, மிசையலங் குளைய பனைப்போழ் செரீஇ", "வேம்பே ரொண்டளிர், நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிலைந்து", "போந்தை, புச்சிக் கொண்ட பூசிவெண் டோட்டு, வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச், சுரிபிரும் பித்தை பொலியச் சூடி" (புறநா. ௨௨, ௭௭, ௧௦௦); "இளவரிக்கவட்டிலை யாரொடேர்பெறத், துளவியதும்பையுஞ் சுழியச்சூடினன்" (கம்ப. முதற்போர். ௧௧௯) என்பவற்றுலு முணர்க.

(பி - ம்.) * 'காண்குவ மீங்கெனக்கொடை' † 'வஞ்சியும்வட்கார்வான்பனைத் தோட்டுடன்பூட்கை'

௬௭

புட்கைச் சேனை பொலியச் சூட்டிப்
[1] பூவா வஞ்சிப் பொன்னகர்ப் புறத்தென்
வாய்வாள் மலைந்த வஞ்சிசூ டுதுமெனப்
௧௫௰. பல்யாண்டு வாழ்கநின் கொற்ற மீங்கென

வில்லவன் கோதை வேந்தற் குரைக்கு
நும்போல் வேந்தர் நும்மோ டிகலிக்
கொங்கர்செங் களத்துக் கொடுவரிக் கயற்கொடி
* பகைபுறத்துத் தந்தன ராயினு மாங்கவை
௧௫௫. திசைமுக வேழத்தின் செவியகம் † புக்கன
கொங்கணர் கலிங்கர் கொடுங்கரு நாடர்
‡ பங்களர் * கங்கர் பல்வேற் கட்டியர்
வடவா ரியரொடு வண்டமிழ் மயக்கத்துன்
கடமலை வேட்டமென் கட்புலம் பிரியாது
௧௬௰. கங்கைப் பேர்யாற்றுக் கடும்புன னீத்த

மெங்கோ மகளை யாட்டிய § வந்நா
ளாரிய மன்ன ரீரைஞ் ஞூற்றுவர்க்
கொருநீ யாகிய செருவெங் கோலங்
கண்விழித்துக் கண்டது கடுங்கட் கூற்ற

---

௧௪௭. பூட்கை - மேற்கோள்; புட்கை, விகாரம்.

(௧௪௧) 'குடைநிலைவஞ்சி' முதலாக, (௧௪௪) 'பெருஞ்சோற்றுவஞ்சி' ஈறாகத் தன்சேனைக்குச் (௧௪௭) சூட்டி.

௧௪௮. பூவாவஞ்சி - கருவூர்.

௧௫௰ - ௫௧. 'பல்யாண்டு வாழ்க' என்று இனிச் சொல்லுகின்றான், வில்லவன்கோதையென்னுமந்திரி.

௧௫௨. நும்மையொக்கும்வேந்தரென்றான், குலம்பற்றி.

௧௫௩ - ௫. புலிக்கொடியும் கயற்கொடியும் பகைக்களத்திலே உனக்குத் தந்து ஓடினாராயினும் அவை எங்கும் பரந்து திக்கயங்களின் செவியகம் புக்கன.

கடுஅ. தமிழ்ப்படைமயங்கிய செருக்களம்.

கடுகூ. கடமலை வேட்டமென் கட்புலம் பிரியாது - நீ நின்யானையை விட்டபடி என் கண்ணினின்றும் போகாது.

கசுக. எங்கோமகளென்றது, செங்குட்டுவன்மாதாவை; அவளை இவன் கொண்டுபோய்த் தீர்த்தமாட்டினதொருகதை.

கசுஉ - ச. ஆரியவரசராயிரவர்க்கு நீயொருவனுகச்செய்த போர்க்கோலங் கண்டது கூற்றமன்றே.

---

[1]. "பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி" (சிலப். உசு: ௫0); "பூவா வஞ்சியுந் தருகுவன்" (புறநா. கஉ); "பூத்த வஞ்சி பூவா வஞ்சியில்" மணி. உசு:எஅ.

[2]. கங்கர் கட்டியர் - தமிழ்நாட்டிலுள்ள ஒவ்வொரு சிற்றரசர் மரபினர்; "நன்னனேற்றை நறும்பூ ணத்தி, துன்னருங் கடுத்திறற் கங்கன் கட்டி" அகநா. சச.

(பி - ம்.) * 'டீலைட்புறத்து' † 'புக்கொளகொங்கர்' ‡ 'வங்களர்கங்கர்வல்வேற் § 'நன்னன்'

## உரு.—காட்சிக்காதை.

௫௩க

கஎரு. [1] மிமிழ்கடல் வேலியைத் தமிழ்நா டாக்கிய
[2] விதுநீ கருதினை * யாயி னேற்பவர்
முதுநீ ருலகின் முழுவது மில்லை
யிமய மால்வரைக் கெங்கோன் செல்வது
[3] கடவு ளெழுதவோர் கற்கே யாதலின்

கஎ0. வடதிசை மருங்கின் மன்னர்க் கெல்லாந்
தென்றமிழ் நன்னாட்டுச் செழுவிற் †

கயற்புலி

மண்டலை யேற்ற வரைக வீங்கென
நாவலந் தண்பொழி னண்ணு ரொற்றுநங்
காவல் வஞ்சிக் கடைமுகம் பிரியா

கஎரு. வம்பணி யானை வேந்த ரொற்றே
தஞ்செவிப் படுக்குந் தகைமைய வன்றே
வறைபறை யென்றே * யழும்பில்வே

ளுரைப்ப

* நிறையருந் தானை வேந்தனு நேர்ந்து
கூடார் வஞ்சிக் கூட்டுண்டு சிறந்த

கஅ0. வாடா வஞ்சி மாநகர் புக்கபின்

---

கசுஅ. செல்வது - செல்லுகிறபடியை.

கசுமு - எஉ. இமிழ்கடல்வேலியைத் தமிழ்நாடாக்கவேண்டி இமயத்தே கற்கால்கொளக்கருதின், ஏற்பார் யாரென்று அரசனுக்குச்சொல்லி ஓலையெழுதுகவென்றான்.

கஎக - உ. வில்லுக் கயல் புலி இவையிற்றினையுடைய இலச்சினைமண்

ணேற்ற ஓலைகளை மன்னர்க்கெல்லாம் வரைகவென.

மேல் அழும்பில்வேள் கூற்று:—

௧௭௬ - ௭. நண்ணார் வரவிட்ட ஒற்றுப் பிரியா; ஆகையாலே அவ்வொற்றே அரசர்செவிக்கு அறிவிக்குந்தன்மையையுடைய; வடதிசைக்குச்செலவு ஆனை மேல் இங்கே பறையறைய அடுக்குமென்றான். [பட்டு.

௧௭௮. பகைமேற்செல்பொழுது நிறுத்துதலரியதானை. நேர்ந்து - உடன்

௧௭௯ - ௮௦. வஞ்சிக்கூட்டு - எடுத்துச்செலவாற்கொண்டதிறை; அதனாற் பொலிவுபெற்ற கருவூரிலே திரியச்சென்று புக்கபின்.

அரசன் பேராற்றங்கரையினின்றும் போந்துபுக்கபினென்க.

---

1. சிலப். ௩: ௩௭; பதிற். ௨; பதி; மணி. ௧௭: ௬௨.

2. ௧௬௬-௭. "இதுநீ கண்ணிய தாயி னிருநிலத், தியார்கொ லளியா தாமே" புறநா. ௫௨.  3. மு: சிலப். ௨௬: ௧௫௪.

4. "அழும்பில் வேளோ டாயக் கணக்கரை" (சிலப். ௨௮: ௨௦௫); "பெரும்பூட் சென்னி, யழும்பி லன்ன வறுஅ யாணர்" (அகநா. ௪௪); "மான்விறல்வே, ளழும்பில்" மதுரை. ௩௪௪-௫.

5. 'திறையருந்தானையொடு" மணி. ௯. ௨௬.

(பி - ம்.) * 'ஆகவினைநிரப்பவர்' † 'கயல்புலிமண்டிலமொற்குவரு'



¹ வாழ்க வெங்கோ மன்னவர் பெருந்தகை
யூழிதொ றூழி யுலகங் * காக்கென
² விற்றலைக் கொண்ட வியன்பே ரிமயத்தோர்
கற்கொண்டு † பெயருமெங் காவல னாதலின்

கஅ௫. வடதிசை மருங்கின் மன்ன ரெல்லா
மிடுதிறை கொடுவந் தெதிரீ ராயிற்
[3] கடற்கடம் பெறிந்த கடும்போர்
வார்த்தையும்
விடர்ச்சிலை பொறித்த வியன்பெரு
வார்த்தையுங்
கேட்டு வாழுமின் கேளீ ராயிற்

கக0. றோட்டுணை துறக்குந் துறவொடு வாழுமின்
றாழ்கழன் மன்னன் றன்றிரு [†] மேனி
வாழ்க சேனு முகமென வாழ்த்தி
யிறையிக வியானை யெருத்தத் தேற்றி
யறைபறை யெழுந்தா லணிநகர் மருங்கென்.

---

கஅக. 'வாழ்க' என்றதுமுதல் பறையறைகின்றா வார்த்தை.

கஅச. எங்காவலன் பெயருமென்பதை மூற்றுக்கி, ஆதலினென்க.

கஅ௬ - க. எதிரேற்றுக் காணீராயின், கடலுட்புக்கும் மலையிலேறியும் உறைமினென்பார், இரண்டுவார்த்தையும் கேட்டுவாழுமினென்றார்.

[அவ்விடத்துப்படை அதன்புகழேயாதலான், அவ்விடங்களிற்செல்லாது ஈண்டே உறைமினென்பார், அரசன் போர்கருதினதிசையிற் போம்படியைக் கேளீராயினென்றார்.]

கக0. தோட்டுணை - மகளிர்; துறவு - தவம்.

கககக - உ. திருமேனியாகிய சேனுமுகம்; சேனுமுகம் அரசனுக்குச் சிறந்தமையின், 'திருமேனி' என்றார்.

கக௩. இறையிகவியானை - பட்டவர்த்தனம். கக௪. பறை - பறையொலி.

காட்சி - கற்கொள்ள மனத்தால் நிச்சயித்தல்.

௨௫—காட்சிக்காதை முற்றிற்று.

[1]. கஅக-உ. "வாழ்க வெங்கோ மன்னவர் பெருந்தகை, ஊழிதொ றூழிதொ றுலகங் காக்க", "வாழ்க வெங்கோ மன்னவர் பெருந்தகை, ஊழிதொ றூழி யுலகங் காக்கென", "ஊழிதொ றூழி யுலகங் காத்து, வாழ்க வெங்கோ வாழிய பெரிதென", "ஊழியோ ரேழி யுலகங் காத்து, நீவா ழியரோ" சிலப். கக: கூ-க; உரு: கஅக-உ; உஎ: ககசா-சo; உஅ: கஅரு-கூ.

[2]. "விற்றலைக் கொண்ட வியன்பே ரிமயத்துக், கற்றாற் கொள்ளினுங் கடவு ளாகும்" சிலப். உரு: ககஅ-கூ.

[3]. சிலப்பதிகாரம், உங: அக-உ; உஅ: கருரு-கூ.

(பி - ம்.) * 'காக்கவில்' † 'பெயருங்காவலன்' ‡ 'மேனியாயசேறு'

# இருபத்தாறுவது

# கால்கோட்காதை

த.



அறைபறை யெழுந்தபி னரிமா னேந்திய
முறைமுதற் கட்டி லிறைமக னேற
வாசான் பெருங்கணி யருந்திற லமைச்சர்
தானைத் தலைவர் தம்மொடு குழீஇ
ரு. மன்னர் மன்னன் வாழ்கென் றேத்தி

முன்னிய * திசையின் முறைமொழி கேட்ப
† வியம்படு தானை விறலோர்க் கெல்லா

முயர்ந்தோங்கு வெண்குடை யுரவோன் கூறு
[1] மிமையத் தாபத ரெமக்கீங் ‡ குணர்த்திய

௧௦. வமையா வாழ்க்கை யரைசர் வாய்மொழி

நம்பா § லொழிகுவ தாயி னாங்கஃ
தெம்போல் வேந்தர்க் கிகழ்ச்சியுந் தரூஉம்
வடதிசை மருங்கின் மன்னர் முடித்தலைக்

கடவு ளெழுதவோர் கற்கொண் டல்லது
௧௫. வறிது மீளுமென் வாய்வா ளாகிற்

|| செறிகழல் புனைந்த செருவெங் கோலத்துப்
* பகையரசு நடுக்காது பயங்கெழு வைப்பிற்

---

௭ - ௯. தானைத்தலைவர் தம்மொடு ஆசான் பெருங்கணி அருந்திறலமைச் சர்கூடி ஏத்திக் கேட்ப.

(எ) ஏவப்பட்ட தானைத்தலைவர்க்கெல்லாம் (அ) கூறுமென்க.

௯. தாபதர் - தீர்த்தமாட இமயத்தினின்றும் வந்த தாபதர்.

௧௦. அமையாவாழ்க்கை - நிரம்பாத உயிர்வாழ்க்கை; பலமில்லாத வாழ்க் கையெனினுமாம். அங்குள்ள ஆரியமன்னர் சொன்ன வார்த்தை.

௧௧ - ௨. நம்பால் ஒழிகுவதாயின் - அது நம்மிடத்தே கிடப்பதொரு வார்த்தையாயின்; [அவர்க்குப் பலியாது] நம்மிடத்தே கிடந்துவிடிற் சோழ, பாண்டியரிடத்தில் இகழ்ச்சியுந்தரும்.

¹. ௯-௧௫. "தென்றமிழ்நாடாளும் வேந்தர்........நங்கைதன்னை தீர்ப்படுத்தி வெஞ்சினந்தரு வெம்மைநீங்கி" சிலப். ௨௯: உரைப்பாட்டுமடை.

². ௧௭-௮. "பழியொடு படராப் பஞ்சவ வாழி", "படர்த்தெழு குருதி யட்டுங்கா" சிலப். ௨௦: ௩௩; ௨௯: ௧௨௭.

(பி - ம்.) * 'திசைமென்முறைமொழி' † 'வியன்படு' ‡ 'உரைத்தவமையா § 'ஒழிவதாயின்' ‖ 'செருக்கழல் புனைந்தசெரு'



¹ * குடிநடுக் குறாஉங் கோலே ஞெகன
வார்புனை தெரியலு மலர்தார் வேம்புஞ்
௨௦.
சீர்கெழு மணிமுடிக் கணிந்தோ ரல்லா
லஞ்சினர்க் களிக்கு மடுபோ ரண்ணனின்
வஞ்சினத் ததிரு மன்னரு முளரோ
விமைய வரம்பநின் னிகழ்ந்தோ ரல்ல
ரமைகநின் சினமென வாசான் கூற
௨௫. ² வாறிரு மதியினுங் காருக வடிப்பயின்
† றைந்து கேள்வியு மமைந்தோ னெழுந்து
வெந்திறல் வேந்தே வாழ்கநின் கொற்ற
மிருநில மருங்கின் மன்ன ‡ ரெல் லாநின்

திருமலர்த் தாமரைச் சேவடி பணியு

௩௦. முழுத்த மீங்கிது முன்னிய திசைமே
லெழுச்சிப் பாலை § யாகென் றேத்த
மீளா வென்றி வேந்தன் கேட்டு
[2] வாளுங் குடையும் வடதிசைப் பெயர்க்கென
வுரவுமண் சுமந்த வரவுத்தலை பனிப்பப்

---

கஅ. ஆகவென்று சொல்ல.

கக - உச. இமயவரம்ப! சோழபாண்டியரையல்லது நின்னை இகழ்ந்து கூறினரல்லர்; அடுபோரண்ணலே! நீ வஞ்சினங்கூறுதற்கு நின்னுடன் எதிர்க்கும் மன்னருமுளரோ; ஆதலால், நின்சினந்தணிகவென்றான்; இது புரோகிதன் வார்த்தை.

உடு. ஆறிருமதியினும் - இராசி பன்னிரண்டிலும். காருகவடி - கிரகநிலை.

உகூ. ஐந்து கேள்வி - திதி வாரம் நக்ஷத்திரம் யோகம் கரணம்; நட்பு ஆட்சி உச்சம் பகை நீசக்கோளுமாம். அமைந்தவன் - [4] மௌத்திகன்.

௩௦ - ௩க. இது [5] முழுத்தம்; எழும் பக்கத்தையாக வெனச் சொல்ல.

௩ச. உரவுமண் - உரத்தமண்.

---

[1]. 'சிலப்பதிகாரம், கக: உஅ-ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப்பார்க்க.

[2]. 'வாளுங் குடையு மயிர்க்கண் முரசு, நாளொடு பெயர்த்து', 'மறமிகு வாளு மாலை வெண் குடையும், புறநிலைக் கோட்டப் புரிசையிற் புகுத்தி" (சிலப். ௫: கூக - உ; உசு: சச-௫.) "குடைநாட்கொளல் வாணாட்கொளல் குறியாவத சவுண, னுடைநாளழி வதியாதவ னரனென்றிய வாழிப்,படைநாரணன் மகன்வெண்குடை பற்றக்குடை யேயா, படையாவமர் வுற்றாலன முடிமீக்குடை நிழல" தணிகை. சீபரி. சுக.

[3]. உ௫-௩க=முல்லைப்பாட்டு, ௫௫-அ

[4]. மௌகூர்த்திகன். [5]. முகூர்த்தம்; இது மூகிழ்த்தமெனவும் வழங்கும்.

(பி - ம்.) * 'குடிநடுக்குறக்குங்' † 'ஆறைந்து' ‡ 'எல்வாந்திரு'. § 'ஏகென்று'

கூடு. பொருந ரார்ப்பொடு முரசெழுந் * தொலிப்ப
விரவிடங் கெடுத்த † நிரைமணி விளக்கின்
விரவுக்கொடி யடுக்கத்து நிரயத் தானையோ
[1] டைம்பெருங் குழுவு மெண்பே ராயமும்
‡ வெம்பரி யானை வேந்தற் கோங்கிய

சரு. கரும வினைஞருங் கணக்கியல் வினைஞருந்
தரும வினைஞருந் தந்திர வினைஞரு
[2] மண்டிணி ஞால மாள்வோன் வாழ்கெனப்
பிண்ட முண்ணும் பெருங்களிற் றெருத்தின்
மறமிகு வாளு மாலைவெண் குடையும்

சரு. புறநிலைக் கோட்டப் புரிசையிற் புகுத்திப்
புரைதீர் [3] வஞ்சி போந்தையிற் றொடுப்போ
[4] னரைசுவிளங் கவைய § முறையிற் புகுதா

வரும்படைத் தானை யமர்வேட்டுக் கலித்த
பெரும்படைத் தலைவர்க்குப் * பெருஞ்சோறு வகுத்துப்
௬0. * பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி
வாய்வா ணெடுந்தகை மணிமுடிக் கணிந்து

---

௩௬. இரவிடக்கெடுத்த விளக்கிலேயென்றதி.....................விடுகிறபடி யாலே..........................

௩௭. [1] நிரயத்தானை - மாற்றார்க்கு நரக வேதனையைச் செய்யுந்தானை.

௪0. கருமவினைஞர் - புரோகிதர்.

௪௩. பிண்டமுண்ணும் பெருங்களிறு - ..............பிண்டத்துக்குரிய களிறு; பட்டவர்த்தனம்.

௪௫. புகுத்தி - புகவிட்டு. ௪௬. தொடிப்போன் - சேரன்.

---

[1] சிலப். ௫: ௧௫௪; மணி. ௧: ௧௪; பெருங். ௨: ௫. ௧௬; ௯௰ ௯௰ ௧௧, ௩; தொல். ஒலவி. ௬. ௩௭-௩. மேற்.

[2] "மண்டிலணிந்த நிலம்" புறநா. ௨.

[3] அரசர், தமக்குரிய அடையாளப்பூ முதலியவற்றேடு புறத்திணைக்குரிய பூ முதலியவற்றையும் விரவுவித்து அணிந்துகொள்ளுதல் மரபு: ௨௫-ஆம் காதையிலுள்ள, ௧௪௫-௬-ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க.

[4] "அரசுவிளங் கலையத்து" சிலப். ௨௩: ௧௫.

[5] சிலப். ௨௫: ௧௪௬ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க; "பெருஞ்சோறுகுத்தற் கெறியுங், கடுஞ்சின வேந்தே" பதிற். ௩௦.

[6] சிலப். ௨௫: ௧௪௮-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

[7] "நிரைய வொள்வா ளிளையர் பெருமகன்" (குறுந். ௨௫௮); "நிரைக்களி றொழு கிய நிரையவெள்ளம்" பதிற். ௧௫.

(பி - ம்.) * 'ஆர்ப்ப' † 'மாமணி' ‡ 'வெம்பரித்தானை வேந்தர்க்கு' § 'முறைமையிற்'

ஞாலங் காவலர் நாட்டிறை பயிருங்
[1] காலை முரசங் கடைமுகத் தெழுதலு
[2] நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி
௫௫. யுலகுபொதி யுருவத் [3] தயர்ந்தோன் சேவடி
மறஞ்சேர் வஞ்சி மாலை யொடு * புனைந்
திறைஞ்சாச் சென்னி யிறைஞ்சிவலங் கொண்டு
† மறையோ ரேந்திய வாவுதி நறும்புகை

நறைகெழு மாலையி னல்லகம் வருத்தக்
௬0. கடக்களி யானைப் பிடர்த்தலை யேறினன்

குடக்கோக் குட்டுவன் கொற்றங் கொள்கென
[4] வாடக மாடத் தறிதுயி ‡ லமர்ந்தோன்
சேடங் கொண்டு சிலர்நின் § றேத்தத்

தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்

௬௫. வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலி

னாங்கது வாங்கி யணிமணிப் புயத்துத்
தாங்கின னாகித் தகைமையிற் செல்வுழி
[1] நாடக மடந்தைய ராடரங் கியாங்கணுங்
கூடையிற் பொலிந்து கொற்ற வேந்தே

ருஉ - ௯. அரசரிடுந்திறையை அழைக்கும் முரசம்.

ருஅ. ஏந்திய - எடுத்த. புகை - அக்கினிகோத்திரம்.

ருஎ - அ. அக்கினிகோத்திரங்களையும் நமக்கரித்து.

௬௨. ஆடகமாடம் - திருவனந்தபுரம்; இரவிபுரமென்பாருமுளர்.

(௬௦) ஏறினன் (௬எ) தாங்கினனாகிச் செல்வுழி.

௬௬. கூடையிற் பொலிந்து-குவித்த கையுடனே பொலிந்து; கூடைக்கை-இரட்டை ஒற்றைக்கை.

---

1. சிலப்பதிகாரம், கஎ: ரு-௬ ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

2. "நிலவுக்கதி ரளைந்த நீள்பெருஞ் சென்னி" சிலப். உரு: ௧௬எ.

3. ருரு-எ. "பணியிய ரத்தைநின் குடையே முனிவர், முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே" புறநா. ௬.

4. "ஆடக மாடத் தரவணைக் கிடந்தோன்" (சிலப். ௩௦: ருக); 'ஆடகமாடம்' இறை. சூ. உ௬-மேற்.

5. "கழங்காடு மகளி ரோதை யாய்த்து, வழங்குதொடி முன்கை மலர வேந்தி, வானவன் வந்தான் வள்ளிலை வளமுலை, தோணல முணீஇய தும்பைப் போந்தையொடு, வஞ்சி பாடுது மடவீர் யாமெனு, மஞ்சொற் கிளவிய ரந்நீட் பாணியும்" சிலப், உஎ: உசரு-ரு௦.

(பி - ம்.) * 'பொருந்திவிலைறஞ்சாச்' † 'மறையோராக்கிய வாகுதி நறும்புகை நறைகெழுமாலைநல்லகம்' ‡ 'அமைந்தோன்' § 'ஏத்தநாடக் மடந்தையர்'

# உசு.—கால்கோட்காதை.

ருங்எ

எ௦. [1] வாகை தும்பை மணித்தோட்டுப் போந்தையோ

டோடை யானையி னுயர்முகத் தோங்க
வெண்குடை நீழலெம் வெள்வளை * கவர்ந்து
கண்களி கொள்ளுங் காட்சியை யாகென
* மாகதப் புலவரும் † வைதா ளிகருஞ்
எரு. சூதரு நல்வலந் தோன்ற வாழ்த்த
* யானை வீரரு மிவுளித் தலைவரும்
வாய்வாண் மறவரும் வாள்வல னேத்தத்
தானவர் தம்மேற் றம்பதி நீங்கும்
வானவன் போல வஞ்சி நீங்கித்
அ0. ‡ தண்டலைத் தலைவருந் தலைத்தார்ச் சேனையும்
* வெண்டலைப் § புணரியின் விளிம்புசூழ் போத
மலைமுதுகு நெளிய நிலைநா டதர்பட
வுலக மன்னவ னொருங்குடன் சென்றுங்
காலும் புரவி யணித்தேர்த் தானையொடு
அரு. நீல கிரியி னெடும்புறத் திறுத்தாங்
காடியல் யானையுந் தேரு மாவும்
பீடுகெழு மறவரும் பிறழாக் காப்பிற்

பாடி யிருக்கைப் பகல்வெய் யோன்ற
னிருநில மடந்தைக்குத் திருவடி யளித்தாங்

எ0 - எக. அரசர்சூடுவன யானைக்குஞ் சூட்டுதலின், வாகையும் தும்பை யும் போந்தையோடு நின்யானைமுகத்து ஓங்கித் தோன்றவென்றார்.

(கூஅ) நாடகமடந்தையர் (எரு) காட்சியை யுடையை யாகவென வாழ்த்தாநிற்க.

எ௫. நல்வலம் - களவெற்றி.

எஅ. தானவர் - அசுரர்.

அ0. தார் - தூசிப்படை. அக. கடற்கரை அருகே போத.

அ௫. நீலகிரி - ஒருமலை. அஅ. நடுவுநிலை விரும்புவோன்.

அஅ - கூ. சேரன் தானுள்ளநின்ற பூமிதேவிக்குத் திருவடியளித்து; அங்கே யானையினின்றிழிந்து கால்நிலந் தோயச்செய்தலால்.............................

[1]. "போந்தையொடு தொடுத்த பருவத்தும்பை", 'தோடார் போந்தை தும்பை யொடு முடித்து" சிலப். உசு: உ௧௧; உஎ: ௪௫.

[2]. "சூதர் மாகதர் வேதா ளிகரொடு" (சிலப். ௫: ௪அ); சூத ரேத்த மாகதர் நுவல, வேதா ளிகரொடு" மதுரை. கூஎ0-எக.

[3], எஎ. "வாண்மீக் கூற்றத்து வயவ ரேத்த" [illegible]

[4]. "வெண்டலைப் புணரி", "வெண்டலை [illegible]

உ௫ கக.

(பி - ம்.) * 'தவருங்கண்' † 'வேதாளியரு

§ 'புணரிவிசும்புசூழ்போக'

ஞாலங் காவலர் நாட்டிறை பயிருங்
[1] காலை முரசங் கடைமுகத் தெழுதலு
[2] நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி
௫௫. யுலகுபொதி யுருவத் [3] தயர்ந்தோன் சேவடி
மறஞ்சேர் வஞ்சி மாலை யொடு * புனைந்
திறைஞ்சாச் சென்னி யிறைஞ்சிவலங் கொண்டு
† மறையோ ரேந்திய வாவுதி நறும்புகை

நறைகெழு மாலையி னல்லகம் வருத்தக்
௬௦. கடக்களி யானைப் பிடர்த்தலை யேறினன்
குடக்கோக் குட்டுவன் கொற்றங் கொள்கென
[4] வாடக மாடத் தறிதுயி ‡ லமர்ந்தோன்
சேடங் கொண்டு சிலர்நின் § றேத்தத்

தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்
௬௫. வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலி

னாங்கது வாங்கி யணிமணிப் புயத்துத்
தாங்கின னாகித் தகைமையிற் செல்வுழி
[5] நாடக மடந்தைய ராடரங் கியாங்கணுங்
கூடையிற் பொலிந்து கொற்ற வேந்தே

௫உ - ௬. அரசரிடுந்திறையை அழைக்கும் முரசம்.

௫அ. ஏந்திய - எடுத்த. புகை - அக்கினிகோத்திரம்.

௫எ - அ. அக்கினிகோத்திரங்களையும் நமக்கரித்து.

௬உ. ஆடகமாடம் - திருவனந்தபுரம்; இரவிபுரமென்பாருமுளர்.

(௬0) ஏறினன் (௬எ) தாங்கினனாகிச் செல்வுழி.

௬௬. கூடையிற் பொலிந்து-குவித்த கையுடனே பொலிந்து; கூடைக்கை-இரட்டை ஒற்றைக்கை.

---

[1]. சிலப்பதிகாரம், கள: ௫-௬ ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

[2]. "நிலவுக்கதிரளைந்த நீள்பெருஞ் சென்னி" சிலப். உ௫: ௧௩எ.

[3]. ௫௫-எ. "பணியிய ரத்தைநின் குடையே முனிவர், முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே" புறநா. ௬.

[4]. "ஆடகமாடத் தரவணைக் கிடந்தோன்" (சிலப். ௩0: ௫௧); 'ஆடகமாடம்' இறை. சூ. உ௬-மேற்.

[5]. "கழுங்காடு மகளி ரோதை யாய்த்து,வழங்குதொடி முன்கை மலர வேந்தி, வானவன் வத்தான் வள்ளிய வனமுலை, தோணல முணீஇய தும்பைப் போந்தையொடு, வஞ்சி பாடுது மடவீர் யாமெனு, மஞ்சேர்ற் னெவிய ரந்தீட் பாணியும்" சிலப், உஎ: உ௪௫-௫0.

பி - ம்.) * 'பொருந்தியிலைஞ்சாச்' † 'மறையோராக்கிய வாகுதி நறும்புகை நலைசெழுமாலை நல்லகம்' ‡ 'அனம்பூந்தோன்' § 'ஏத்தநாடச் மடைநீதையர்'

# உ௬.—கால்கோட்காதை.

௫௬எ

எ0. [1] வாகை தும்பை மணித்தோட்டுப்
போந்தையோ

டோடை யானையி னுயர்முகத் தோங்க
வெண்குடை நீழலெம் வெள்வளை * கவர்ந்து
கண்களி கொள்ளுங் காட்சியை யாகென
மாகதப் புலவரும் † வைதா ளிகருஞ்
எறு. சூதரு நல்வலந் தோன்ற வாழ்த்த
• யானை வீரரு மிவுளித் தலைவரும்
வாய்வாண் மறவரும் வாள்வல னேத்தத்
தானவர் தம்மேற் றம்பதி நீங்கும்
வானவன் போல வஞ்சி நீங்கித்
அ0. ‡ தண்டலைத் தலைவருந் தலைத்தார்ச் சேனையும்
• வெண்டலைப் § புணரியின் விளிம்புசூழ் போத
மலைமுதுகு நெளிய நிலைநா டதர்பட
வுலக மன்னவ னொருங்குடன் சென்றுங்
காலும் புரவி யணித்தேர்த் தானையொடு
அரு. நீல கிரியி னெடும்புறத் திறுத்தாங்
காடியல் யானையுந் தேரு மாவும்
பீடுகெழு மறவரும் பிறழாக் காப்பிற்

பாடி யிருக்கைப் பகல்வெய் யோன்ற

னிருநில மடந்தைக்குத் திருவடி

யளித்தாங்

---

எ0 - எக. அரசர்சூடுவன யானைக்குஞ் சூட்டுதலின், வாகையும் தும்பையும் போந்தையோடு நின்யானைமுகத்து ஓங்கித் தோன்றவென்றார்.

(கூஅ) நாடகமடந்தையர் (எரு) காட்சியை யுடையை யாகவென வாழ்த்தாநிற்க.

எடு. நல்வலம் - களவெற்றி. எஅ. தானவர் - அசுரர்.

அ0. தார் - தூசிப்படை. அக. கடற்கரை அருகே போத.

அடு. நீலகிரி - ஒருமலை. அஅ. நடுவுநிலை விரும்புவோன்.

அஅ - கூ. சேரன் தானுள்நின்ற பூமிதேவிக்குத் திருவடியளித்து; அங்கே யானையினின் றிழிந்து கால்நிலந் தோயச்செய்தலால்..................................

---

[1]. "போந்தையொடு தொடுத்த பருவத்தும்பை", 'தோடார் போந்தை தும்பையொடு முடித்து" சிலப். உகூ: உக்கூ; உஎ: சுடு.

[2]. "சூதர் மாகதர் வேதா ளிகரொடு"(சிலப். டு: சுஅ); சூத ரேத்த மாகதர் நுவல, வேதா ளிகரொடு" மதுரை. கூஎ0-எக.

[3]. எஎ. "வான்மீக் கூற்றத்து வயவ ரேத்த" சிறுபாண். உகஉ.

[4]. "வெண்டலைப் புணரி", "வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப" புறநா. உ, கக.

(பி - ம்.) * 'கவருங்கண்' † 'வேதாளியரும்' ‡ 'தண்டத்தலைவருந்தலைச்சார்ச்சேனை § 'புணரிவிசும்புளும்போக'

கூஅ

௯0. கருந்திறன் மாக்க ளடியீ டேத்தப்
பெரும்பே ரமளி யேறிய பின்ன
ரியங்குபடை யரவத் தீண்டொலி யிசைப்ப
விசும்பியங்கு[௺] முனிவர் வியனில மாளு
மிந்திர திருவனைக் * காண்குது மென்றே
௯௫. யந்தரத் திழிந்தாங் கரசுவிளங் கவையத்து
மின்னொளி மயக்கு மேனியொடு தோன்ற

மன்னவ னெழுந்து வணங்கிநின் றோனைச்
[1] செஞ்சடை வானவ னருளினில் விளங்க
வஞ்சித் தோன்றிய † வானவ கேளாய்
௧00. மலயத் தேகுதும் வான்பே ரிமய
நிலயத் தேகுத னின்கருத் தாகலி
னருமறை யந்தண ராங்குளர் வாழ்வோர்
‡ பெருநில மன்ன காத்தனின் கடனென்
றுங்கவர் வாழ்த்திப் போந்ததற் பின்னர்
௧0௫. [2] வீங்குநீர் ஞால மாள்வோன் வாழ்கெனக்
[3] கொங்கணக் கூத்தருங் கொடுங்கரு நாடருந்
§ தங்குலக் கோதிய தகைசா லணியின
[4] ரிருள்படப் பொதுளிய சுருளிருங் குஞ்சி
மருள்படப் பரப்பிய வொலியன் மாலையர்

